# ஸத்ய விஜயம்

(ஓர் நாடகம்.)



வா. பி. வேங்கடராம சாஸ்திரி,
Formerly, தமிழ் பண்டிதர்,
செயின்டு ஜோஸப் காலேஜ், திருச்சிராப்பள்ளி.

ஆர். திருமலை அண்டு கம்பெனி,
114, பவழக்காரத்தெரு,
சென்னை.

# முகவுரை.

நம் முன்னோர்கள் தாங்கள் உலகத்துக்கு உபதேசிக்க எண்ணியிருந்த ஒவ்வொரு நீதியையும் கதாரூபமாக எடுத்துச் சொல்வதில் அதிக நன்மைபயக்கும் என்று கருதி அவசியமான தருமங்களை யெல்லாம் இதிகாசங்களுடன் கலந்து கூறியிருக்கிறார்கள். தருமத்தை உள்ளபடி தெரிந்து கொள்ளுதல் கேவலம் பேரறிவினர்க்கு மாத்திரம் சாத்திய மானது. ஏனையோர் கதாரூபமான வற்றையே விரும்புவார்கள். ஒவ்வொருவர் மனத்திலும் பசுமரத்தாணிபோலப் பதியும் படியான விஷயங்கள் கதாரூபத்தில் தான் காணப்படுகின்றன. வேதத்திற் சில பாகங்களும் ஸ்மிருதிகளும் "இதைச்செய் இதைச் செய்யாதே" என்று விதித்துக் கொண்டு மாத்திரம் செல்கின்றன. புராணங்களும் இதிகாசங்களும் "தருமம் செய்து உயர்ந்தவன் இவன்; அதருமத்தினால் அழிந்தவன் இவன்" என்று அவற்றைக் கதைகளாய்ச் சொல்லுகின்றன. இவைகளைப்புருஷன் என்று கூறுகிறார்கள். நாடகம் என்பது ஒருகதையைக் காலம் தேசம் சமயம் இவைகளுக்குத் தகுதியாக வேஷம் பூண்டு அனைவருக்கும் நடித்துக் காண்பிப்பது. இதைப்பெண் என்று புகழ்ந்து சொல்கிறார்கள். இதனால் புராணங்களைக் காட்டிலும் நாடகவழி இன்னும் கொஞ்சம் சிறப்புடைத்து என்னலாம்! ஏனென்றால், நாடகபாத்திரங்கள் சபையில் வந்து நடிக்கும் பொழுது அவர்கள் குணம், காரியசாதன விஷயத்தில் அவர்கள் கொள்ளும் தந்திரம் சமயங்களுக்குத் தகுதியாக அவர்கள் காண்பிக்கின்ற நடை நொடிபாவனை முதலிய தன்மைகள், கஷ்டத்தைப் பொறுத்

தல், சுகத்தை அநுபவித்தல் முதலிய பல விஷயங்கள் நமக்கு அநுபவமாகின்றன. முன்னோர்கள் நாடகங்களை ஏற்படுத்தி வந்ததற்கு இதுதான் காரணம். இனி இந்த நாடகத்துக்கு விஷயமா யிருப்பது அரிச்சந்திரன் சரித்திரம் "யாம் மெய்யாக் கண்டவற்றுள் இல்லை, எனைத்தொன்றும், வாய்மையின் நல்லபிற" என்ற அருமைத் திருக்குறளுக்கு இந்தியாவில் எடுத்துக்காட்டாக விளங்கினவர் அரிச்சந்திர மகாராஜர் என்பதை யாவரும் அறிவார்கள். இவர் கோசல நாட்டின் தலைநகராகிய அயோத்திக்கு அரசர். இரண்டாவது இந்த உண்மை விரதத்தை உண்மையில் நிறைவேற்றினவர் யுதிஷ்டிர சக்ரவர்த்தி. இவர் ஸ்ரீ மகாபாரதத்துக்குக் கதாநாயகராய் விளங்குகிறார். மனிதனாய்ப் பிறந்த ஒருவனுக்கு என்றும் இருக்க முடியாத உத்தமகுணங்கள் பலவும் இவருக்கு ஆபரணமாய் விளங்கின. யுத்தநடுவில் துரோணரைக் கொல்வதற்கு '𑌅𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌾𑌮𑌾 𑌹𑌤𑌃 𑌕𑍁𑌞𑍍𑌜𑌰𑌃' என்ற வசனம் இவரால் பட்டும் படாததுமாய்ச் சொல்லப்பட்டதென்று ஸ்ரீ மகாபாரதம் கூறுகின்றது. காலத்தினாலும் இந்தக் காரணத்தினாலும் இவர் அரிச்சந்திர மகாராஜருக்கு அடுத்த படியில் வைத்து எண்ண வேண்டியவர் ஆகின்றார். "உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் உளன்" என்ற மொழியின் வண்ணம் நம் தேசத்தில் அரிச்சந்திர சரித்திரம் தெரியாதமனிதன் எவனும் இருக்கவேமாட்டான். சத்தியம் இந்த மன்னவரைச்சேர்ந்து விளக்க மடைந்தது என்னும்படி இவர் ஒரு அவதாரபுருஷராய் விளங்கினார். இராமாயண கதாநாயகராகிய ஸ்ரீராமர் இவர் காலத்துக்கு எவ்வளவோ பிந்தியவர். தற்காலம் உலகத்தில் வழங்கி வரப்படுகின்ற பாஷை பலவற்றிலும் இந்தச் சரித்திரம் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றது. இந்த மன்

னவர் பெருமான் அடைந்த அழியாப் பெரும்புகழுக்குச் சந்திரமதி தேவியின் பெருங்குணங்களே காரணமென்று கூறலாம். ஏனென்றால், "மருவியகாதல் மனையாளும் தானும் இருவரும் பூண்டீர்ப்பி னல்லால், ஒருவரால் இல்வாழ்க்கை என்னும் இயல்புடையவான் சகடம் செல்லாது தெற்றிற்று நின்று" என்று இருக்கின்றதனால் தலைவன் குணங்கள் பலவும் தலைவிக்கும் பொருந்தி யிருந்தாலன்றித் தருமங்கள் விளக்க மடையமாட்டா. இவர் சற்று எறுமாறாக இருந்திருப்பாரேயானால் "புகழ்புரிந் தில்லிலோர்க்கில்லை, இகழ்வார் முன் ஏறுபோற்பீடு நடை" என்ற செருக்கு, விசுவாமித்திரரால் உண்டாக்கப்பட்ட கஷ்டம் நிறைந்த பரிசோதனைச் சாலையில் வேந்தர் பெருமானுக்கு உண்டாயிருக்க முடியாது. கணவன் சோர்வடைகின்ற சமயங்கள் தோறும் உண்மைமொழிகளை எடுத்துக் கூறித் தேற்றரவு செய்தவர் தேவியாகவே யிருக்கின்றனர். நாயக லக்ஷணம் மன்னவரிடத்தில் விளங்கியிருந்த வண்ணமே தேவியிடத்தில் நாயகி லக்ஷணம் அவ்வளவும் காணப்படுகின்றன. லோகிதாஸ்ய னிடத்தில் நல்ல பிள்ளைகளின் ஒழுக்கம் குடிபுகுந்திருந்தது. சத்திய விரதத்துக்கு எடுத்துக் காட்டாக இந்தச் சரித்திரம் நமக்குக் கிடைத்திருக்கின்றதனால் நானும் 'சத்திய விஜயம்' என்றே பெயர் புனைந்து எழுதலாயினேன். நடந்த 1907 வருடத்தில் என்னால் நடத்தப்பட்டு வந்த 'சுபோத பாரிஜாதம்' என்னும் மாதப் பத்திரிகை வாயிலாக இந்த நாடகம் சிறு சிறு பகுதிகளாய் வெளியிடப்பட்டு வந்தது. இது வடமொழியிலுள்ள சண்ட கௌசிகம் என்னும் நாடகத்தையும் அரிச்சந்திர காவியத்தையும் பெரும்பாலும் தழுவி எழுதப்பட்டிருக்கின்றது. தற்காலத்திய தமிழ்ப் புலவர்களுக்கு அபயம் அளித்து

ஆதரித்துவருகின்ற இந்த அகலிடம் எனக்கும் சிறிது இடம் கொடுத்து ஆதரிக்கும் என்ற நம்பிக்கையினுல் மகா கவிகளுக்கே யோக்கியமான இந்த அரியவேலையில் நான் இறங்கி யிருக்கிறேன். தமிழ்ப் பாஷையையாவது அரிச்சந் திர சரித்திரத்தையாவது நான் முன்னேயிலும் சீர்ப்படுத்த நினைந்து எழுதத் தொடங்கினேனில்லை. இயற்கையிலேயே அழியாப்புகழ் அடைந்த இவ்விரண்டும் அறியாமைத் தனத் தினுல் என்னுல் எங்கு ஒருகால் களங்கத்தை அடைந்து விடுமோவென்று அஞ்சுதல் அடைந்தவனுகவும் இருக்கி றேன். மேலும் இதிற் காணப்படும் குற்றங்களுக்கு மாத்தி ரம் நான் சொந்தக்காரனேயன்றிக் குணங்கள் எனக்குச் சிறி தும் சொந்தமாக மாட்டாது. சரித்திரத்துக்கும் பாஷைக் கும் அவை என்றும் இயற்கையில் உள்ளவைகள். இராக தாளங்கள் சேர்ந்த பாட்டுக்கள் இதில் ஒன்றும் அமைக் கப்படவில்லை யாயினும் இடையிடையே அருகிக்காணப் படுகின்ற சில மேற்கோள் பாடல்களை இசைவல்லவர்கள் வேண்டியவாறு இசையமைத்துப்பாடிக்கொள்ளலாம்; இதில் என் சிற்றறிவிற்கு எட்டாது விடப்பட்டிருக்கின்ற அரிய பெரிய விஷயங்களைக் கவனித்துப் படிக்கும் நண்பர்கள் எனக்கு அறிவிப்பார்களாயின் அவர்மாட்டு மிகுந்த நன்றி யறிதல் உள்ளவனுக விருப்பேன்.

இங்ஙனம்:
வா. பி. வேங்கடராம சாஸ்திரி.

---

# கதைச்சுருக்கம்.

---

அரிச்சந்திர மகாராஜர் அயோத்திக்கு அரசர்; இவர் சூரியவம்சத்தைச் சேர்ந்தவர்; மனைவியின் பெயர் சந்திரமதி; புத்திரன் லோகிதாஸ்யன். இந்திரசபையில் ஒரு சமயம் மண்ணுலகில் சத்தியவான் யார்'? என்ற வினா உண்டாயிற்று. அதற்கு வசிஷ்டர் 'என் சிஷ்யன் அரிச்சந்திரன்' என்று விடைபகர்ந்தார். விசுவாமித்திரருக்கு அந்த வசனம் பொறுக்காததனால் அவனைப் பொய்யன் என்று மறுத்து விட்டார். அதன் மீது அந்த இரண்டு ரிஷிகளுக்கும் வாக்கு வாதம் நடந்தது. முடிவில் விசுவாமித்திரர் அரிச்சந்திரனைப் பொய்யனாக்கிக் காண்பிக்காவிட்டால் தன் தவத்தில்பாதி அவனுக்குக் கொடுத்து விடுவதாகவும், வசிஷ்டர் அவன் பொய்யனானால் தான் மண்டையோட்டில் கள்ளை ஏந்திக் கொண்டு தெற்குத்திக்கைப் பார்க்கச் செல்வதாகவும் சபதம் செய்துகொண்டார்கள். பின்பு விசுவாமித்திரர் பூலோகத்துக்கு வந்து இராஜசபையில் அரிச்சந்திர மகாராஜர் சொல்லிய சில வசனங்களை முன்னிட்டுக் கட்டாயப்படுத்தி அவர் ராஜ்யத்தைத் வாங்கிக் கொண்டு தானதக்ஷிணை இலக்ஷம் வராகனையும் நாற்பது நாள்களுக்குள் தரவேண்டும் என்று அரசரைக் காசிபட்டணத்துக்கு அனுப்பி விட்டார். அரசர் மனைவி மகனுடன் செல்லும் வழியில் மிகுந்த கஷ்டங்களை அநுபவித்துக் காசிக்குச் சென்று ஐம்பதினாயிரம் பொன்னுக்குக் காளகண்டன் என்ற அக்னிபகவானிடத்தில் மனைவியையும் மகனையும் அடிமைப்படுத்தித் தான் வீரபாகு என்ற யமதர்மராஜனிடத்தில் ஒழிந்த ஐம்பதினாயிரம் பொன்னுக்கும் அடிமைப் பட்டுக் கடனைக் கொடுத்துச் சுடு

காடு காத்துக் கொண்டு வந்தார். பிராமணன் வீட்டில் அடிமையாயிருந்த லோகிதாஸ்யன் காட்டில் தருப்பம் சேகரிக்கச் சென்று சர்ப்பம் தீண்டி இறந்துவிட்டான். சந்திரமதீதேவி இருட்டில் மகனைத்தேடிக் கண்டுபிடித்துச் சுடுகாட்டுக்கு எடுத்துச் சென்று தகனம் செய்துகொண்டிருந்தாள். தனக்குக் கட்டணப்பணம் கொடுக்கப்படவில்லை யென்றும், அர்த்தராத்திரியில் திருட்டுத் தனமாய்ச் சுடவந்ததென்றும் அரசர் சிதையை உதைத்துத் தள்ளிவிட்டார். சந்திரமதீதேவியின் அழுகையினால் பிறகு உண்மைதெரிந்ததும் துக்கப்பட்டு முடிவில் மனைவியைக் கட்டணப்பணத்தைக் கேட்டு வாங்கிவரும் வண்ணம் அடிமை கொண்ட அந்தணர் வீட்டுக்கு அனுப்பினார். சந்திரமதீதேவி வீடுநோக்கிச் செல்கையில் வழி தெரியாமல் ஒரு சந்தில் இடறிவிழுந்து ஆங்கு மின்னல் உதவியினால் சிறுவன் ஒருவன் இறந்திருக்கக்கண்டனள். அவன் தன் மகன்போல் இருந்ததனால் அவனை யாவரும் காணும் வண்ணம் ஒரு பெரிய தெருவில் விட்டுச் செல்லலாம் என்று எடுத்து வருகையில் காவலாளிகள் 'அவன் அரசன் சிறுவன் என்றும், அவளே கொலைசெய்தவள் என்றும்' கட்டாயப்படுத்தி அடித்து ஹிம்சித்து அழைத்துக் கொண்டு போய் அரசனிடம் விட்டார்கள். அரசன் விசுவாமித்திரர் மாய்கையில் மயங்கிப் பெண் என்றும் பாராமல் தேவியைக் கொலை செய்யும்படி தீர்ப்புச்செய்து விட்டான். சந்திரமதீதேவி வீரபாகு வசம் ஒப்புவிக்கப்பட்டதும் அவன் அரிச்சந்திர மகாராஜரைக் கொலை செய்யும்படி கட்டளையிட்டுச் சென்றான் அரசர் மனைவியைக் கொல்ல வாளை வீசுகையில் விசுவாமித்திரர் ஓடோடியும் வந்து தடுத்துத்தன் செய்கையினால் நேர்ந்த அவ்வளவையும் ஒப்புக்கொண்டு லோகிதாஸ்யன் காசிரா

ஜன் மகன் இருவரையும் பிழைக்கச் செய்து இந்திரசபையில் விருத்தாந்தத்தை அவருக்குத் தெரிவித்து இந்திரன் வசிஷ்டர் முதலியவர்களைக்கொண்டும் அதை நிச்சயப் படுத்தினார். பின்பு விமானத்தில் ஏறிக்கொண்டவர்களாய் அனைவரும் அயோத்திக்குச் சென்றார்கள். ஆங்கு விமர்சையுடன் அரிச்சந்திர மகாராஜருக்குப் பட்டாபிஷேகம் நிறைவேற்றப்பட்டது. இதனுடன் நாடகம் முடிவடைகின்றது. நாடகம் நிகழ்ந்த விடம் பெரும்பாலும் அயோத்தி, நைமிசம், காசி இவைகள்.

---

# நாடக பாத்திரங்கள்

புருஷர்கள்.

| | | |
|---|---|---|
| அரிச்சந்திரன் ... | நாடகத்தலைவன். | அரசன். |
| சத்தியகீர்த்தி<br>சுருதகீர்த்தி | அரிச்சந்திரன் மந்திரிகள். | மந்திரி. |
| வசந்தக்ன் ... | விதூஷகன். | அந்தணன். |
| லோகிதாஸ்யன் ... | நாடகத்தலைவன்மகன். | அரசகுமாரன். |
| விக்கிரமகேது | அரிச்சந்திரன் சேனாதிபதி. | படைத்தலைவன். |
| விசுவாமித்திரன் | அரிச்சந்திரனைக் கஷ்டப்படுத்தியவன். | தபஸி. |
| காத்யாயனன்<br>சுப்ரதீபன் | விசுவாமித்திரன் சிஷ்யர்கள். | அந்தணர். |
| காளகண்டன் | சந்திரமதியையும் மகனையும் அடிமைகொண்டவன். | அந்தணன் |
| பிரதாபருத்திரன் | சந்திரமதிக்குச் சிரசாக்கினை விதித்தவன். | காசியரசன். |
| வீரபாகு | அரிச்சந்திரனை அடிமைகொண்டவன். | பறையன். |
| கறுப்பன்<br>பெரியண்ணன்<br>முனியன்<br>வீரன் | காசிப் பட்டணத்தின் தலையாரிகள். | காவற்காரர். |

| | | |
|---|---|---|
| சோமசுந்தரன்<br>நீலலோகிதன்<br>வசு சேகரன் | லோகிதாஸ்யனுடன் காட்டுக்குச் சென்றவர்கள். | அந்தணப் பிள்ளைகள். |

பெண்கள்.

| | | |
|---|---|---|
| சந்திரமதி | ... நாடகத்தலைவி. | அரசி. |
| பந்துமதி<br>பிரியம்வதை | } சந்திரமதியின் சகிகள். | அந்தணப் பெண்கள். |
| குமுதவதி<br>சாருமதி | } விசுவாமித்திரன் சிஷ்யைகள். | பரிசாரகப் பெண்கள். |
| காந்திமதி | ... காலகண்டன் மனைவி. | அந்தணி. |

சேவகன் வேலைக்காரன் முதலியவர்கள் ஆங்காங்குக் காணப்படுவார்கள்.



சிவமயம்

# ஸத்ய விஜயம்.

## முதல் அங்கம்.

### களம். 1.

இடம் :—இமயமலைச்சாரல்.

காலம் :—மாலை.

[விசுவாமித்திரன் ஆழ்ந்தயோசனையுடன் பிரவேசிக்கிறான்.]

விசுவாமித்திரன் :—[உலாவுகிறான்.] ஆ! என்ன சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டுவிட்டோம்; ஏன் சென்றோம் இந்திரசபைக்கு? ஒப்புக்கொண்ட காரியம் நிறைவேற்ற முடியுமா? ஏன் முடியாது? "உலையா முயற்சி களைகணு ஊழின் வலிசிந்தும் வன்மையும் உண்டு." என்று எழுதியவர் அறிவில்லாதவரா? [யோசிக்கிறான்.] நம் தொழில் ஒவ்வொன்றும் அளவை விழுங்கிவிடுகின்றது; விழுங்கினால் என்ன? பகீரதன் காரியமும் அளவை விழுங்கியதுதான்; [உலாவுகிறான்.] சத்துருவும் சாமானியன் அல்லன்; தபஸ்வி; இதுகாறும் என்ன புரட்டிவிட்டான்? திரிசங்கு ஒருவனே போதும்; சண்டாளன், சண்டாளன்; சுவர்க்கம், உடலுடன்; எவற்றில் வெற்றி? பிள்ளைகளைக் காப்பாற்றிக் கொண்டவற்றிலா? [யோசிக்கிறான்.] பொறை என்னும் வஜ்ரகவசம் பூண்டவன்; ஆண்மைக்கும் உள்ளதுதான்; என்ன உயர்வு? தபோதனம் இருக்கையில் இந்த வுலகில் அரியது என்ன? [கையைக்கட்டிக்கொண்டு] இவனு? சீ! மசகமாத்திரம்; நமக்கு

ஒன்றும் சிறிது இமைக்கவில்லையே; ஏன் இமைக்கவில்லை? இமைத்தே யிருக்கிறான்; விசுவாமித்திரன், மலையைப் போல எதிரில் இருக்கையில், எட்டும் இரண்டும் எண்ணத் தெரியாத ஒருவனை, சத்திய விரதனும்; என்ன துடுக்கு;

“பாருக்கொருவன், பரதார சகோதரன், வெம் போருக்கொருவன், புகழுக்கும் மறைப்பொருட்கும் நேருக்கும் விடாம். மனு நூல் நெறிக்கும் பொறைக்கும் ஆருக்கும் மிக்கான் அரிச்சந்திரன்.”

என்ன புகழ்ச்சி; நசுக்கிக் கசக்க வேண்டாமா? புத்தி யற்றவன். [மூக்கின்மீது விரலைவைத்து யோசித்துக்கொண்டு] இதுவே சரி; எப்படி? ஆம்; முடித்துவிட்டோம்; நொடி! நொடி!! [கையை நொடிக்கிறான்.] வசிஷ்டா! மண்டை யோடு; தென்திக்கு; அடே, கள்! கள்!! கள்!!! வந்து விட்டேன்; [பூமியை உதைத்துக்கொண்டே] வந்துவிட்டேன்; [ஒரு துரும்பை எடுக்கிறான்.] இந்தத் துரும்புதான்; நிஜம், நிஜம்; விசுவாமித்திரன் கோபத்தைக் கௌர விதியும் நடுங்கு வான்; [பூமியைப் பார்த்துக்கொண்டு யோசிக்கிறான்.] ஆம்; நிறைவேற்றுவது எளிதன்று; என்றும் அசாத்தியமாகிய ஒன்றில், இல்லை, இல்லை; சாத்தியம்தான்; [உலாவுகிறான்.] சூரியனுக்கும் களங்கம் உண்டு; எப்பொழுது? கிரஹண காலங்களில்; தவறிப்போய் விட்டது; வாய்மையை விரதமாகப் பூண்டவன்; வணங்கி வேண்டினும் இணங்கி வாரான்? என்ன? இணங்கி, வாரான்; நாம்யார் விசுவாமித்திர னன்று; [யோசிக்கிறான்.] ஆம், சூரிய குலத் தரசன்; இருந்தால் என்ன? அடே! நீ யோக்கியனாக, அல்ல, அல்ல; சத்துருவின் சிஷ்யன்; அந்தப் புழுக்கை வசிஷ்டனை; பெற்ற தந்தையைப் பறையன் ஆக்கியவனை; எனக்குச் [பூமியை உதைக்கி

றுன்.] சத்துருவை; அதன் பலன் கைகூடி வரப் போகின்றது; வந்துவிட்டது;

[உலாவுகிறுன்; சிஷ்யர்கள் இருவரும் ஒரு புறமாய்ப் பேசிக்கொண்டு வருகிறுர்கள்.]

காத்யாயனன் :—சுப்ரதீபா! சந்தியா காலத்தையும் மறந்து குருசிரேஷ்டர் என்னவோ யோசித்துக்கொண்டிருக்கிறுரே?

சுப்ரதீபன் :—இருந்தால் என்ன? சூரியபகவான் சமுத்திர ஸ்நானத்துக்குச் சென்றுவிட்டார்; சந்துக்கள் மனத்தைப் போல அக்னி சிறிதும் புகையில்லாமல் சுத்தமாய் ஜ்வலிக்கின்றது; அக்னிகாரியம் அவசியம்.

காத்யா :—ஆம்; ஒரு சமயம் 'என் அப்பொழுதே தெரிவிக்கவில்லை' என்றும் கோபிப்பார்; சமித்து முதலிய உபகரணங்கள் சித்தமாயிருக்கின்றன; தெரிவிக்கலாம் வா!

விசுவா :—எவற்றிலும் உயர்ந்த பொய்க் குற்றம்; அடே, வசிஷ்டா! எவ்வளவு அநர்த்தங்களுக்கு இடம் வைத்துவிட்டாய்! உன் புத்திரர்களை, அல்ல, அல்ல; உன்னையே கொன்றிருக்கவேண்டும்.

சு ர :—ஆதித்தன் தேஜஸை அக்னிபகவான் கிரகித்துக் கொள்கிறுர்; சந்தியாகாலதூதன் நிசாபதியின் வரவைத் தெரிவிக்கிறுன்.

விசுவா :—இப்பொழுது செய்யவேண்டிய தென்ன,? ஆம்; பெற்றுக் கொள்ளவேண்டும்.

காத்யா :—[தனக்குள்.] பிரமாதமாக வல்லவோ இருக்கின்றது. [வெளியில்.] அடியேன் காத்யாயனன்.

விசுவா :—[திடுக்கிட்டுத் திரும்பி] ஆ, நீயா! என்ன விசேஷம்?

காத்யா :—முனிவர்கள் அக்னிகாரியத்தில் அதி தீவிர மா யிருக்கிறார்கள்.

விசுவா :—[மேற்கில் பார்க்கிறான்.] ஓ! இப்பொழுது சந்தியாகால மாய்விட்டதோ! சரி; காரியாவசரத்தினால் யோசித்துக்கொண்டே யிருந்துவிட்டேன்.

"மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்."

சுப்ரதீபா! மரவுரியை எடுத்துவா! நாங்கள் கங்கைக்குச் செல்கிறோம்.

சுப்ர :—அப்படியே. [யாவரும் மறைகிறார்கள்.]

## களம். 2.

இடம் :—அந்தப்புரத்தின் உட்சோலை.

காலம் :—மாலை.

[பிரியம்வதையும் பந்துமதியும் பிரவேசிக்கிறார்கள்.]

பிரியம்வதை :—பந்துமதி, இதோபார்! இந்தக் குருக்கத்தியின் மீது படர்ந்தேறிய மல்லிகைக் கொடியை.

பந்துமதி :—ஆம், அன்பரை இறுகத் தழுவிய அங்கனைகளை ஒத்திருக்கின்றது.

பிரியம் :—இயற்கைப் பொருள்களுக்கும் இத்தனை அன்பு வேண்டி யிருக்கின்றது. [பெருமூச்செறிகிறாள்.]

பந்து :—வண்டுகள் படிந்து பாடுவதனால் சிறிது சிறிதாக முறுக்குடைகின்ற அரும்புகள் எவ்வளவு அழகாய் விளங்குகின்றன.

பிரியம் :—அவை யாசகர்களது இரப்பு மொழிகளால் முகமலர்கின்ற பெரியோர்களைக் காட்டுகின்றன.

பந்து :—சீ! அப்படியல்ல; 'இதம் பேசிப் பணியும் காதலர்களுடைய அன்பு மொழிகளால் சிறிது சிறிதாக ஊடல் நீங்கப் பெறும் பருவமங்கைகளைக் காட்டுகின்றன' என்றுசொல்.

பிரியம் :—[தனக்குள்.] அந்த இன்பகாலம் நமக்கு எவ்வண்ணம் சித்திக்கும். [வெளியில்.] அந்த மலர்மீது மற்றொரு புதியவண்டு செல்லுகின்றது. [அதுசாய்ந்துவிடுகின்றது.]

பந்து :—இப்பொழுது பார்! அந்த மலர் இடம் கொடுத்ததா?

பிரியம் :—ஆமடி! வளைந்து சாய்ந்துவிட்டதே!

பந்து :—பின்னை, குலப் பெண்கள் தங்களை எத்தனை பெயருக்கு ஒப்புக்கொடுப்பார்கள்?

பிரியம் :—இந்தக் குயிலோசை, நெஞ்சை—இவ்வளவு கோபம் என்ன

பந்து :—என்ன, சம்பந்தம் இல்லாமல் பேசுகின்றாயே?

பிரியம் :—[திடுக்கிட்டு] இல்லையம்மா; இன்றைக்கு—[மயங்குகிறாள்.]

பந்து :—என்ன, மேல் தோன்றவில்லையோ? உடம்பு ஒருவாறு யிருக்கின்றதென்று சொல்லேன்? சரி, தெரிந்துவிட்டது; தேவி சந்திரமதி காத்துக்கொண்டிருப்பார்; மலர் பறிக்கலாம் வா!

பிரியம் :—[தனக்குள்.] எப்படி மறைத்தாலும் முடியவில்லையே ;[வெளியில்.] ஆம்; பூஜாகாலமாகின்றது. [இருவரும் மறைகிறார்கள்; வசந்தகன் பிரவேசிக்கிறான்.]

வசந்தகன் :—[உலாவுகிறான்.] சூரியன் ஒளிக்கதிர்கள் சென்றறியாத விடத்திலும் நமது சக்கிரவர்த்தியவர்கள் புகழ்க்கதிர்கள் விளக்கம் செய்கின்றன ; ஸத்ரயாகமும் குறைவற—ஆம், அபசகுனம் ஒன்றுமாத்திரம் காணப்பட்டது ; அதனால் என்ன? சத்திய விரதர், குணபூஷணர், ஒரு குடைக்கீழ் ஆள்பவர் ; அவரை என்ன செய்யும்? [யோசிக்கிறான்.] யாகாரம்பம் முதல் இந்த உபவனத்தில் வர ஒழிய

வே யில்லை; சக்கிரவர்த்தியவர்கள்தாம் மந்திரி சத்தியகீர்த்தியுடன் சம்பாஷித்துக்கொண்டிருக்கிறார்; அதுகாறும் உள்ளே சென்று உலாவிவருவோம்; [உலாவுகிறான்.] வசந்த காலத்தின் அழகே யழகு; [1] பிரமரகானத்துடன் [2] மந்த மாருதம் [3] லதைகளை நடிப்பிக்கின்றது எவ்வளவு சுந்தரமாய் விளங்குகின்றது! [4] மகர கேதனன் வருகையைத் தெரிவிக்கும் [5] பிகத்துவனி விரகதர்களுக்கும் விரகக் கிலேசத்தை உண்டுபண்ணுகின்றது; ஆம்;

"மனிதர் வெங்கோடை தீர்க்கும் வசந்தமென் காலும்வேறு
துனிதவிர் இளங்கால்வேண்டும் சோலையும் சோலைவேண்டும்.
புனித நீர்த் தடமும் வேறோர் புதுமலர் ஓடைவேண்டும்.
பனிதரு மதியும் வேறு பான்மதி வேண்டும் காலம்."

இங்கு விளையாடுகின்ற மான் மயில் முதலிய சாத்விகப் பிராணிகள், மனோகரியின் நினைவை மனத்தில் பதியவைக்கின்றன; மலர்கள் வாசனை [யோசிக்கிறான்.] ஆ! அந்தப் பெண்கள் நாயகியின் அன்பு நிறைந்த கடைக்கண்பார்வை ஒன்றே, அவ்விந்திர பதத்தையும் சொந்தமாக்கி விடும்.

"தாம் வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்?
தாமரைக் கண்ணான் உலகு."

என்பது பொய்யன்று; [உலாவுகிறான்.] கந்தர்ப்பன் கொலுக்கூடம் போலும் விளங்குகின்ற, இந்தக் கொடிவீட்டில், [உற்றுக் கேட்கிறான்.] அங்கு யாரோ இருவர் பெண்கள் குரல் கேட்கின்றதே! [நிதானிக்கிறான்.] யாவரா யிருக்கலாம்; [உற்றுப் பார்க்கிறான்.] இதேது! 'கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்துவிட்டது' என்னை ஆட்கொள்ள வந்த

1. வண்டின்பாட்டு. 2. தென்றற்காற்று. 3. கொடி. 4. மன்மதன். 5. குயில்.

சீமாட்டி [சாய்ந்து கேட்கிறான்.] என்னவோ சம்பாஷிக்கிறார்கள்; இங்குமறைந்திருக்கலாம்; [மறைகிறான்.]

[பந்துமதியும் பிரியம்வதையும் பிரவேசித்துக்கொண்டே]

பிரியம் :—என்னவோ அப்படித்தான் சொல்லிக் கொண்டார்கள்.

பந்து :—தேவி சந்திரமதியின் முகத்தைப் பார்த்தாயா ?

"அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்."

என்பது நிச்சயமாய் விளங்குகின்றது.

பிரியம் :—ஆம்! [1] யாகாவஸானத்தில் என்னவோ அமங்கள [2] ஸூசகம் காணப்பட்டதாம்; இப்பொழுது செய்யவிருக்கும் கௌரீபூஜையும் அதன் சாந்தியை முன்னிட்டதுதான்.

பந்து :—தெரிந்துவிட்டது; [3] வாயநம் தரவேண்டும் என்றதும் இப்பொழுதுதான் நினைவிற்கு வருகிறது! அன்று உன்னால் தோதகம் கொடுக்கப்பட்ட செவ்வசோகைப் பார்! எவ்வளவு சுந்தரமாய் விளங்குகின்றது !

பிரியம் :—இதன் கீழ்த்தான் வசந்தபூஜை நிறைவேற்ற வேண்டுமாம்; தேவி சொல்கிறார்.

பந்து :—ஆம்; அசோகமல்லவா ! பிரியம்! என்னிடத்திலும் அவநம்பிக்கையா ? சொல்லமாட்டேன் என்கிறாயே ? இனிக் கேட்பதற்கு எனக்கே வெட்கமாயிருக்கின்றது.

பிரியம் :—அதுதான் முந்தியே சொல்லிவிட்டேனே ஜ்வரம் என்று.

பந்து :—என்ன மறைத்துப் பேசுகின்றாயே ; நீ மறைக்கின்றாய் ; உன் முகம் அதற்கு விரோதியாயிருக்கின்றது.

---

[1] யாகத்தின் முடிவு. [2] குறிப்பு. [3] காணிக்கை.

பிரியம் :—[புன்சிரிப்புடன்] தெரிந்துகொண்ட பின்பு கேட்பானேன் ?

பந்து :—எங்கு ? வியக்தமாய் விளங்கவில்லையே !

**வசந்தகன் :**—[பின்னால்.] உன் பெயரை நிலைக்கச்செய்ய வேண்டும் ; நான் இப்பொழுது[1] சாதகவ்ருத்தியை அவலம்பித் திருக்கிறேன்.

பிரியம் :—[தலை கவிழ்ந்தவண்ணம் நிலத்தைக் கீறிக்கொண்டே] அவர்தான் இங்கு வந்திருக்கின்றாரே ; இந்த மலர்கள் எல்லாம் அவர் வைபவம்தான்.

வசந்த :—[பின்னால்.] யார் அவன் ? நம்மைத்தான் சொல்லுகின்றாரோ ? [நன்றாய் மறைகிறான்.]

பந்து :—யார் மன்மதனையா ?

பிரியம் :—அல்ல ; அவன் அநங்கனாயிற்றே ? அவன் தோழரை—

வசந்த :—[பின்னால்.] நான் இப்பொழுதுதான் தன்யனாயினேன் ; காதற் கிளியே ; நீ இப்பொழுது முக்காலும் பிரியம்வதைதான் ; உன்னால் விரும்பப்பட்டதனால் பூஜ்யனாகிய வசந்தகன், இதோ [மார்பைத் தட்டுகிறான்.] இந்தப் பூம்புதரில் ஒளிந்துகொண்டிருக்கிறான்.

பந்து :—ஓ ! வசந்தகனா ! தெரிந்துவிட்டது.

பிரியம் :—[தலைகவிழ்கிறாள்.]

பந்து :—பிரியம் ! உன் பிறப்புப் பயன் பெற்றது ; நல்ல நாயகனையே விரும்பியிருக்கிறாய் ; தேவி சந்திரமதியும் 'வசந்தபூஜை முடிவில் உனக்கு மங்களமுண்டாகும்' என்று சொல்லியிருக்கிறார்.

---

1. சாதகப்பறவை வாயைத் திறந்துகொண்டு மழைத்துளிக்கு அண்ணாந்து கிடக்கும்.

பிரியம் :—பந்துமதி! அதோ பார்! அந்தக் கலைமான் பூஞ் செடிகளைப் பங்கப்படுத்துகின்றது.

பந்து :—[திரும்பிப்பார்த்து] தேவி கோபிப்பார்; நான் சென்று துரத்தி வருகிறேன்; சீக்கிரம் மலர் பறித்து வா!

பிரியம் :—நானும் வருகிறேனே?

பந்து :—வேண்டாம்; இதோ வந்துவிட்டேன். [செல்கிறாள்.]

வசந்த :—[பின்னால்.] இதுதான் நல்ல சமயம்; இப்பொழுதே வெளிப்படவேண்டும்; [வெளியே வருகிறான்; பிரியம்வதை திடுக்கிடுகிறாள்.] பிரியம்வதே! என்ன இவ்வளவு பயம்?

பிரியம் :—[மௌனமாயிருக்கிறாள்.]

வசந்த :—உன் அன்புக்குப் பாத்திரனாகிய வசந்தகன் சமீபத்தில் வந்து நிற்கும் பொழுதும் மௌனம் சாதிப்பது தருமமா? [கரத்தைப்பற்றுகிறான்.]

பிரியம் :—[விலகிக்கொண்டவண்ணமே.] இப்படிப் பற்றுவது அழகன்று; விட்டுவிடுங்கள்; பந்துமதி கண்டால் என்ன நினைப்பாள்?

வசந்த :—என்ன நினைப்பாள்? மனைவி யென்றுதான் நினைப்பாள். [கரத்தை முத்தமிடுகிறான்.] உண்மையில் நேசிக்கிறாயென்று நம்பக்கூடவில்லையே?

பிரியம் :—[புன்சிரிப்புடன்.] ஏன் அப்படி மொழிகின்றீர்கள்? நிரூபிப்ப தெப்படி? அது முகந்து அல்லது நிறுத்துக் காட்டும் பண்டமாகுமோ? [ஒரு முத்தமிட்டு] இதற்குமேல் எங்ஙனம் காண்பிக்க முடியும்?

வசந்த :—பிரியம்! உன் புத்திக்கு மெச்சினேன்; [முத்தமிடுகிறான்.]

பிரியம் :—ஆர்யபுத்திரா! வசந்தபூஜையில்தான் என்னைத்தூரப் போகின்றீர்களே; தேவி கோபிப்பார்; பூஜாகால மாகின்றது.

வசந்த: —சரி, சென்று வா! அரிஷ்டசாந்திக்கு என்னையும் வரச்சொல்லி யிருக்கிறார் ; நானும் வரவேண்டும்; [இருவரும் முத்தங்கொண்டு பிரிகிறார்கள்.]

## களம். 3

இடம் :—இராஜசபை.

காலம் :—நண்பகல்.

[அரசன் மந்திரி முதலியவர்கள் கொலு வீற்றிருக்கிறார்கள்.]

சத்தியகீர்த்தி :—நமது சேனையில் ஒருபகுதியை, உத்தர கோஸலத்தின் வடக்கெல்லையில் நிறுத்தவேண்டுமென்று சேனாபதி விக்ரமகேது அவர்கள் எழுதியிருக்கிறார்கள்.

அரிச்சந்திரன் :—என்? ஸரயுநதிக்கரையில் தொடங்கிய கட்டடங்கள் இன்னமும் முடியவில்லையா ?

சத்திய :—முடிந்துவிட்டன ; அந்தப் படைவீட்டில் ஒருபகுதி இருந்தாற் போதுமாம்.

அரி :—வடக்கில் படை எதற்கு? ஸத்ர யாகத்தில்தான் அனைவரும் வணங்கிவிட்டார்களே; திறை அனுப்பாதவர்கள் யாரேனும் உண்டோ ?

சத்திய :—அப்படி ஒருவரும் இல்லை ; 'நாட்டில் திருவிழா வானதால் வேள்விக்கு வர முடியவில்லை' என்றும், 'பகுதிப் பணத்தைப் பின்னிட்டு அனுப்புகிறேன்' என்றும், சீனதேசத் தரசர் எழுதியிருந்தார் ; அதுவும் இன்று காலை வந்துவிட்டது.

அரி :—அவன் எப்பொழுதும் இப்படியே செய்கிறான் ; புத்தியற்றவன் ; முந்தியும் ஒரு சமயம் அனுப்பாது நிறுத்திவிட்டான் ; 'இஷ்டமில்லாவிடின் போர்க்குப் புறப்படலாம்'

என்று அரசனும் பின்பு, 'இல்லை, அதிக ஜோலியாயிருந்த தால் மறந்துவிட்டேன், மன்னிக்கவேண்டும்' என்று எல்லா வற்றையும் கட்டி யனுப்பினேன்.

சத்திய :—அவருக்குச் சண்டைபுரியும் எண்ணமேது? அப்படி யொன்றும் இல்லை; அநவரதமும் அந்தப்புரவாசமே அமிர்தமாய் விட்டதாம்; அயநத்துக்கு ஒரு முறைகூட அரியணை ஏறுவதில்லையாம்; அரசு முழுவதும் அலங்கோல மா யிருக்கின்றதென்றும், தொழிலாளிகள் தாங்க முடியாமல் குடிகள் யாவரும் கூக்குர லிடுகிறார்கள் என்றும், மந்திரி சுருதகீர்த்தி யவர்கள் சொல்லுகிறார்கள்; [சுருதகீர்த்தி எழுந்து வணங்குகிறான்.]

அரி :—சுருதகீர்த்தி! நெடுநாளாயிற்று; எப்பொழுது வந்தீர்? சென்ற விடங்களில் விசேஷம் ஏதேனும் உண்டா?

சுருதகீர்த்தி :—நேற்று மாலைதான் வந்தேன்; சத்திய கீர்த்தி யவர்கள் சொன்னதை யல்லாமல் மற்றொன்றும் காணப்படவில்லை.

அரி :—நீர் சொல்லியது எப்படி? கண்டதா, கேட்டதா?

சுருத :—நான் அந்தப் பட்டணத்திலேயே ஒருவாரம் இருந்தேன்.

அரி :—பின் அங்ஙனம் நேரிடுவதற்குக் காரணம்?

சுருத :—அரசர் கவனிக்காத குறைவுதான்.

அரி :—மந்திரி ஏன் கவனிக்கக் கூடாது?

சுருத :—அவரையும் அவ்வளவாய் வியந்து கொள்வதற்கில்லை; சிறிது ஒழுங்கீனமும் உள்ளவராய்க் காணப்படுகிறார்.

அரி :—எப்படி?

சுருத :—பூகர்த்துவ சாஸ்திரி யொருவர் தன்னால் கண்டுபிடிக்கப்பட்ட ஆகாயயந்திரம் ஒன்றை உறுதிப்படுத்துவதற்குக் கொஞ்சம் பொருளுதவியை விரும்பி மூன்று மாதம் ஆயிற்றாம்; அதற்கு அந்த மந்திரி 'இப்பொழுது முடியாதென்றும், பிறிதொரு சமயம் அந்த முயற்சியை நிலைநிறுத்தப்படும் என்றும்' கட்டளை யிட்டுவிட்டார். இது நான் பிரத்யக்ஷத்திற் கண்டது.

அரி :—இல்லை என்பதற்கா மாதம் மூன்று ?

சுருத :—ஆம், அவர் விண்ணப்பித்துக் கொண்டது விருஷப ரவியாம்; நான் அங்குச் சென்றது சிங்கரவி; அப்பொழுது தான் முடிவாயிற்று.

அரி :—இவ்வளவு அநாகரிகமாய் விட்டால் சிரத்தை யெடுத்துக்கொள்ள வேண்டியது தான்; சத்தியகீர்த்தி!

சத்திய :—அடியேன். [எழுந்து நிற்கிறான்.]

அரி :—அங்குப் பிரதிநிதி யொருவரை நிறுத்த உத்தேசிக்கிறேன்; உமக்கென்ன தோன்றுகின்றது ?

சத்திய :—ஆம்; ஏற்படுத்தவேண்டும்; இந்த விஷயத்தை இன்று மந்திரிகளுடனும் யோசித்தேன்.

அரி :—என்ன சொல்கிறார்கள் ?

சத்திய :—ஏற்படுத்தவேண்டும் என்று தான்.

அரி :—யாவரை அனுப்பலாம் ? [யோசிக்கிறான்.]

சத்திய :—சமுகத்துக்குத் தெரியாதவர் யாரிருக்கின்றார்கள் ?

அரி ; நம் தருமபாலவர்மா—

சத்திய :—ஆம் தகுந்தவர் தான்; நிரம்பிய அறிவினர்; அநுபவம் உள்ளவர்; முந்தியும் சாளுவத்துக்குப் பிரதிநிதியா யிருந்து நல்ல புகழ் அடைந்திருக்கிறார்.

அரி :—அந்த அரசனுக்குத் தெரிவித்து விடும்.

சத்திய:—தெரிவிக்கிறேன் ; சேனுதிபதி யவர்களுக்கு என்ன எழுதலாம் ?

அரி :—உத்தர கோஸலைத்தில், நம் சேனைகளில் ஒரு பிரிவு [யோசிக்கிருன்.] இருந்தால் இருக்கட்டுமே? எல்லாவற்றிற்கும் மந்திரிகள் என்ன சொல்கிருர்கள் ?

சத்திய :—நல்லதென்றுதான் அபிப்பிராயப் படுகிருர்கள். [தூத ஞெருவன் பிரவேசித்து வணங்குகிருன்.]

அரி :— ஆயின் அவ்வண்ணமே செய்வதற்கு எழுதி

தூதன் :—கடைமுகவாயிலில் கௌசிக முனிவர் எழுந்தருளியிருக்கிருர் ; கட்டளைக்கு—

அரி :—கௌசிகரா? உடனே வரச்செய். [வணங்கிச் செல்கிருன்.] சத்திய கீர்த்தி ! நீரும் சென்று அழைத்து வாரும்.

சத்திய : — மகாபாக்கியம். [செல்கிருன்.]

அரி:—[தனக்குள்.] யாகத்திற்கும் அழைக்கவில்லை; திரும்பிச் செல்கின்றவரையிலும் ஜாக்கிரதையா யிருக்கவேண்டும். [வெளியில்.] சுருதகீர்த்தி! உபசரணை வஸ்துக்களைச் சித்தப் படுத்தும்.

சுருத :—அவ்வண்ணமே. [செல்கிருன்; சத்தியகீர்த்தியுடன் விசுவாமித்திரர் இரண்டு சிஷ்யர்கள் பின்தொடரப் பிரவேசிக்கிருர்; அரசன் முதலியவர்கள் கைகூப்பிக்கொண்டு நிற்கிருர்கள்.

அரி :—அடியேன் அரிச்சந்திரன். [வணங்குகிருன்.]

விசுவாமித்திரன் :—தீர்க்காயுஷ்யமஸ்து ; சமஸ்த சன்மங்களப் பிராப்திரஸ்து.

**அரி** :—வரவேண்டும் ;இப்படி, இப்படி. [ஒரு ஆசனத்தைக் காட்டுகிருன்; விசுவாமித்திரன் உட்காருகிருன்.] என் பிறப்பு

இன்றுதான் பயன் பெற்றது; [கரத்தைக் குவித்துக்கொண்டு சிஷ்யர்களை நோக்கி] பூஜ்யர்களே! எழுந்தருளுங்கள்: [ஆசனங்களைக் காட்டுகிறான்.]

சிஷ்யர்கள்:—அப்படியே; [உட்காருகிறார்கள்; அரிச்சந்திரன் வணக்கத்துடன் நிற்கிறான்.]

விசுவா:—ஆசனத்தில் இரு; [சபையை நோக்கி] நீங்களும் இருங்கள். [அரசன் முதலியவர்கள் உட்காருகிறார்கள்.]

அரி:—தவங்கள் யாவும் நிர்விக்னமாய் நிறைவேறி வருகின்றனவா?

விசுவா:—ஆம்; நிறைவேறுகின்றன; சமீபத்தில் என்னவோ யாகம் ஒன்று நடந்ததாய்ச் சொல்லிக்கொண்டார்கள்; என்ன யாகம்?

அரி:—[தனக்குள்.] உத்தேசித்தது சரியாய்விட்டது; [வெளியில்.] ஸத்ரயாகம் ஒன்று நடந்தது; சந்நிதானத்துக்கும் தெரிவிக்க வேண்டியவன் தான்; பல காரியங்களின் தொந்தரவால் மறதி மேற்கொண்டுவிட்டது; மன்னிக்க வேண்டும்.

விசுவா:—ஓ! ஸத்ரயாகமா? அவன் சண்டாளனாயிருந்தான்; அப்பொழுது வேண்டியிருந்தது; உனக்கேன் விசுவாமித்திரன்?

அரி:—[திடுக்கிடுகிறான்; தனக்குள்.] கோபம் கொண்டுவிட்டாரே; என்ன செய்யலாம்; [எழுந்து கைகூப்பிக்கொண்டு, வெளியில்.] இல்லை; அப்படி அருளிச்செய்வதற்குப் பாத்திரனல்லன்; தந்தைக்குக் குருவா யிருந்ததனால் அடியேனுக்கும் குருசிரேஷ்டர்தான்.

விசுவா:—[தனக்குள்.] பயந்துவிட்டான்; ஆயினும் என்ன? இன்னும் பார்க்கலாம்; [வெளியில்.] யார் இல்லை என்கிறார்கள்? குருசிரேஷ்டர்தான் ஸத்ரயாகம் நிறைவேற்றி

வைத்தார்; நான் இப்பொழுது நினைவிற்கு வருவேனா? [தலையை அசைக்கிறான்.] வரமாட்டேன்.

அரி:—அடியேன் அப்படி யொன்றும் இதுகாறும் வித்தியாசம் நினைக்கவில்லையே; வசிஷ்டரும் தாங்களும் எப்பொழுதும் எனக்குப் பூஜ்யர்கள்தாம்.

விசுவா:—ராசா கைங்கரியத்தில் எவரும் உனக்கு முன்னிற்க மாட்டார்கள்.

அரி:—பூஜ்யரே, அங்ஙனம் அருளிச்செய்வது அடியேன் க்ஷேமத்துக்கு நல்லதன்று; ஆலோசனை சபையில் அவர் ஒருவர்; அதனுடன் இராஜ புரோகிதர்; குலகுரு; இந்தக் காரணங்களால் அவர் எப்பொழுதும் சமீபத்தில் இருக்க வேண்டியவ ராகின்றார்; இருந்தாலும், இருவரையும் சமமாகவே நேசித்துவருகிறேன் என்று சமுகத்தில் இப்பொழுதும் துணிந்து கூறுகிறேன்.

விசுவா:—[தனக்குள்.] இன்னும் பார்க்கலாம்; [வெளியில்.] உட்காரு; [உட்காருகிறான்.] யாகம் ஒன்று நடத்த உத்தேசித்திருக்கிறேன்; அதற்குக் குரு—

அரி:—மகாபாக்கியம்; அடியேனுக்கு என்ன கட்டளை? நடக்கக் காத்திருக்கிறேன்.

விசுவா:—எங்களால் நடத்தப் பெறுகின்ற ஒவ்வொரு சடங்கும் சுயநயத்தைமாத்திரம் மேற்கொண்டதன்று; சக்கிரவர்த்தியின் பெருக்கத்தையும் முன்னிட்டது தான்.

அரி:—[தனக்குள்.] இன்று தப்பினோம்; [வெளியில்.] ஆ! அதற்குச் சந்தேகமா! எத்தனை நாட்களில் நிறைவேறக் கூடியது?

விசுவா:—ஐந்து தினத்தில்.

அரி:—சத்தியகீர்த்தி!

சத்திய:—[எழுந்து நின்றுகொண்டு] அடியேன்; யாவும் சித்தம் செய்து ஆச்ரமத்துக்கு அனுப்பிவிடுகிறேன்.

விசுவா:—நாள் நெருக்கத்திலேயே இருக்கிறது; அடுத்த சோமவாரம் ஆரம்பிக்கவேண்டும்.

அரி:—உடனே வந்து விடுகின்றது; சத்திய கீர்த்தி! ஆதித்யவர்மாவையும் அனுப்பி நன்ருய் நிறைவேற்றி வரச் சொல்லும்; குறைவுநேரிடப் போகின்றது; மகர்ஷே! இன்னும் ஆகவேண்டிய காரியங்களுக்கு எதிர் பார்க்கிறேன்.

விசுவா:—இன்னும் என்னவிருக்கின்றது? சக்கிரவர்த்தியவர்களின் தயைதான்.

அரி:—[திடுக்கிடுகிருன்; தனக்குள்.] மறுபடி திருப்பிக் கொண்டது போற் காணப்படுகின்றதே; [வெளியில்.] புழுத்த நாயினும் கடையேனுகிய அடியேன் அவ்வளவு உயர்த்துதலுக்குப் பாத்திரன் அல்லேன்; அறியாமைத்தனத்தால் ஏதேனும் தவறுகள் காணப்பட்டாலும் அவற்றைமன்னிக்கப் பிரார்த்திக்கிறேன்.

விசுவா:—மன்னித்ததனுற்ருன் இப்பொழுது வரலாயிற்று.

அரி:—கடல் கொதிப்பெடுத்தால் விளாவ நீர் எங்கே? என்போன்ருரிடத்தில் சிறிதும் குணம் இல்லாவிட்டாலும் குற்றம் இருப்பது நிச்சயம்.

விசுவா:—[தனக்குள்.] பயந்துவிட்டான்; இது போதும்; பிறிதொரு சமயம் பார்த்துக்கொள்ளலாம் [வெளியில்.] அழைக்காததனுல் என்ன? நிறைவேறின பின்புதான் சங்கதி தெரிந்தது; என்னவோ அவன் இருந்தான் பரமசாது; மகா நல்லவன்; தராதரம் தெரிந்தவன்; அவன்மீது வைத்த அன்பின் மிகுதியினுல் இவ்வளவு பேசலாயிற்று.

அரி :—இனி அதைப்பற்றிச் சொல்ல எனக்கே வெட்கமாயிருக்கிறது; அழைக்க மறந்தது முக்காலும் பிசகுதான்.

விசுவா :—ரித்விக்குகளெல்லாம் இனிச் சென்றுதான் நியமிக்கப்படவேண்டும்; சாவகாசமில்லே.

அரி :—சத்தியகீர்த்தி! [பார்க்கிறான்.]

சத்திய :—[எழுந்து] சித்தமாயிருக்கின்றது; [மரவுரிமுதலியன வைத்திருக்கும் ஒரு தட்டைக் கொடுக்கிறான்.]

அரி :—[எழுந்து அதைப் பெற்றுக்கொண்டு.] அநுக்கிரகம் செய்யவேண்டும். [கொடுக்கிறான்; பெற்றுக்கொள்கிறான்.] அடியேன் வந்தனம்; [வணங்குகிறான்.]

விசுவா :—தீர்க்காயுஷ்யமஸ்து.

அரி :—[திருமிப்பார்க்கிறான்.]

சத்திய :—இதோ! [மற்றொரு தட்டைக் கொடுக்கிறான்.]

அரி :—[பெற்றுக்கொண்டு.] பூஜ்யர்களே! அநுக்கிரகிக்கவேண்டும்; [கொடுத்து வணங்குகிறான்.]

சிஷ்யர் :—ஆயுஷ்யமஸ்து; [பெற்றுக்கொள்கிறார்கள்.]

விசுவா :—சென்று வருகிறேன்; [எழுந்திருக்கிறான்; அரசன் முதலியவர்களும் எழுந்து நிற்கின்றார்கள்.]

அரி :—அடியேன்மீது அநுக்கிரகம் இருக்கவேண்டும்.

விசுவா :—[தனக்குள்.] அதற்கு வரவில்லே; [வெளியில்.] இருங்கள்; [சிஷ்யர்களோடு செல்கிறான்; சபையோர்கள் வணங்கி உட்காருகிறார்கள்.]

அரி :—இன்று நற்காலம்; மகாமுனிவர் அநுக்கிரகத்துக்குப் பாத்திரனுயினேன்; பாகசாலத்தின் [திரைக்குப் பின்னல் ஒருவன் மணியடிக்கிறான்.] ஓ! நாழிகை யாய்விட்டது? சத்தியகீர்த்தி! மற்றவை அடுத்தநாள். [எழுந்திருக்கிறான்; யாவரும் வணங்குகிறார்கள்; அரசன் செல்கிறான்; அனைவரும் மறைகிறார்கள்.]

## களம். 4.

இடம் :—அந்தப்புரத்தின் உட்சோலை.
காலம் :—முன்னிரவு.

[சந்திரமதி பிரவேசிக்கிருள்.]

சந்திரமதி :—ஆர்யபுத்திரரை நிமிஷம் காணுவிட்டால் ஒருயுகம் பிரிந்ததுபோல மனம் வருந்துகின்றது; [நாற்புறமும் பார்க்கிருள்.] உலகம் அடங்கலும் வருத்தத்தை வளர்த்தீவிக்கும் சாதனங்களாகவே காணப்படுகின்றன; கரும்புவில் சுரும்புநாண், அரும்புக்கணை; என்ன கற்பனை! நற்பொருள் யாவும் அவனுக்குச் சொந்தமாம்; [யோசிக்கிருள்.] நமக்கு அன்பில்லாவிட்டால் அவன் பிரயோகம் என்ன செய்யும்? அற்ப இன்பத்துக்கு இத்தனை ஆசையும் அன்பும் வேண்டியிருக்கின்றன; சந்ததியைப் பெருக்குவதுதான் கடவுள் கருத்துப்போலும்; யாருக்குயார் என்ன சம்பந்தம்?

"உற்றார் யாருளரோ, உயிர்கொண்டுபோகும் பொழுது
குற்றாலத்துறை கூத்தனல்லால் நமக் குற்றார்"

பிறந்தது முதல் உடன்வளர்ந்த அன்பு எல்லாவற்றையும் மங்கைப்பருவத்தில் புதிதாய்த் தோன்றிய இந்த அன்பு, முழுவதும் அபகரித்துக்கொண்டுவிட்டது; இவ்வளவு கலவரங்களும் ஆர்யபுத்திரரைக் கண்டால் காற்றாய்ப் பறக்கின்றன. [ஆங்குள்ள நாற்காலி யொன்றில் உட்காருகிருள்.] மனம் வசப்படுமாயின் யாவும் வசப்பட்டுவிடும்.

"அறவினைக்கும் அரும்பொருள் இன்பொடு
பெறுவதற்கும் பெருங்கல்வி கற்றயர்
விறலினுக்கும் நல் விரதனக்கும் ஒண்
துறவினுக்கும் துணை மனம் என்பவே."

விறகைத் தொடாாத நெருப்பும் விஷயத்தைத் தொடாத மனமும் என்றும் இல்லை; [சந்திரனைச் சுட்டி] இந்தச் சந்திரன் முதலிய குளிர் பொருள்களும் கொடும்பொருள்களாய்; சீ! அன்று; அவை மாறவில்லை; நாம் மாறிவிடுகிறோம்; [யோசிக்கிறாள்.] வாராதிருப்பதற்கு ஏதோ காரணம் இருக்கவேண்டும்; [பிரியம்வதை வருகிறாள்.] நமக்கே இங்ஙனம் இருந்தால் நூதன தம்பதிகளுக்கு;—மரணாவஸ்தைதான்; இரவிற் காணுதலால் இந்தப் பூஞ்சோலை என்றும் இல்லாத அழகுடன் விளங்குகின்றது; [பிரியம்வதை வணங்குகிறாள்.] என்ன கண்டாயோ?

பிரியம்:—அங்கு எங்கும் காணப்படவில்லையே;

சந்திர:—இல்லையா?

பிரியம்:—இல்லை.

சந்திர:—மற்று, எங்குச் சென்றிருப்பார்?

பிரியம்:—எவரும் தெரியாதென்கிறார்கள்.

சந்திர:—சரி, அகாலமாகின்றது; நீ செல்; [பிரியம்வதை செல்கிறாள்.] கடவுள் அற்புத சக்தியே சக்தி; உலகவின்பமானது ஏழைமுதல் இறைவன் வரையில் ஒருதன்மையாகவே யிருக்கிறது; சர்வஜீவ தயாபரர்; இதனாற்றான் அந்தப்பெயர் கிடைத்திருக்கின்றது போலும்! [யோசிக்கிறாள்.] நாம் ஏன் இங்கிருக்கவேண்டும்? அந்தப்புரம் செல்லலாம்; மனத்தின் வழிச்செல்லுதல் மனிதர்களுக்கு இயற்கையன்று; "மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம்."

[அரிச்சந்திரன் பிரவேசிக்கிறான்; சந்திரமதி திடுக்கிடுகிறாள்.]

அரிச்சந்திரன்:—ஓ! இங்கேயா இருக்கிறாய்?

சந்திர:—[வணங்குகிறாள்.] இல்லை; தாங்கள் இல்லாததனால் சற்று உலாவலாமென்று வந்தேன்.

அரி:—அந்தப்புரத்திலும் இல்லையென்று சொன்னார்கள்; சேடிகள் கூட ஒருவரும் இல்லைபோற் காணப் படுகின்றதே;

சந்திர:—இராக்காலங்களிலும் அவர்கள் ஏன் என்று நிறுத்தி விட்டேன்; ஏது இவ்வளவு அகாலமாய் விட்டது?

அரி:—குருசிரேஷ்டர் அவசியம் வந்துபோகும்படி சிஷ்யரை அனுப்பியிருந்தார்; சீக்கிரம் திரும்பிவிடலாமென்று சென்றேன்; நாழிகையாய் விட்டது.

சந்திர:—விசேஷமுண்டோ?

அரி:—அரிஷ்டசாந்தி நிறைவேற்றிக்கொண்டிருந்தார்; சென்றதும் மந்திரோதகஸ்நானம் செய்வித்தார்.

சந்திர:—ஆயின், உணவு கொள்ள—.

அரி:—அதுவும் அவ்விடத்திலேயே முடிந்து விட்டது.

சந்திர:—குருசிரேஷ்டர் மிகவும் பிரயாசை எடுத்துக் கொள்கிறார்; என்ன கைம்மாறு இயற்றப் போகின்றோம்?

அரி:—இயற்றப்படுவதற்கு என்ன விருக்கின்றது? அவர் பிரம நிஷ்டர்.

சந்திர:—இரவும் பகலும் நம்க்ஷேமம் ஒன்றையே கருதி உழைத்து வருகிறார்.

அரி:—உண்மைதான்; நன்றியறிதலைத் தவிர்த்து வேறு என்ன செய்ய முடியும்? கடவுள் தான் அருள் சுரக்கவேண்டும்; நாழிகையாயிற்று; வா! அந்தப்புரம் செல்லலாம். [இருவரும் மறைகிறார்கள்.]

# இரண்டாவது அங்கம்.

## களம் 1.

இடம்:—வனம்.

காலம்:—நண்பகல்.

[அரிச்சந்திரன் ஒரு பன்றியைத் துரத்திக்கொண்டு பிரவேசிக்கிறான்.]

அரிச்சந்திரன் :—இதோ வந்து விட்டேன்; இனித்தப்ப முடியாது ; உனக்கென்றே இந்தச் சரம் பூட்டப்பட்டிருக்கின்றது ; சீக்கிரம் இதற்கு உயிர்ப்பலி யிடு ; [அம்பை விடுகிறான்; பன்றி பெருங் குரல் பாய்ச்சிக் கீழே விழுகின்றது.] தப்பலாமென்று நினைத்தாயோ ? உனக்கு இந்தத் தண்டனை தக்கது தான்; நெடுந்தூரம் அலைக்கழித்து விட்டாய் ; [பன்றியைப் புறட்டுகிறான்.] உன்னுற்றான் இன்று வேட்டை பிரகாசமடைந்தது; சரி; படைகள் வருந்தும்; அவர்களைக் கவனிக்க வேண்டும்; [யோசிக்கிறான்.] நீரோடை எங்கிருக்கும் ? குளிர் காற்று வீசுகின்றது ; இங்குத் தண்ணீர் இருக்கலாம் ; [உற்றுக் கேட்கிறான்.] குதிரைகள் அடியோசை கேட்கின்றதே ; யார் வருகிறார்கள் ? சற்று நிதானிக்கலாம்;

[சத்தியகீர்த்தி பிரவேசிக்கிறான்.]

அரி :—ஓ ! விலங்கைத் தொடர்ந்து வந்தீரோ ?

சத்திய :—இல்லை, தங்களை ; பன்றி எவ்வாறுயிற்று ? தப்பியதோ ?

அரி :—இல்லை; ஆகவேண்டிய விதமே.

சத்திய :—எங்கு ?

அரி :—அந்தப் புதருக்குப் பின்புறத்தில்.

சத்திய :—[சென்று பார்த்துக்கொண்டே] ஆதிவராகத்தையும் தாழ்த்திவிட்டதே?

அரி :—ஆம்; நானும் இதுகாறும் இத்துணைப் பெரிய உருவம் பார்த்ததில்லை; மிகவும் அலுப்புண்டாக்கிவிட்டது; நீரோடையை விரும்புகிறேன்.

சத்திய :—இங்கு ஒன்று இருக்கவேண்டும்; வாருங்கள் செல்லலாம்; [இருவரும் மறைகிறார்கள்.]

[திரைக்குப்பின்.] ஒன்றும் தெரியவில்லையே;

[சாருமதி குமுதவதி இருவரும் பிரவேசிக்கிறார்கள்.]

சாருமதி :—நாம் என்ன செய்யலாம்; வா! ஆச்சிரமம் செல்வோம்.

குமுதவதி :—[கீழே பார்க்கிறாள்.]சாருமதி! இதோ ஒரு குதிரையின் காலடி காணப்படுகின்றது; இங்கு யாரோ வந்திருக்கிறார்கள்.

சாரு :—ஆமடி! மனிதர் அடிகள் கூடக் காணப் படுகின்றன; இந்த அடிச்சுவட்டைப் பார்! சக்கிரரேகை சிறிதும் குலையவேயில்லை.

குமுத :—இருவர் வந்திருக்கவேண்டும்; காலடிகள் நான்கு.

சாரு :—ஆனால் சக்கிரவர்த்தியும் மந்திரியுமாக விருக்கலாம்.

குமுத :—நானும் அப்படியென்றுதான் நினைக்கிறேன்; அடிகள் நெருக்கமாயிருப்பதனால் இங்கு என்னவோ செய்திருக்கவேண்டும். [உலாவுகிறாள்; பன்றியைக்கண்டு பயத்துடன்] ஆ! இஃதென்னடி!! மலையைப்போல் இருக்கின்றதே! [திரும்பிவிடுகிறாள்.]

சாரு :—[ஓடிக்கண்டு] பன்றியடி!

குமுத :—பன்றியா ? கத்தாதே, கத்தாதே ; தூரத்தப் போகின்றது ; வந்துவிடு.

சாரு :—அதுதான் இறந்து விட்டதே ! இதோபார் இரத்தப் பெருக்கை.

குமுத :—இறந்துவிட்டதா ? [சமீபம் சென்று பயத்துடன் பார்க்கிறாள்.] என்ன உருவம் ! என்ன பருமன் ! சக்கிரவர்த்தியவர்கள்தான் கொன்றிருக்கவேண்டும்.

சாரு :—இந்த மலையைக் கொல்வதற்கு மற்று யாவரால் முடியும் ?

குமுத :—எவ்விடத்திலும் இவர் புகழே பேசப்படுகின்றது ; நாட்டில் பலரும் இவர் போலவே இருந்து வருகிறார்களாம்.

"பொறைக் கயிற்றிற் புகழை, இன்சொல் லெனும்
விறற் கயிற்றின் விருந்தைக் குரவர்சொல்
மறைக் கயிற்றில் மனத்தைத் திருவை*நல்
அறக் கயிற்றின் அசைப்பவர் எங்குமே."

சந்திரமதி யல்லவோ பாக்கியவதி.

சாரு :—ஆம், அதற்கென்ன சந்தேகம் ! எல்லாவிதத்திலும் மேம்பட்டவள்தான். [பெருமூச்செறிகிறாள்.]

குமுத :—மகாமுனிவர் சொல்லியதற்கு ஏதாவது காரணம் இருக்கலாமோ ?

சாரு :—ஒன்றுமில்லை ; நாம் க்ஷேமப்படுவதுதான் காரணமாய்—

குமுத :—அப்படி நினைக்காதே ; இதற்குமுன் இப்படிச் சொல்லியதில்லையே.

சாரு :—நினைவுக்கு வந்தால்தானே சொல்வார்கள்.

குமுத:—சரி, இப்பொழுது அதைப்பற்றி என்ன? வர வரத் தெரிகின்றது; அடிச்சுவடுகள் இப்படி எங்கேயோ செல்கின்றனவே?

சாரு:—ஆம், ஓடையை நோக்கிச் சென்றுள்ளன; சக்கிரவர்த்தியவர்களைக் காணுமல் எங்ஙனம் செல்லமுடியும்? வா! போகலாம். [இருவரும் செல்கிருர்கள்.]

[திரைக்குப்பின்.] இந்த ஓடை ஆச்சிரமத்தைச் சேர்ந்ததென்று நினைக்கிறேன்.

[அரசனும் மந்திரியும் பிரவேசிக்கிருர்கள்.]

சத்திய:—ஆம், கமுகப்பற்றைகளினுல் ஆசனங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன; தாழ்ந்த கிளைகள் விதானம் போல இணைக்கப்பெற்றிருக்கின்றன; இதோ பாருங்கள்! மீந்தோலின்றிய மரங்கள் மரவுரி எடுத்திருப்பதை விளக்குகின்றன.

அரி:—ஆம், நம்மைக் கண்டும் அஞ்சாமல் விளையாடுகின்ற மான்கன்றுகள் பெரியவர்கள் இருக்கை என்பதைத் தெரிவிக்கின்றன.

சத்திய:—நிர்மலமான காற்று; அழுக்காறற்ற வாழ்க்கை; சாத்விக உணவு; இயற்கைப் பொருள்களின் காக்ஷி; இவைகளாற்றான் ஆச்சிரமவாசம் உயர்வடைகின்றது.

அரி:—நிஜம், பொருட்செலவினுல் கிடைக்கக்கூடிய நாட்டின் சுகங்களையும் இஃது அடக்கிவிடுகின்றது; மனவமைதிக்கு—.

சத்திய:—முனிவர்கள் காடடைந்து வாழ்வதற்கு இந்தச் சிறப்புக்கள்தாம் காரணம்; இங்கு இவர்களுக்குக் கிடைக்கக்கூடிய சுகம் நாட்டில் ஒரு சக்கிரவர்த்திக்கும் கிடைக்கமாட்டாது.

அரி:—ஆம், இதனுற்றான் அவர்கள் தவம் நிர்விக்ன மாய் நிறைவேறுகின்றது. அந்தக் குருக்கத்திப் புதரின் கீழ்ச் சிறிது இளைப்பாறலாம் வாரும். [இருவரும் மறைகிறார்கள்.]

## களம். 2

இடம்:—தபோவனம்.
காலம்:—நண்பகல்.
[விசுவாமித்திரன் பிரவேசிக்கிறான்.]

விசுவாமித்திரன்:—நிஷ்டைசெய்வதற்கும் மனம் ஒருப் படவில்லை; சுவப்னுவஸ்தையிலும் இதுவே கவலையாய் விட்டது; [யோசிக்கிறான்.] ஆரம்பத்தில் ஒவ்வொன்றும் நம் பிக்கைக்கு இடம் தருகின்றது; அவ்வண்ணம் நிறைவேறு கின்றது மாத்திரம் கிடையாது; [உலாவுகிறான்.] ஒன்றா, இரண்டா! எத்தனை விலங்குகள்; இமைப்பொழுதில் தொலைந்தனவே! ஒன்றாவது நம் உத்தேசப்படி நிறை வேறிற்று? பன்றிதான் கொஞ்சம் உதவி செய்தது; [யோசிக்கி றான்.] என்ன உதவி? வல்லடிவழக்கிற்குத்தான் அநுகூலம்; இதனால் என்ன வாகப்போகின்றது? [சிஷ்யர்கள் பிரவேசிக்கி றார்கள்.] இதற்குள்ளேயே இத்தனை கலவரங்கள் உண்டா கின்றன. [திரும்பிப்பார்க்கிறான்.] ஓ! நீங்களா! அத்தியயனம் செய்யாமல் இங்கேன் வந்தீர்கள்?

சிஷ்யர்:—[பயத்துடன்.] இல்லை; முடிந்து விட்டது.

விசுவா:—பழயபாடங்கள் சிந்தனை செய்தாய் விட் டதா?

சிஷ்யர்:—செய்து விட்டோம்.

விசுவா:—ஆந்நிகம்?

சிஷ்யர்:—அதுவும் முடிந்துவிட்டது.

விசுவா :—[தனக்குள்.] என்ன இவர்கள் எல்லாம் முடிந்ததென்கிறார்களே; [வெளியில்.] ஆகாரவஸ்துக்களைச் சித்தப்படுத்துங்கள்; இதோ வந்து விட்டேன்.

சிஷ்யர் :—[ஒருவரை யொருவர் பார்க்கிறார்கள்.] இப்பொழுதுதான் புஜிப்பெடுத்துக் கொண்டீர்களே ?

விசுவா :—ஆ ! அப்படியா !! [யோசிக்கிறான்.] உடம்பு ஒருவாறாயிருக்கின்றது ; அதனாற்றான் இவ்வளவு கலவரங்களும் ; இன்று பாடம் சொல்லவும் முடியாதென்று நினைக்கிறேன்.

சிஷ்யர் :—ஏதேனும் சாந்தி செய்யலாமே ?

விசுவா :—[தனக்குள்.] இதேது ; வம்பாய் முடிந்தது ; [வெளியில்.] வேண்டாம்; இன்று வெறுமனேயிருந்தால் குணப்பட்டு விடுகிறது ; எல்லாவற்றிற்கும் [யோசிக்கிறான்.] இன்று கௌதமாச்சிரமத்துக்குச் சென்று பாடம் கேட்டுவாருங்கள்.

சிஷ்யர் :—தங்களுக்கு ஏதேனும் பணிவிடைகள்—

விசுவா :—அப்படியொன்றும் வேண்டாம் ; சீக்கிரம் வந்து விடுங்கள்.

சிஷ்யர் :—அப்படியே. [செல்கிறார்கள்.]

விசுவா :—[உலாவுகிறான்.] சித்தப்பிரமையை உண்டாக்கி விடும்போலிருக்கிறதே ; ஆம் ; அவ்வளவு வருத்தமும் உண்டுதான் ; அவனும் நடுங்குகிறான் ; என்றாலும், நம்முடைய நடுக்கம் அதிகமாயிருக்கின்றது ; உண்மையில் உயர்ந்தவன்றான் ; என்ன விநயம் ! என்ன பக்தி !! ஒன்றிலும் வசப்படுகின்றவனைக் காணோமே ; [யோசிக்கிறான்.] பெண்களா ! பெண்கள் !! யாவர்க்குக் கிடைக்கும் ? அந்தக் கடைக்கண் பார்வை ஒன்றே போதும் ; மன்மதனும் கும்பிட்டுச் செ

ல்லுவான்; அம்ருதம் பரிமாறிய ஜகன்மோகினியினும் அழகி கள்; ஜிதேந்திரியன் என்றவர்களும் [வெட்கத்தோடு நாற்புற மும் பார்க்கிறான்.] அட! சிறிதேனும் அன்பு பாராட்டினளா? என்ன மனவுறுதி! கல்லினும் வலியதாயிருக்கின்றதே; மந் திரியாம் ஒருவன்; சத்தியகீர்த்தி, அல்ல, அல்ல; சத்திய தேவதைதான் அவன்; என்ன ஒற்றுமை! அவதார புருஷ ராக வல்லவோ விளங்குகிறார்கள்; அறியாமல் அகப்பட்டுக் கொண்டுவிட்டோம்;

"எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு."

[உலாவுகிறான்.] இனி நினைத்தலிற் பயன்யாது? முடிக்க வேண்டியதுதான்;

"மெய்வருத்தம் பாரார்; பசிநோக்கார்; கண்துஞ்சார்;
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்; -செவ்வி
அருமையும் பாரார்; அவமதிப்பும் கொள்ளார்."

இதுதான் கருமத்தில் கண்வைத்தவர் இலக்ஷணம்; இப் பொழுது என்னசெய்யவேண்டும்? [யோசிக்கிறான்.] ஆம், இதுவே சரி; அகப்படுத்திக் கொள்ளவேண்டும்; அப்புறம்? அதில் ஏதேனும் வழி கிடைக்கலாம்; இப்பொழுதே சிஷ்யர்களுடன், அவர்கள்தாம் கௌதமாச்சிரமத்துக்கு, ஏன்? வந்துவிடுகிறார்கள்; விசுவாமித்திரன் பிடித்ததும் தவறுமா? வருங்காறும் ஆச்சிரமத்திலிருக்கலாம். [மறைகிறான்.]

## களம். 3.

இடம்:—அரண்மனையின் ஒருசார்.
காலம்:—மாலை.

[பந்துமதியும் பிரியம்வதையும் பிரவேசிக்கிறார்கள்.]

பந்துமதி:—சகி, பிரியம்வதே! என்ன ஒருவாறாயிருக்கி றாய்? குடும்பப்பிணக்கு ஏதேனும் உண்டோ?

பிரியம் :—அப்படி யொன்றும் இல்லை.

பந்து :—இல்லையென்றால் முகம் சொல்லாதோ? ஆழ்ந்த யோசனையில் இருக்கின்றயே.

பிரியம் :—என் யோசனையால் என்னவாகும்? கடவுள் யோசித்தால்.—

பந்து :—என்ன! என்ன!! எனக்கொன்றும் புரியவில்லையே?

பிரியம் :—எப்படித் தெரியும்? உற்று நோக்கினல்தான் தெரியும்.

பந்து :—என்னவோ அம்மா! நீ சொல்வது ஒன்றும் விளங்கவில்லை.

பிரியம் :—தேவி சந்திரமதியைப் பார்த்தாயா?

பந்து :—நேற்றெல்லாம் பார்த்தேன்; அவரும் உன்னைப் போல்தான் சிந்தனையில் இருக்கிறார்.

பிரியம் :—அதுதான் காரணம்.

பந்து :—ஏது? உன் சிந்தனை அவருக்குக்காரணமா? அவர் சிந்தனை உனக்குக் காரணமா?

பிரியம் :—அவருடையதுதான் எனக்குக்காரணம்.

பந்து :—என்ன? ஏதேனும் கோபித்துக்கொண்டாரோ?

பிரியம் :—அப்படி யெல்லாம் இல்லை; ஏதோ சக்கிரவர்த்தியவர்களுக்கு ஆபத்து—

பந்து:—[திடுக்கிட்டு] என்ன சக்கிரவர்த்தியவர்களுக்கா? ஆ! ஆ!! என்ன காலத்தின் கொடுமை!!!

பிரியம் :—வேறு என்ன சொல்லலாம்; காலத்தின் கொடுமைதான்.

பந்து :—எப்படி? வேற்றரசர் படையெடுக்கப் போகிறார்களோ?

பிரியம் :—அதுதான் அரசர்களுக்குச் சகஜமாயிற்றே.

பந்து :—இல்லாவிட்டால் ?

பிரியம் :—உண்மை தெரியவில்லை.

பந்து :—ஆனால் உண்டாகும் என்று மாத்திரம் தெரியும் போலும்

பிரியம் :—ஆம்,

பந்து :—யார் சொல்கின்றார் ?

பிரியம் :—சக்கிரவர்த்தி முதலிய எல்லோரும் தான்.

பந்து :—ஆயின் தெரிந்திருக்கவேண்டுமே ?

பிரியம்:—ஒருவாறு தெரியும் ; சொல்வதற்குத்தான் பயமாயிருக்கிறது; [மெதுவாய்] விசுவாமித்திரர் என்னவோ-

பந்து :—அப்பா ; என்னவோ வென்று பார்த்தேன் ! வாயைமூடு ; அவர்தான் மோசமிழைப்பாராம் ; சக்கிரவர்த்தியவர்கள் தான் அகப்படுவாராம்.

பிரியம் :—இழைக்கக்கூடாதா ?

பந்து :—பெரியோர்களைப் பழிக்காதே ; மகாபாபம் உண்டாகும் ; சக்கிரவர்த்தியவர்களைக்கெடுத்து அவருக்கு என்ன ஆகவேண்டும்; இதற்குத்தானா நேற்றுமுதல் உட்கார்ந்து யோசித்துக்கொண்டிருக்கிறாய் ; நன்றாயிருக்கிறது? நல்ல புத்திசாலி.

பிரியம் :—தேவியின் கலக்கம் உனக்கென்ன தெரியும்? நானும் முதலில் அப்படித்தான் யோசித்தேன்.

பந்து :—பிறகு, செய்துவிடுவாரென்று தீர்மானித்துவிட்டாய்போலும்.

பிரியம் :—என் தீர்மானத்தில் என்ன விருக்கிறது? தேவி சந்திரமதி நேற்று இரவு கனவும் கண்டனராம்.

பந்து :—கனவுக்கென்ன ? இருண்டவன் கண்ணுக்கு மருண்டதெல்லாம் பேய்தான்.

பிரியம் :—அதோ தேவி வருகிறார்; நாம் செல்லலாம் வா. [இருவரும் மறைகிறார்கள்; சந்திரமதி பிரவேசிக்கிறாள்.]

சந்திரமதி :—என்ன ஆச்சரியம்! கனுப்பயன் உரைத்த சாஸ்திரிகள் அவரையே குறிக்கின்றார்கள்; அவர் நம்மைப் பகைப்பதற்கு என்ன செய்தோம்; உலகப்பற்றைத் துறந்தவர்; ஒருகால் ஸத்ரயாகத்துக்கு அழைக்காததனுல் பகைகொள்ளலாம்; [யோசிக்கிறாள்.] இது பொருந்துமா? இந்த அற்பத்துக்கா இவ்வளவு பகை? இராஜ்யத்தை அபகரித்து நம்மைத்துரத்தி, ஆ! [பெருமூச்செறிகிறாள்.] எவ்வளவுகொடுமை! சத்துருவும் செய்ய உடன்படமாட்டான்; அவர் என்ன குழந்தையா? ஒருகால் நினேவே கனவாயிருக்கலாமோ? அவரைப்பற்றி எப்பொழுதும் நினைத்ததே யில்லையே; எப்படியிருக்கமுடியும்? [ஆசனமொன்றில் உட்காருகிறாள்.] இரண்டு தினங்களாய் வலப்புறம் துடித்துக்கொண்டே யிருக்கிறது; இதற்கென்ன சொல்லலாம்; நோய்; சீ! அப்படியல்ல; ஏதோ காரணம் இருக்கவேண்டும்; [யோசிக்கிறாள்.] ஓ! இப்பொழுதுதான் நினைவுக்கு வருகிறது; அன்றொருநாள் குருசிரேஷ்டரும் அரிஷ்டசாந்தி செய்திருக்கிறார்; அரிஷ்டம் இல்லாவிட்டால் சாந்தியேன்? அவர் திரிகால க்ஞானி; அதனுல், ஏதேனும் அரிஷ்டம் வந்தே தீரவேண்டும்; ஆயினும் இப்படியா? அரசைப் பிரிவதுதான் இயற்கை; விரும்புவாராயின், இப்பொழுதே கொடுத்துவிடலாம்; அரசரைப் பிரிய நேரிட்டால், [பெருமூச்செறிகிறாள்.] அவனியையே பிரிய வேண்டியதுதான்; இந்தக்காரியத்தில், அவருக்காவது அல்லது நமக்காவது தகுந்த பயன் இருக்கவேண்டும்; இல்லையேல், இந்த அற்பத்துக்கெல்லாம் தலையிட மாட்டார்; பிரமநிஷ்டர்; நம்மைக் கெடுப்பதுதானு அவருக்கு வேலை; திரிமூர்த்திகளும் அவர் கட்டளைக்கு எதிர் நோக்கிக்கொண்

டிருக்கிருர்கள். [நாற்புறமும் பார்க்கிருள்.] மனம் ஒருவழியி லும் வசப்படமாட்டேனென்கின்றதே;

"சினமிறக்கக் கற்ருலும் சித்தி யெல்லாம் பெற்ருலும்
மன மிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே."

நம் அருமைக் கண்மணி லோகிதாஸ்யன், குழந்தாய்! உன்னையும்—எப்படி யிருக்கமுடியும்? அம்பிகே! உன் திருவுளக்குறிப்பு எப்படியோ? [எழுந்திருக்கிருள்.]

"நின்ருவார் பிறரன்றி நீயே யாருய்;
நினைப்பார்கள் மனத்துக்கோர் வித்துமாருய்;
மின்ருய்; மின்னவர்க்கோ ரமுதமாருய்;
மறை நான்கு மாருய்; ஆறங்க மாருய்;
பொன்ருய்; மணியாருய்ப் போகமாருய்;
பூமிமேல் புகழ்தக்க பொருளே நின்னை
என்ருய்! என்ருய்! என்னரி னல்லால்
ஏழையேன் என்சொல்லி யேத்துகேனே."

எது எப்படியாயினும் அரசரையும் அருமைமகனையும் பிரியாதிருக்கும் வரம் ஒன்றுதான் வேண்டுகின்றேன்; மற்றவற்றைப் பற்றிச் சிறிதும் கவலையே யில்லை; எல்லாவற்றிற்கும், கௌரீதேவியைத் தரிசித்து வரலாமா? ஆம்; இது தான் யுக்தம். [மறைகிருள்.]

---

## களம் 4.

இடம்:—இராஜ சபை.
காலம்:—நண்பகல்.

[அரசன் மந்திரி முதலானவர்கள் கொலுவீற்றிருக்கிருர்கள்.]

சத்தியகீர்த்தி:—தருமபாலவர்மா கடிதமெழுதி யிருக்கிருர்.

அரிச்சந்திரன்:—என்ன விசேஷம்?

சத்திய :—யாவும் செம்மைப்பட்டு விட்டனவாம்; அரசரும் தன் தவற்றை ஒப்புக் கொண்டு விட்டாராம்.

அரி:—இனியேனும் உண்மைநெறியில்பரிபாலிக்கும்படி எழுதும் ; யாந்திரிகர் தொழிலைப் பெருக்குவதுதான் இராஜ்யத்துக்கு அழகென்பதை அவன் மனத்தில் நிலைக்கச் செய்யும் ;

சத்திய:—வந்தனம்; வேதஸத்தில் காட்டு விலங்குகள் புகுந்து பயிர்களை முழுவதும் அழித்து விட்டனவாம் ; அதனால்,சில குடிகள் இந்த வருஷம் ஜீவிக்கவே முடியாதென்று மித்திராவசு அவர்கள் எழுதியிருக்கிறார்கள்.

அரி :—அன்று கொன்ற விலங்கு முழுவதும் வேதஸத்தைச் சேர்ந்ததுதானே ; அந்தப் பன்றி யொன்றே பயிர் முழுவதையும் அழித்திருக்கும்; என்ன செய்யலாம்? [யோசிக்கிறான்.] திறை வசூலிக்க வேண்டாம் ; குடிகளுக்கும் யுக்தப்படி கொஞ்சம் உபகரிக்கச் சொல்லும்.

சத்திய :—செய்கிறேன் ; காட்டோரங்களில் உள்ள கிராமங்களுக்கு என்றும் இந்த அவாந்தரம் உண்டுதான்.

அரி:—[தனக்குள்.] என்ன காரணம்? நெஞ்சு படபடவென்று அடித்துக் கொள்கின்றதே ; என்னவோ சில தினங்களாய் அபசகுனங்கள் காணப்பதே இயற்கையாய் விட்டது. [வெளியில்.] சத்தியகீர்த்தி ! இன்று சோமவாரம் அல்ல?

சத்திய :—ஆம்: [தூதனொருவன் பிரவேசித்து வணங்குகிறான்.]

அரி :—சந்திரசேகரருக்கு இன்று மகாபிஷேகம் செய்யச்சொல்லும் ;

தூதன் .—கடைமுக வாயிலில் கௌசிக முனிவர் வந்திருக்கிறார் ; கட்டளைக்கு—.

அரி :—ஆ! விசுவாமித்திரரா? [அரசனும் மந்திரியும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கிறார்கள்; தனக்குள்] முந்தியே கோபமும் குறையுமாய்ச் சென்றிருக்கிறார்; இப்பொழுது ஏன் வந்தார்? யாகமும் முடிந்துவிட்டதே; [வெளியில்.] சுருதகீர்த்தி! சென்று அழைத்துவாரும்.

சுருதகீர்த்தி:—கட்டளை. [செல்கிறான்; தூதனும் மறைகிறான்.]

அரி :—சத்தியகீர்த்தி! வேண்டியவற்றைப் பாரும்.

சத்திய :—அப்படியே; சுசீலரே! யாவும் சித்தமாயிருக்கின்றனவா?

சுசீலன் :—எல்லாம் உள்ளன.

அரி :—சத்தியகீர்த்தி! மனம் எப்பொழுதும் சஞ்சலித்துக் கொண்டே யிருக்கின்றது; சாஸ்திரிகள் சொல்லியது வாஸ்தவமா யிருக்கலாமோ? அவர்களோ வனத்தில் வலிய அணைய வந்தார்கள்; என்ன சூழ்ச்சியோ? யாவர் கண்டார்; எல்லாம் கடவுள் அருள்; அதோ வந்துவிட்டார்; இனி நாம் ஜாக்கிரதையா யிருக்கவேண்டும். [சிஷ்யர்களுடன் கௌசிகன் பிரவேசிக்கிறான்; அரசன் முதலியோர்கள் நிற்கிறார்கள்.] தங்கள் வரவு நல்வரவாக வேண்டும். எழுந்தருளுங்கள்; [உட்காருகிறான்.] அடியேன் அரிச்சந்திரன்; [வணங்குகிறான்; கௌசிகன் உறுத்துப் பார்க்கிறான்; தனக்குள்.] வரும்பொழுதே கோபத்துடன் இருக்கிறாரே; என்ன செய்யலாம்; [வெளியில்] அடியேன் ஒன்றும் பிழைக்க வில்லையே; இருந்தாலும் அநுக்கிரகிக்க வேண்டும். [கை கூப்புகிறான்.]

விசுவா :—என்ன? அநுக்கிரகிக்கவும் வேண்டும்? [தலையை ஆட்டுகிறான்.]

அரி :—[தனக்குள்.] பிரமாதமாக விருக்கின்றதே ; அப்படி என்ன செய்திருக்கிறோம். [வெளியில்.] அடியேனுக்கு ஒன்றும் விளங்கவில்லையே ; [நடுங்குகிறான்.]

விசுவா :—விளங்குமா ? விளங்காது ; விளங்கச் செய்கிறேன்.

அரி :—[தனக்குள்.] அந்தப் பெண்கள் ஏதேனும் கோள் சொல்லி யிருப்பார்களோ? அப்படித்தான் இருக்கவேண்டும். [வெளியில்.] பூஜ்யரே ! தங்களுக்கு ஒன்றும் அபராதம் செய்யவில்லையே.

விசுவா :—செய்யவில்லையா ? வேட்டைக்கு வந்த பொழுது என்ன செய்தாய் ?

அரி :—ஒன்றும் செய்யவில்லையே ; காட்டில் வேட்டையாடினேன்.

விசுவா :—காட்டிலா ? ஆச்சிரமத்திலா ? உண்மையைச் சொல்.

அரி :—[தனக்குள்.] இப்படி வரும் என்று முந்தியே யோசித்தது தான் ; [வெளியில்.] தங்கள் சமுகத்திலும் பொய் சொல்லத் துணிவேனு ? காட்டில்தான் வேட்டை யாடினது ; கடைசியாய்ப் பெரும் பன்றி யொன்றைத் துரத்திக்கொண்டு வந்தேன் ; அது, தங்கள் ஆச்சிரமங்காறும் என்னை அலைக் கழித்துவிட்டது.

விசுவா :—சரி, இனிச் சக்கிரவர்த்திபவர்கள் வேட்டைக்குப் புறப்பட்டார்கள் என்றால், ஆச்சிரமங்கள் எல்லாம் இரணக்களம் தான் ; முனிவர்கள் எப்பொழுதும் சாந்தியுதகத்தைச் சித்தமாய் வைத்துக்கொண்டே யிருக்கவேண்டும்.

அரி :—அப்படிக்கட்டளையிடத் தகாது.

விசுவா :—பின், ஆச்சிரமத்தில் வேட்டை என்றால் ?

அரி :—அங்கு வரவில்லையே.

விசுவா :—ஆச்சிரமம் என்பது தழைக்குடிசைதான் போலும்.

அரி :—அப்படியல்ல ; ஆச்சிரம வனத்திலும் அடியேன் பிரவேசிக்கவில்லை என்று சொன்னேன்.

விசுவா :—அந்த வனம் எதைச் சார்ந்ததென்று நினைக்கிறாய் ? சரி, அப்புறம் செய்ததென்ன ?

அரி :—[தனக்குள்.] தெரிந்து விட்டது ; அந்தச் சிறுக்கிகள்தாம் ஏதோ அவதூறு சொல்லியிருக்கிறார்கள். [வெளியில்.] ஒன்றும் விந்தியாசம் செய்யவில்லையே.

விசுவா: — ஏன் பொய் பேசுகிறாய் ? இதுதான் சத்தியவிரதம் போலும் ; பேஷ் ! நன்றாயிருக்கிறது ; [அரசன் மந்திரியைப் பார்க்கிறான்.]

சத்தியகீர்த்தி :—ஆங்கு நீரோடை யொன்றில் சற்று இளைப்பாறி யிருந்தோம்.

விசுவா :—ஒருவரை யொருவர் விஞ்சியே யிருக்கிறீர்கள் ; ஆங்கு என்ன நிகழ்ந்தது ?

சத்திய:—அந்தக்கரைக்கு இருவர் பெண்கள் வந்தார்கள்.

விசுவா :—யாரவர் ?

சத்திய :—தங்கள் சிஷ்யைகள் என்றார்கள்.

விசுவா :—அவர்களுடன் என்ன சம்பாஷித்தீர்கள் ?

சத்திய :—நாங்கள் ஒன்றும் சம்பாஷிக்கவில்லை ; நெடுநாள் முதல் சக்கிரவர்த்தியவர்களை விரும்பி யிருப்பதாக அவர்கள்தாம் புகன்றார்கள்.

விசுவா.—அவர்களா? [மூக்கின்மீது விரலைவைக்கிறான்.]

சத்திய:—அவர்கள்தாம்; இது மாத்திரம் அல்ல; சக்கிரவர்த்தியவர்கள் தங்களை மணம் புரிந்துகொள்ளவேண்டும் என்றும் வேண்டிக்கொண்டார்கள்.

விசுவா:—சிறுபெண்கள்; முன் பின் அறியாத ஒரு புதியவரசனிடம் இவ்வண்ணம் வெட்கமில்லாமல் வசனித்திருப்பார்களா? என்ன கற்பனை? ஆ!

சத்திய:—அவர்களுக்கு அவ்விதம் இருப்பதாகவே நாங்கள் நினைக்கவில்லை.

விசுவா:—என்ன? [உறுத்துப் பார்க்கிறான். சத்தியகீர்த்தி கையைக் கட்டிக்கொண்டு தலைகவிழ்கிறான்.] இவ்வண்ணம் பேசுவதென்று சக்கிரவர்த்தியவர்களும் மந்திரியும் முந்தியே தீர்மானித்துக் கொண்டதுபோலிருக்கிறது; இனி உலகத்தில் தருமம் நான்கு பாதம்தான்.

அரி:—பெரியோர்கள் அப்படி அநுக்கிரகிக்கக்கூடாது; மந்திரி புகன்றவற்றில் ஒரு அக்ஷரக்காலேனும் வித்தியாசம் இல்லை.

விசுவா:—எவற்றில்? சக்கிரவர்த்தியவர்கள் என்னைக்குறித்து அநுசரித்துச் சொன்னவற்றிலா?

அரி:—இல்லை; இது கடவுள் அறியச் சொல்லும் உண்மையான மொழி.

விசுவா:—ஆம், ஆம், அதற்கென்ன சந்தேகம்; அவர்களுக்கு என்ன சொன்னாய்?

அரி:—அந்த எண்ணம் தீயதென்றும் கௌசிகருக்குத் தெரிந்தால் கோபம் கொள்வாரென்றும். மேலும் நான் ஏக பத்னீ விரதனென்றும் கூறினேன்.

விசுவா :—ஆயின் அந்தப் பெண்கள் தாம் தவறு இழைத்திருக்கிறார்கள்; சக்கிரவர்த்தியவர்கள் நிரபராதியாக வேவிளங்குகிறார்; சரி, இதைப்பற்றி அப்புறம் யோசிக்க லாம்; இப்பொழுது என் தவங்கள் கெட்டு விட்டன? என்ன சொல்கிறாய்?

அரி :—காரணம் தெரியவில்லையே;

விசுவா :—'அந்தப்பெண்கள் உன்னால் விரும்பப்பட்டோம்' என்றும், 'இனிச்சிறிதும் பிறருக்கு உபயோகப்பட மாட்டோம்' என்றும் அனவரதமும் அழுத கண்ணும் சிந்திய மூக்குமா யிருக்கிறார்கள்; எனக்குச் செய்யவேண்டிய உரிமைப் பணிவிடைகள் எல்லாம் நின்று விட்டதனால் தவங்கள் நடக்க வில்லை;

அரி :—அதில் கொஞ்சமும் உண்மை இல்லையே; நான் அந்தப்பெண்களை விரும்பவில்லை என்று சமூகத்தில் இப்பொழுதும் நிச்சயமாய்ச் சொல்கிறேன்.

விசுவா:—என் இந்தப் பயனற்றவார்த்தைகள்; ஒருகால் நான் கோபிக்கப் போகிறேன் என்று மறைத்துப் பேசுகிறாய் போல் இருக்கிறது; அப்படி வேண்டாம்; உண்மையில் அந்தப் பெண்களைத் தகுந்த ஒரு வரனுக்குச் சொந்தமாக் கவே உத்தேசித் திருந்தேன்; பால் வழிந்தும் புறம் போக வில்லை; இனி அவர்களைக் கைப்பற்றிக்கொண்டு சுகமாயிரு.

அரி :—[காதை மூடிக் கொள்கிறான்.] சந்திரமதியைத் தவிர்த்து இந்தப் பிறப்பில் மறுமாதரை விரும்புவதில்லை என்று விரதம் கொண்டிருக்கிறேன். அதை நிறைவேற்று வது தங்கள் கடமைதான்.

விசுவா :—அஃது அவ்வளவு அவசியமானதன்று மேலும் உன்போன்றாருக்குச் சிறிதும் பொருந்தவும் மாட்டாது.

அரி :—எனக்கில்லாவிடினும் குருசிரேஷ்டருக் காக வேனும் கட்டாயம் அநுசரிக்கவேண்டும் ; சந்திரமதியின் விவாககாலத்திலேயே அவர் கட்டளையிட்டிருக்கிறார்.

விசுவா :—[கண்களை உருட்டிப்பார்த்துப் பற்களைக் கடித்துக் கொண்டே.] என்ன சொன்னாய் ? அவன் வார்த்தை அவ்வளவு உயர்ந்ததாய் விட்டதா ? [தலையை ஆட்டுகிறான்.]

அரி :—[நடுங்கிக்கொண்டே.] யுக்தமானவற்றை யாவர் சொன்னாலும் கேட்க வேண்டியதுதானே .

விசுவா :—ஆயின், நான் சொல்வது ?

அரி :—விரதம் வைத்துக்கொண் டிருக்கிறேன் என்று சொல்லவந்தேன்.

விசுவா :—அவர்களுக்கும் மையல் மூட்டி, விரும்பவும் மாட்டேன் என்கிறாய் ; அல்ல ? சரி, விரதம் கெடுவதால் உண்டாகும் பாபம் உன்னைப் பற்றாதிருக்கச் செய்கிறேன் ; அங்கீகரித்துக்கொள்.

அரி :—[காதில் கரத்தை வைத்துக்கொண்டு.] இந்த வசனத்தை மாத்திரம் இன்னொரு விசை சொல்லாதிருக்கப்பிரார்த்திக்கிறேன் ; மன்னிக்கவேண்டும்.

விசுவா :—[மூக்கின்மீது விரல் வைத்துத் தலையை யாட்டிக் கொண்டு.] துஷ்டா ! என்ன சொன்னாய் ? இப்பொழுது விசுவாமித்திரன் கோபத்தைக் கிளறுகிறாய் ; இது உன் மனத்தில் இருக்கட்டும்.

அரி :—[தனக்குள்.] கருமசங்கடமாயிருக்கிறதே; என்ன செய்யலாம் ; [வெளியில்.] பூஜ்யரே, மன்னிக்க வேண்டுகிறேன். [வணங்குகிறான்.]

விசுவா :—உன் குற்றம் எவ்வளவும் மன்னிக்கத் தக்கதன்று ; கொடிய சிங்கத்தின் வாயில் கையை இடுகிறாய்.

அரி :—அவர்கள் விரும்பியதற்கு நான் என்ன செய்யக்கூடும்; அதுவும் என்மீது குற்றமாகுமா?

விசுவா :—இல்லை, இல்லை; முழுப்பொய். உன் மீதில் இரண்டு குற்றம் இருக்கின்றது; ஒன்று ஆச்சிரமத்தில் வேட்டை யாடினது; மற்றொன்று என் சிஷ்யைகளை விரும்பினது.

அரி :—சிவ சிவா! நான் கனவிலும் விரும்பினேனில்லையே; தங்களை விரும்பினேனென்று அந்தச் சிறுக்கிகள்தாம் என்மீது அவதூறு சொல்லியிருக்கிறார்கள்; அதை நம்ப வேண்டாம்.

விசுவா :—இல்லை; நீ சொல்வதில் உண்மையே யில்லை.

அரி :—[தனக்குள்.] இந்த விஷயத்தில் இவர் ஏன் இவ்வளவு கட்டாயப்படுத்துகிறார்; இதனால் இவருக்கு ஏதோ ஒரு அநுகூலம் இருக்கவேண்டும்; நாம் என்ன செய்யலாம். [மந்திரியைப் பார்க்கிறான்.]

சத்திய:—முனிநாதா! தாங்கள் இப்படிக் கட்டாயப் படுத்துவது அழகன்று; சக்கிரவர்த்தி யவர்களே சத்தியம் தவறினார் என்றால்—

விசுவா :—நிறுத்து நிறுத்து; உன் அதிகப் பிரசங்கம் போதும்; [கண்களை உருட்டி விழித்துக்கொண்டு] அட! திரிமூர்த்திகளையும் நடுங்கச் செய்து கொண்டிருக்கும் எனக்கு [மார்பைத் தட்டுகிறான்.] எதிர்க்கத் தொடங்கி விட்டீர்களல்லவா? பேஷ்! பேஷ்!! [கர்ஜிக்கிறான்; அரசனை நோக்கி] துஷ்டா! உலகத்தை மயக்கிவந்த உன் பொய் வேஷங்கள் எல்லாம் இப்பொழுது பலன் கொடுக்கப் போகின்றன என்ன உன் எண்ணம்?

அரி :—[தனக்குள்] நம்மால் என்ன விருக்கின்றது

எல்லாம் திருவுளச் செயல்; [வெளியில்.] முனிநாதா! கடவுள் அருள் முகம் நோக்கியேனும் என் மீது கருணை சுரக்க வேண்டும்;

"கொஞ்சிப் பேசும் குழவி சொற் குற்றத்தால்
வஞ்சித் தன்னை வனமுலைப் பாலினில்
நஞ்சிட்டால் அதை நாடி விலக்கும் நன்
நெஞ்சத்தா ருளரோ இந்நிலத்தினில்."

மேலும் இந்த அரசும் அடிமையும் தங்கள் அடைக்கலம்; [காலில்விழுகிறான்: முனிவன் ஒதுங்கிக்கொள்ளுகிறான்.]

விசுவா:—அரிச்சந்திரா! என் அரிய சிஷ்யைகளை மணந்துகொண்டால் அன்றி, நீ எவ்வளவும் என் அநுக்கிரகத்துக்குப் பாத்திரன் அல்லன்.

அரி:—[தனக்குள்.] அந்தோ, முடியாதகாரியம்; [வெளியில்.] பூஜ்யரே, தாங்கள் அரசை விரும்பினும் கொடுத்து விடுகிறேன்; இந்தப் பிறப்பில் மதிதயன் மகளைத் தவிர்த்துப் பிற பெண்களைக் கனவிலும் கருதமாட்டேன் என்பதை இப்பொழுதும் விண்ணப்பித்துக் கொள்கிறேன்.

விசுவா:—என்ன, என்ன? 'அரசாக்ஷியை விரும்பினும் கொடுத்து விடுகிறேன்; அந்தப் பெண்களை விரும்பமாட்டேன்; விரும்பமாட்டாய்? [தலையை அசைத்துக்கொண்டு] விரும்பமாட்டாய்; நல்லது, உன் வசனப்படி அரசைக்கொடு; சீக்கிரம். [அரசனும் மந்திரியும் திடுக்கிட்டு ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கிறார்கள்.] என்ன தாமதம்? முடியவில்லையா? [அரசன் வணங்குகிறான்.] இந்த வணக்கத்தினால் ஒரு சமயம் மறந்துவிடுவேன் என்று நினைக்கிறாய் போலும்; ஒருநாளும் இல்லை; நான் விசுவாமித்திரன்; [அரசன் மலைத்து நிற்கிறான்.] என்ன? சத்திய வாசகன்; ஏன் விழிக்கிறாய்; சீக்கிரம் காலமாகின்றது.

அரி :—[தனக்குள்.] புகழ் பெறுவதைத் தவிர்த்து ஏன் பொய்யனாகவேண்டும்?

“ தன்னுடை யாற்றலும் மானமும் தோற்றுத்தம்
இன்னுயி ரோம்பினும் ஓம்புக ; பின்னர்
சிறுவரை யாயினும் மன்ற தமக்காங்
கிறுவரை இல்லை யெனின்.”

உண்மை மொழி ; எத்தனை நாள் அரசாளப்போகி றோம் ; நல்ல உத்தம பாத்திரம் ; மகான் ; இதற்கேன் சிந்திக்கவேண்டும் ; இதுவே சமயம் ; [வெளியில்.] மந்திரி ! தீர்த்தம் கொண்டுவாரும் ; [முனிவன் ஆச்சரியப் படுகிறான் ; மந்திரி துக்கத்துடன் கொண்டு வருகிறான் ; அரசன் அக்ஷதையையும் தீர்த்தத்தையும் கரத்தில் பெய்துகொண்டு.] பூஜ்யரே, அநுக்கிரகம் செய்யவேண்டும் ; என் அரசு முழுவதும் மற்றும் அதைச் சார்ந்த சுவதந்தரம் முழுவதும் தங்களுக்குக் கொடுத்துவிட்டேன்.

“ வையம் நின்னது ; மாநகர் நின்னது;
வெய்ய வாசியும் வேழமும் நின்ன ; பொற்
செய்ய தேர்களும் செல்வமும் சேவிக்கும்
தையலார்களும் தானையும் நின்னவே.”

பெற்றுக்கொள்ளுங்கள் ; [முனிவன் கரத்தில் தீர்த்தத்தைப் பெய்கிறான் ; மனத் திகைப்புடன் முனிவன் பெற்றுக்கொள்கிறான் ; சபிகர்கள் திகைத்து நிற்கிறார்கள். திரி ! மகா தபஸ்வியாகிய கௌசிகர் என் தானத்துக்குப் பாத்திர ராயினார் ; நான் இன்று தன்யனாய்விட்டேன் ; இனி உமக்கு அவர்தான் சக்கிரவர்த்தி ; அவர் கட்டளைப்படியே நடக்கவேண்டும் ; முனி நாதா ! அடியேன் சென்றுவருகிறேன்.

விசுவா :—[தனக்குள்.] நாம் ஒன்று முடிக்கத் தான் ஒன்று முடிந்தது ; நமக்கேன் இந்த அரசு ; இஃதொரு

பெருந்தலைச் சும்மை; என்ன செய்யலாம்; இன்னமும் பார்ப்போம்; [வெளியில்.] இவ்வளவு பெரிய தானத்தைத் தக்ஷிணை யில்லாமல் ஏற்றுக்கொள்வ தெப்படி? [அரசனும் மந்திரியும் திடுக்கிட்டு விழிக்கிறார்கள்.]

அரி:—முனிநாதா! இந்த மகா தானத்துக்குரிய தக்ஷிணை பொக்கிஷத்திலேயே இருக்கிறது.

விசுவா:—என்ன சொன்னாய்? பொக்கிஷத்தில்; யாவர் பொக்கிஷத்தில்? விசுவாமித்திரன் பொக்கிஷத்தில் இருந்தால் உனக்கென்ன? 'செல்வமும் சேவிக்கும் தையலார்களும் தானையும் நின்ன' என்பதை நினைத்துப் பேசு.

அரி:—அடியேன் தங்களை அறியாமல் வேறு ஒன்றும் நிறுத்திக்கொள்ள வில்லையே.

விசுவா:—ஆயின் தக்ஷிணையில்லாமல் ஏற்றுக்கொள்வேன் என்று நினைத்து விட்டாயோ? நன்றாயிருக்கிறது; உன் தானத்தை நீயே வைத்துக்கொள்; நான் செல்கிறேன்; யாரடா சிஷ்யர்கள்? [எழுந்திருக்கிறான்.]

சிஷ்யர்:—[எழுந்துகொண்டே] இதோ வந்து விட்டோம்.

விசுவா:—வாருங்கள்; [செல்கிறான்: அரசன் ஓடிச் சென்று காலில் விழுகிறான்; சபிகர்கள் துன்புறுகிறார்கள்.] தக்ஷிணையில்லாததானம் எனக்கேன்? எளிதில் அகப்பட்டான் என்று பார்த்துக்கொண்டாய் போலும்; வேண்டாம், வேண்டாம்; நீயே வைத்துக்கொண்டு சுகமாயிரு.

அரி:—அடியேனிடத்தில் ஒன்றும் இல்லையே.

விசுவா:—இல்லாவிட்டால் யார் வேண்டும் என்கிறார்கள்?

அரி :—[தனக்குள்.] தக்ஷிணையில்லாமல் பெற்றுக்கொள்ளார்போல் இருக்கின்றதே; என்ன செய்யலாம்; இதுவும் கடவுள் திருக்கூத்துத்தான்; எல்லா வற்றிற்கும் கேட்டுப் பார்க்கலாமா? ஆம்; [வெளியில்.] பூஜ்யரே, தக்ஷிணை எவ்வளவு விரும்பு கிறீர்கள்?

விசுவா :—இந்தப் பெரிய தானத்துக்கு இலக்ஷம் வராகனுக்குக் குறைந்தால் முடியாது.

அரி :—[தனக்குள்.] இலக்ஷம் வராகன்; தொகை பெரியதாயிருக்கின்றதே; [வெளியில்.] கொஞ்சம் குறைக்கக் கூடாதா?

விசுவா :—தானம் சிறியதா யிருந்தால் குறைக்கலாம்.

அரி :—[தனக்குள்.] அவ்வளவு தொகையை எங்கிருந்து கொடுக்கப்போகின்றோம் [வெளியில்.] தவணையேனும் கொடுங்கள்; அதற்குள்ளாவது கொடுக்கப் பார்க்கிறேன்.

விசுவா :—ஏன்? ஒவ்வொரு தேசத்திலும் சென்று வசூலிக்கப் பார்க்கிறாயோ? விசுவாமித்திரன் தேசத்தில் தலைகாட்டக்கூடாது; தெரியுமா? தவணை நாற்பது நாள்.

அரி :—ஆயின், எவ்விடத்திற்குத்தான் செல்லுவேன்; இந்த உலகம் அடங்கலும் தங்களுடையதா யிருக்கின்றது. என்ன செய்வேன்; எதேனும் ஒருவழி காட்டவேண்டும். [வணங்குகிறான்.]

விசுவா :—[தனக்குள்.] என்ன செய்யலாம்? யோசித்துக் கொண்டே, வெளியில்.] வாராணவஸிக்கு மாத்திரம் செல்ல இடங் கொடுத்திருக்கிறேன். தவணைக்குமேல் ஒரு நிமிஷமானாலும் அங்கீகரிக்கமாட்டேன். [சபிகர்கள் திகைத்து நிற்கிறார்கள்.]

அரி :—[தனக்குள்.] காசி புண்ய க்ஷேத்திரம்; இவ்வளவேனும் அநுக்கிரம் செய்தது விசேஷம் தான்; [வெளியில்.]

மகாமுனிவரே! அடியேன் தங்ய ளுயினேன்; சென்று வருகிறேன்; அநுக்கிரகம் செய்யவேண்டும். [வணங்குகிறுன்.]

விசுவா :—நல்லது; ஆயுஷ்ய மஸ்து; சென்றுவா! என் சிஷ்யர்களில் ஒருவன் அங்கு உன்னைக் காண்பான்; அவனிடம் தடையின்றி அனுப்பிவிடு.

அரி :—மகா பாக்கியம். [செல்கிறுன்.]

விசுவா :—[தனக்குள்.] இன்னெருவிசை கேட்டுப் பார்க்கலாமா? ஆம். [வெளியில்.] மகாராஜனே; ஒரு வார்த்தை; மனத்தில் ஒன்றும் கலக்கம் வேண்டாம்; இவ்வளவும் உன்னைப் பரிக்ஷிக்க செய்ததன்றி வேறன்று; தபசியாகிய எனக்கேன் இந்த அரசு? என் அருமைச் சிஷ்யைகளை—

அரி :—பூஜ்யரே, அந்த வசனம் மாத்திரம் வேண்டாம்; மன்னிக்கவேண்டும்; சென்று வருகிறேன்.

விசுவா :—[கோபம் கொள்கிறுன்.] என்ன சொன்ணுய்? வேண்டாம்; நல்லது; சென்றுவா! [அரசன் செல்கிறுன்; சத்தியகீர்த்தி வழிவிடச் செல்கிறுன்.]

அரி :—சத்தியகீர்த்தி! மகாமுனிவர் அநுக்கிரகத்துக்குப் பாத்திரமாகும் காரியங்களையே தெரிந்து செய்யும்; என்னைப் பற்றி எப்பொழுதும் அவரிடம் எடுத்துப் பேச வேண்டாம்.

சத்திய :—மன்னிக்கவேண்டும்; முனிவரிடம் தொழில் செய்து கொண்டிருக்க இஷ்டமில்லை; அடியேனும் வந்துவிடப் போகிறேன்.

அரி :—அப்படிச் செய்யக்கூடாது, மகாமுனிவர் சாபத்துக்குப் பாத்திரமாக நேரிடும்; நான் மாத்திரம் தான் செல்ல வேண்டும்; என் க்ஷேமத்தை விரும்பியாவது நீர் இங்கிருக்க வேண்டியதுதான்.

சத்திய :—[திகைத்து நின்று] நான் இங்கிருப்பது சந்நிதானத்தின் க்ஷேமத்துக்கு அநுகூலமானால்—

அரி :—ஆம், நீர் இங்கிருப்பதுதான் எனக்கு இஷ்டம்; மகாமுனிவர் காத்துக்கொண்டிருக்கிறார்; செல்லும்; நான் அந்தப்புரம் சென்று சந்திரமதியை அழைத்துச் செல்கிறேன்.

சத்திய:—மகாபாக்கியம்; முனிவரை அனுப்பிவிட்டு வருகிறேன். அந்தப்புரம் செல்லுங்கள். [அரசன் மறைகிறான்; சத்தியகீர்த்தி விசுவாமித்திரரிடம் வருகிறான்.]

விசுவா :—சத்தியகீர்த்தி! நான் ஆச்சிரமத்துக்குச் செல்லவேண்டியிருக்கிறது; அரசர் இல்லாத குறைவு கொஞ்சமும் வெளிப்படாவண்ணம் யாவற்றையும் செம்மையாய்க் கவனித்துக் கொண்டு வாரும்; பின்பு வருகிறேன்.

சத்திய :—என் தொழிலை நிறைவேற்றி வருகிறேன்; இனி—

விசுவா :—நான் எல்லாவற்றையும் க்ஞான திருஷ்டியினால் அறிந்துகொண்டு விட்டேன். நீர் விலக இடம் கொடுக்க முடியாது; அரசர் தொழிலையும் நீர்தான் கவனித்து வரவேண்டும்; கவனமாயிரும்.

சத்திய:—[தனக்குள்.] அன்பில்லாத்தொழில். [வெளியில்.] அப்படியே. [கௌசிகன் சிஷ்யர்களுடன் மறைகிறான்; சத்தியகீர்த்தியோடு சபையோர்களும் வாடின முகத்துடன் மறைகிறார்கள்.]

# மூன்றாவது அங்கம்.

## களம் 1.

இடம் :—வனம்.

காலம் :—நண்பகல்.

[அரிச்சந்திரன் சந்திரமதி லோகிதாஸ்யன் மூவரும் பிரவேசிக்கிறார்கள்.]

லோகிதாஸ்யன் :—தந்தையே! பசி அதிகமாகின்றது. கால்கள் இரண்டிலும் உதிரம் வடிகின்றன; பார்வை தெரியவில்லை; இனி ஓரடியும் எடுத்து வைக்க அசக்தனாயிருக்கிறேன். [உட்காருகிறான்.]

அரிச்சந்திரன் :—அநாதரக்ஷகா! இதுவும் உனக்குத் திருவிளையாடலா? கற்றறிந்த பெரியோர்கள் உன்னைச் சருவக்ஞன் என்கிறார்களே! கட்டிக்கரும்பே! என்னைக் காட்டிலும் மகாபாபிகள் ஒருவரும் இருக்கமாட்டார்கள்; உன்னையும் உன் தாயாரையும் காப்பாற்றுவதற்குக் கூட அசக்தனாயிருக்கிறேன்; கடவுளே, எவ்வளவோ தவம் கிடந்து பெற்ற அருமை மகன், பசி யென்று பதறி யழவும், என்னையே விரும்பி மணம் புரிந்த மனைவி கால் முழுவதும் கொப்புளம் கொண்டு, நடக்கமுடியாமல் கண்ணீர் வடிக்கவும், கல்லினும் வலிய மனத்தினையுடைய கொடியவனாகிய நான், இந்தக் கஷ்டங்களை யெல்லாம் எதிரிலிருந்து காணவும் அந்தோ! [பெருமூச் செறிகிறான்.]

சந்திரமதி :—பிராணநாதா! தாங்கள் ஏன் விசாரப்படுகிறீர்கள்? இவ்வுலகம் ஒவ்வொருவரும் தங்கள் மனோபீஷ்டங்களை நிறைவேற்றிக்கொள்வதற்குத் தகுதியான பண்டசாலை அன்று; கோடியில் ஒருவருக்குக் கூட அந்த அரிய வரம் கிடைப்பது அரிது; இஃது ஒரு பெரிய பரிசோதனைச்

சாலே; ஒவ்வொருவரும் கஷ்டங்களை அநுபவித்தே தீரவேண்டும் என்பது கடவுள் கட்டளை.

" ஆவது விதியெனின் அனைத்தும் ஆயிடும்.
போவது விதியெனின் எவையும் போகுமால்.
தேவருக் காயினும் தீர்க்கத் தக்கதோ?
யாவரும் அறியொணு விசற் கல்லதே."

இது தெரிந்தது தானே; என் செல்வனே, சக்கிரவர்த்தியின் மகனாய்ப் பிறந்த உனக்கும் கஷ்டம் விடவில்லை; [அணைத்துக்கொள்கிறாள்; பாதங்களைப் பிடித்துக் கொண்டு] இந்தக் கோலத்தில் உன்னைக் காண்பதற்கு என் கொடுங்கண்கள் கொஞ்சமும் கூசவில்லையே! [முகத்தில் அறைந்து கொள்கிறாள்.]

லோகி:—அன்னையே, ஏன் வருந்துகிறீர்கள்? காதை அடைக்கின்றது; நன்றாய் விழித்தும் கண்கள் தெரியவில்லை; உடம்பு இன்னது செய்கின்றதென்றும் சொல்லக் கூடாத நிலைமையில் இருக்கிறேன்; நா வரள்கின்றது; சிறிது நன்னீர் தந்தாலும் நலமாயிருக்கும். [கண்களை மூடிக் கொண்டு மடியிற் சாய்கிறான்.]

சந்திர:—[அணைத்துக்கொண்டு] தருகிறேனப்பா; [அரசனைப்பார்க்கிறாள்.]

அரி:—இதோ கொண்டுவந்துவிட்டேன். [எழுந்திருக்கிறான்.]

சந்திர:—உன் தந்தை கொண்டுவருங்காறும் இப்படிவா! இந்தச் செடி நிழலில் சற்று இருப்போம்; [எடுத்துச் செல்கிறாள்.]

அரி:—" அன்றே என்றன் ஆவியும்
உடலும் உடைமை யெல்லாமும்
குன்றே யனையாய் என்னையாட்
கொண்டபோதே கொண்டிலையோ!

இன்றோர் இடையூறெனக்குண்டோ
என்றோள் முக்கண் எம்மானே!
நன்றே செய்வாய் பிழை செய்வாய்
நானோ இதற்கு நாயகமே."

சர்வேசா! இந்தக் கஷ்டங்கள் பிறருக்கு நேரிடினும் காணச்சகியேனே! இந்தத் தண்டனைகளை அடையும் வண்ணம் உலகத்திற்குச் செய்தபிழை என்னவோ தெரியவில்லை; மகனும் மனைவியும் இப்பொழுதே உயிர் துறப்பார்கள் போல் இருக்கிறது; வாராணவியை அடையுங்காறும் இந்தக் கஷ்டங்களுக்கு ஆற்றமாட்டார்கள்; இருவரையும் ஒருங்கே துறந்து சிறகு பறிகொடுத்த பறவையைப்போல நாம் மாத்திரம்; ஏது? [யோசிக்கிறான்.] அரசைப்பற்றிச் சிறிதும் கவலையே யில்லை; உத்தமபாத்திரத்தில் விநியோகப்படுத்தி விட்டோம்; மகாதபஸ்வி; பரிக்கும் ஆற்றல் நிரம்பியவர்; நல்ல அநுபவசாலி; நன்னீர் கிடைக்கவில்லையே! இன்னும் சென்றுபார்க்கலாமா? [உலாவுகிறான்.] இருபது வைகலும் கழிந்தன; எப்படிச் சேகரிக்கப்போகிறோம்? விதியே, உன் பலமே பலம்; ஆ! இஃதேது! கொடிமுந்திரிப் பழங்கள் காணப்படுகின்றன; கடவுளுக்கு இதுவும் ஒரு திருவிளையாடல்போலும்; ஆம், அவர் அமைப்பை அறிய வல்லவர் யார்? இதில் கொஞ்சம் பறித்துக்கொள்ளலாம்; அவர்களுக்கும் சற்று ஆறுதலாயிருக்கும்; [பறிக்கிறான்.] சீ! மூடமனமே; என்ன உன் யோசனை நிகளச் செல்கின்றதே; இந்தப்பழங்களைப் புஜித்தேனும்—நன்றாயிருக்கின்றது; மானம், குலம், கல்வி, வண்மை; இவைகளை முழுவதும் கைவிட்டு, என்ன மடைமை? இன்னமும் இருந்து வாழ விரும்புகின்றாய்; நிலையற்ற யாக்கை; நிலையற்ற உலகம்; நிலையற்ற இன்பம்; ஏன் இருக்கப் பிரியப்படவேண்டும்? உனது

சொந்த, விரும்பி மணம்புரிந்த, உயிரினும் சிறந்த, மனைவி மக்களையும் காப்பாற்றச் சக்தியற்று நிற்கின்ற நீ, இனி உலகத்துக்கு என்ன உபகாரம் செய்ய இருக்கவேண்டும்; அவர்கள் இறந்து படுதலைக் காண்பதற்கு முந்தி, சீ! ஏன் இப்பாழும் பழம்? [எறிந்து விடுகிறான்.] உலகத்தைக் காப்பாற்றிக் கொண்டிருந்த நாம், இப்பொழுது மற்றொருவரை வேண்டுகிறோம்; [செல்கிறான்.] அவர்கள் கதி என்னவாகும்? [நிற்கிறான்.] எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்களே! [யோசனையை அபிநயித்து] அல்லாவிடின், குற்றவாளியாய் விடுவோம்; சிறிது எடுத்துக் கொள்ளலாமா? ஆம்; [திரும்பிச் செல்கிறான். கொடிமுந்திரிக் கொடியின் அருகிற்சென்று] நண்பனே! என்னை மன்னிக்கவேண்டும்; உன்னை அறியாது இகழ்ந்து விட்டேன்; [பறிக்கிறான்; அது கீழே விழுந்து விடுதலும் அதைப் பார்த்து] சற்பாத்திரமாயிருந்தால், உதவியேயிருப்பாய்; எனக்கு உபகாரப்படுவதில் உனக்குப் பாபமே உண்டாகும்; பரோபகாரத்துக் கென்றே அவதாரம் செய்த மகா பரிசுத்தனாகிய உன்னை-இந்த ஜடப் பொருளுக்கு இருக்கும் அறிவும் நமக்கு இல்லாமற் போய்விட்டதே! தானசீலனே! உன்னைக் கும்பிடுகிறேன்; [வணங்குகிறான்.] பயனற்றவனாகிய என் மனைவி மக்களுக்குக் கொஞ்சம் உதவி செய்யும் வண்ணம் இன்னமும் வெட்கமின்றி உன்னை வேண்டிக்கொள்கிறேன்; [பறித்து எடுத்துக் கொண்டு] இது போதும்; தர்மிஷ்டனே! விடை பெறுகிறேன்; உன் உதவி மறக்கற்பாலதன்று; நீயும் உன் கிளைகளும் உலகில் என்றும் நின்று நிலவவேண்டும்; [செல்கிறான்.] நாம் இறப்பது எல்லா விதத்துக்கும் நல்லதாகவே முடிகின்றது; [நின்று கொண்டு] ஓ! கடனாளி யாயிற்றே; நற்கதி எங்ஙனம் கிடைக்கும்? யாவும் அதற்குப் பின்புதான்; [ஒரு பொய்கையை அடைந்து]

தடாகத்தையும் அடைந்து விட்டோம்? பாத்திர ஹீனனாயி ருக்கின்ற நாம்—இப்பொழுது நமக்குக் கமல பத்திரங்கள் தாம் பாத்திரமாக வேண்டும்; [இலை பறித்து அதில் தண்ணீர் எடுத்துக் கொள்கிறான்.]

"என் செயலால் ஆவதொன்றுமில்லை; இனித் தெய்வமே! உன் செயலே யென்று உணரப் பெற்றேன்"

விசுவேசா! உன் திருக்குறிப்பின் வண்ணம் இந்தப் புனலையும் பழத்தையும் ஏந்திச் செல்கிறேன்; [திரும்புகிறான்.] இனி நமக்குக் கதி என்ன? அதுவா? சீ! தின்று துப்பி யது; இனிப் பொருந்தாது; [யோசிக்கிறான்.] கடனைக் கொடு த்த பின்பு தவம் செய்வதே தகுதி; மனவமைதி, மறுமைச் செல்வம் இவ்விரண்டும் ஒருங்கே சித்திக்கக் கூடியது அது தான்; எல்லாவற்றிற்கும் இப்பொழுது அவர்களைக் காண லாம். [மறைகிறான்.]

---

## களம் 2.

இடம் :—வனம்.
காலம் :—நண்பகல்.

[சந்திரமதியும் லோகிதாஸ்யனும் பிரவேசிக்கிறார்கள்].

சந்திரமதி :—கண்மணி! கானகத்தில் நீ இப்படிப் பசித்துக் களைத்து நிற்பாய் என்று கனவிலும் நினைத்தேன் இல்லையே; தண்ணீரை நாடிச்சென்ற உன் தந்தையையும் காண்கிலேன்; அவரும் பசியினால் களைத்து வீழ்ந்துவிட் டாரோ? காட்டு மிருகங்கள் அதிகமாயிருக்கிறதே; என்ன செய்வேன்? தெய்வமே! உன்னையே நம்பியிருக்கிறேன்; உலகங்களையெல்லாம் ஒரு குடையில் ஆண்ட சக்கிரவர்த்தி,

பட்டினிகிடந்து, புனலை நாடிக்கொண்டு, தானே சென்றார் என்றால், என்ன செல்வம்? பயனற்ற செல்வம்;

"கூத்தாட் டவைக்குழாத் தற்றே; பெருஞ்செல்வம் போக்கும் அதுவிளிந் தற்று."

குழந்தாய்! சற்று உன் கண்களை விழித்துப்பார்; இதோ உன் தந்தை வந்துவிடுவார்; வாடி வதங்கி, மேனி குலைந்து, புனலை இழந்த மச்யமாய்விட்டாயே;

லோகி :—[கண்களை விழித்துக்கொண்டு] அன்னையே! அழ வேண்டாம்; என்னால் சிறிதும் நடக்க முடியவில்லை; தந்தை எங்கே! இன்னும் வரவில்லையா?

சந்திர:—சீக்கிரம் வந்துவிடுவார்; சற்றுத் தைரியப் படுத்திக்கொள்.

[அரசன் பிரவேசித்துக்கொண்டே.]

அரி :—குழந்தாய்! இதோ வந்துவிட்டேன்; இந்தா, இந்தக் கொடிமுந்திரிப்பழத்தில் கொஞ்சம் எடுத்துக்கொண்டு இந்த நன்னீரைப் பருகு! சற்று ஆறுதலாயிருக்கும்! எனக்குப் புத்திரனாய்ப் பிறந்ததற்கு வேறு இதைக்காட்டிலும் என்ன சுகம் கிடைக்கப்போகின்றது? [கொடுக்கிறான்; பெற்றுக்கொள்கிறான்.] பெண்ணே, சந்திரமதி! நீயும் சிறிது எடுத்துக்கொண்டு களையாறு; ஜகதீசா, அரசர்களை யெல்லாம் வெறுத்து, என்னையே விரும்பி மாலைசூட்டின அரச குமாரிக்கு.—

சந்திர :—தங்களை ஏன் வெறுக்கிறீர்கள்? அடியாள் துரதிர்ஷ்டம்! சக்கிரவர்த்தியவர்களையும் இந்தக் கோலம் காணச் செய்தது; [கை யேந்துகிறான்; கொடுக்கிறாள்.] தாங்

களும் எடுத்துக்கொள்ளலாமே; இப்படியிருங்கள். [உட்கா காருகிறான்.]

லோகி :—தந்தையே ! இந்தப் பழங்கள் அமிழ்தினும் விழுமிதாயிருக்கின்றன ; பசியும் களையும் பறந்துவிட்டன ; அம்மா! எனக்கு இன்னும் கொஞ்சம் தாருங்கள்.

சந்திர :—பெற்றுக்கொள் அப்பா ! [கொடுக்கிறாள்.] கொடிய ராக்ஷஸி; இந்த அற்பப் பழத்தைச் சக்கிரவர்த்தியவர்களுக்கும் இடத் துணிந்துவிட்டேன். [அரசனுக்குக் கொடுத்துத் தானும் அருந்துகிறாள்.]

அரி :—ஸ்ருதயேசுவரி ! இப்படி எத்தனைநாள் கஷ்டங்களை அனுபவித்துக்கொண் டிருக்கலாம்; ஆதலால், நான் ஒன்று நிர்மானித்திருக்கிறேன்.

சந்திர :—என்ன ?

அரி :—முனிவர் தவணையில் இன்னும் இருப்பது இருபது வைகல்தான்.

சந்திர :—அந்தோ ! இந்தக் கோலம்கொண்டு இருபது நாள்கள் ஆய்விட்டனவா ?

அரி :—ஆம், சென்றன ; காசிப் பட்டணத்தைச் சேருவதற்கு இன்னும் பதினைந்து தினங்களிற் குறையாது ; அப்புறம் மிஞ்சுவன ஐந்தே நாட்கள்தாம்; அதற்குள் பொன்னைச்சேகரிக்கவேண்டும் ; நிமிஷம் அதிகமானாலும் அவர் அங்கீகரிக்கமாட்டார் ; ஆதலால் நீ சிறுவனோடு தாய்வீடு போய்ச் சேர்ந்தால் முனிவர் கடனை இறுத்துவிட்டு உன்னை வந்து காண்கிறேன்.

சந்திர :—பிராணநாதா! இந்தச் சமயத்தில்தானு எனக்குத் தாய்வீடு வேண்டும்? அடியாள் ஒரு விலைமகள் அல்லவே; தாங்கள் வனத்தில் வருந்தவும், கொடியவளாகிய நான் இனத்தைச் சேர்ந்து களிப்படவும், அந்தோ! தெய்வமே!!

"குற்றமில் காகுஷிக் குதலைவாய் மக்களையும்
பெற்றுக் கொளலாம் பெறலாமோ—கொற்றவனே!
கோக்கா தலனைக் குலமகளுக் கென்றுரைத்தாள்;
நோக்கால் மழைபொழியா நொந்து"

அரி :—என்னை ஏன் வருத்தத்துக்கு உள்ளாக்குகின்றாய்! நான் சொன்னது உன்னைப்பற்றி யன்று; அறியாச் சிறுவன், மிகவும் இளைத்துக் களைத்துவிட்டான்.

லோகி :—தந்தையே! நான் அரைக்கணமும் தங்களைப் பிரிந்து இருக்கவே மாட்டேன்; இன்னும் பதினைந்து நாளைக்குத் தானே நடக்கவேண்டும்; இந்தக் கொடிமுந்திரிப் பழத்திலேயே கொஞ்சம் பறித்து எடுத்துக் கொள்ளுங்கள்; நடந்து வருகிறேன்.

அரி :—என் செல்வமே, உன் வசனம் எனக்குப் பதிஞயிரம் அரசு கிடைத்ததுபோல் ஆயிற்று; இனி, இதனிலும் கஷ்டங்கள் நேர்ந்தாலும் அவற்றைச் சிறிதும் பொருள்செய்யவே மாட்டேன்; நீ எங்கும் செல்லவேண்டாம். [அணைத்துக்கொள்கிருன்.]

சந்திர :—நாதா, ஆதவன் கொடுமை சற்று அடங்கியிருக்கின்றதே? மெள்ளச் செல்லலாம்; எழுந்திருங்கள்

அரி :—குழந்தாய்! எழுந்திரு; செல்வோம். [யாவரும் மறைகிருர்கள்.]

---

## களம் 3.

இடம் :—சத்தியகீர்த்தியின் அரண்மனை.

காலம் :—மாலை.

[சத்தியகீர்த்தி பிரவேசிக்கிறான்.]

சத்திய :—"சடையானே, தழலாடி, தயங்கு மூவிலைசூலப்
படையானே, பரமேஷ்டி, பசுபதி, மழுவெள்ளை, [ஞன்
விடையானே, விரிபொழில்சூழ் பெருந்துறையாய், அடியே
உடையானே, உனையல்லால் ஒருவரைமற் றறியேனே."

அற்புத சக்தி வாய்ந்தவனே, இன்னமும் இந்த அமைச்சுத் தொழிலைச் சுமப்பதில் உமக்குச் சம்மதம் இருந்தால் நான் என்ன செய்யப் போகிறேன்; [யோசிக்கிறான்.] 'பொருந்துவன போமின் என்றாற் போகா' தரும தேவதையாகிய சக்கிரவர்த்தி யவர்களுடன் பிறந்தது முதல் பழகிவிட்டு இப்பொழுதும் தொழிலை உவக்கின்றோம்; சீ! என்ன மடைமை; நாமும் அப்பொழுதே சென்றிருக்கவேண்டும்; இவர் அரசு புரிந்தால் என்ன? அன்றித் துறந்தால்தான் என்ன? மனநட்புப் பொருந்தி செய்வதற்குக் கொஞ்சமும் சம்மதம் இல்லை; இனிப், பணநட்புப் பொருந்தி, இவரிடம் கைக்கூலி பெற்று—ஏன் இப்பாழ்ம் பணம்?

"பொருவறு பந்தமெல்லாம் புணர்த்திடும்; தெய்வ சிந்தை
ஒருவமே விட்டு நிற்கும்; உறக்கமும் இறக்கச் செய்யும்;
கருவினுட் புகுத்தும்; இன்ன கரிசுகண் டதனை லன்றோ
இருநிலத் திடைவெ றுக்கை என்மனார்; புலமை சான்றோர்"
யாவர்க்கு வேண்டும்?

"அத்தமும் வாழ்வும் அகத்துமட்டே." [உலாவுகிறான்.] உலகம் அடங்கலும் ஜயித்துத் திரட்டிவைத்த திரவியங்

கள் எல்லாம், சக்கிரவர்த்தி யவர்களுக்கு என்ன உதவி செய்தன? ஆபத்தை வளர்ப்பதற்கு அவ்வளவும் அநுகூலமாயின; சிறிதும் இரக்கம் பாராட்டவில்லையே; தலைமுறை தலைமுறையாய், உத்தம க்ஷத்திரியர்களுக்கே வாழ்க்கைப் பட்டுவந்த இராஜ்யலக்ஷ்மி, இப்பொழுது, தனக்குச் சந்நியாசியைத் தலைவனாகத் தெரிந்துகொண்டிருக்கிறாள்; ஆம், ருசியை மாற்றி உண்ணவேண்டும் அல்லவா! வசுமதி! இப்போதைய புதிய கணவனோடு நன்றாய்க் கூடிச் சுகித்திரு; [உலாவுகிறான்.] அவள்தான் என்ன செய்வாள்? சுவயாதீனமற்றவள்; சருவமும் துறந்த சந்நியாசிக்குச் சக்கிரவர்த்திப் பட்டமேன்? சிங்காதனத்திலும் அமர்ந்திருக்க மாட்டார்களே; [கௌளி யொன்று சொல்லுதலும் அதைக்கேட்டு] ஓ! இதன் பயன் கெட்டதன்று; [நிதானிக்கிறான்.] ஆம், இராஜ்யத்தை மாத்திரம் பெற்றுக்கொண்டாரே யன்றி ஒரு தினமாவது கொலு மண்டபத்தில் உட்காரவே யில்லை; சந்நியாசி உட்கார்ந்தால், சீர் குலைந்துவிடும் என்கிற உண்மையை நினைந்துதான், நம்மைக் கொண்டே யாவற்றையும் நடத்துகின்றாரோ? என்னவோ? இருக்கலாம்; யாவர் கண்டவர்? [யோசிக்கிறான்.] அருந்ததி என்றால் நம் அரசிக்கே தகும்; அகண்ட பூமண்டலமும் அரை நிமிஷத்தில் அகன்று கழிந்ததற்கு, அம்மவோ! என்ன பெருந்தகைமை; அணுவளவும் சிந்திக்கவில்லையே; [உலாவுகிறான்.] சக்கிரவர்த்தி கௌசிகருக்குக் கொடுத்துவிட்டேன் என்றால், இப்பொழுதுதான் பயன் பெற்றோம் என்றார்.

“காதல் மனையாளும் காதலனும் மாறின்றித்
தீதில் ஒருகருமம் செய்பவே—ஓதுகலை
எண்ணிரண்டும் ஒன்றுமதி யென்முகத்தாய்! நோக்கு
கண்ணிரண்டும் ஒன்றையே காண்.”
[மால்;

என்பதை இவர்களிடத்தில்தான் கண்டோம்; என்ன கருணை; என்ன அன்பு; நாம் வணங்கி வேண்டியதற்குக் 'குறிப்பின் வண்ணம் நடந்து அவருக்குச் சந்தோஷம் உண்டாக்குங்கள்; அதுதான் உங்களுக்கு அழகு' என்று கூறினார். அப்படிப்பட்ட என் அம்மை, சக்கிரவர்த்தினி, இப்பொழுது கானகத்தில் எந்தப்பாடு படுகின்றார்களோ? சர்வேசா! இதுவும் உமக்கொரு திருவிளையாடலா? [யோசிக்கிறான்.] அவர்கள் அங்ஙனம் வருந்த, நாம் அமைச்சுத்தொழிலிற் பொருந்தி அருந்தவனை உவந்து—அந்தோ! தெய்வமே! [தூதனொருவன் பிரவேசித்து வணங்குகிறான்.] என்ன சங்கதி?

தூதன்:—கௌசிக முனிவர் அனுப்பவந்தவராம்; ஒரு பிராமணர் வந்திருக்கிறார்.

சத்திய:—உடனே வரச்செய். [செல்கிறான்.] இவரை அனுப்புவதற்குக் காரணம் என்ன? அவரல்லவோ வரவேண்டும்; வந்தால் தெரிகின்றது; [சுப்ரதீபன் பிரவேசிக்கிறான்; கரத்தைக் குவித்துக்கொண்டு] இப்படி, இப்படி; வரவேண்டும்; [ஆசனத்தைக்காட்டி வணங்குகிறான்.]

சுப்பிர:—[உட்கார்ந்துகொண்டு] தீர்க்காயுஷ்யமஸ்து; இருங்கள்; [சத்தியகீர்த்தி உட்காருகிறான்] குருசிரேஷ்டர் கவுசிகர், இந்த ஸ்ரீமுகத்தைத் தங்களிடம் சேர்ப்பிக்கக் கட்டளையிட்டிருக்கிறார்; [கொடுக்கிறான்: பெற்றுக்கொள்கிறான்.]

சத்திய:—[படித்துப்பார்த்து] பூஜ்யரே, ஆந்நிகங்களை முடித்துக்கொண்டதும் இராஜசபைக்கு எழுந்தருளுங்கள்; ஆங்கு விண்ணப்பித்துக் கொள்கிறேன்.

சுப்பிர:—அதுதான் உத்தமம்; ஆந்நிகத்துக்கும் காலாதீதமாகின்றது; சென்றுவருகிறேன். [எழுந்திருக்கிறான்.]

சத்திய :—அப்படியே; [வணங்குகிறான்; செல்கிறான்; கடிதத்தைப் பார்த்துக் கொண்டே ஒரு ஆசனத்தில் உட்காருகிறான்.] இஃதென்ன வியப்பு! 'இனி அயோத்திக்கே வரமுடியாது' பின்பு யாவர் அரசு நடத்துவார்கள்? சிறிதும் நம்மால் முடியாது; விடுதலை அடையவேண்டுமென்று எழுதியதற்குப் பதிலையே காணோம்; [எழுந்து உலாவுகிறான்.] 'உன்னால் விரும்பப்படும், சிங்காதனத்துக்கு யோக்கியனை, சருவ சிலாக்கியனை, சில நாள்களில் கொண்டுவரப்படும்'; இஃதென்ன? இப்படி யார் இருக்கிறார்கள்? அவரோ தபஸ்வி; சந்ததியில்லை; வேறு யாவர்? [யோசிக்கிறான்.] 'உன்னால் விரும்பப்படும்' என்றிருக்கின்றது; சக்கிரவர்த்தியவர்களைத் தவிர்த்து விரும்பப் படுவதற்கு நமக்கு யார் இருக்கிறார்கள்? சரி! மேல், 'விடுதலை செய்வதற்கு நான் அதிகாரி யல்லேன்' இஃது என்ன வார்த்தை? இவ்விடத்தில் தான் விசேஷம் இருக்கின்றது; 'வேந்தர் இல்லாத குறைவு வெளிப்படா வண்ணம் அடக்கியாளும் அதிகாரம் முழுவதும் உனக்குக் கொடுத்து விட்டேன்; இஃதெப்படி? முன்னுக்குப் பின் முரணாயிருக்கின்றதே; விடுதலை செய்ய மாத்திரம் தான் அதிகாரி யல்லவாம்; 'இனி, அரச காரியங்களுக்கு என்னைக் கொஞ்சமும் எதிர்பார்க்க வேண்டாம்;' மற்று, யாவரை எதிர்பார்ப்பது? 'விசேஷங்களுக்கு அறிவிக்கிறேன்;' ஒன்றுமே வேண்டாதவருக்கு விசேஷம் என்ன இருக்கின்றது; இஷ்டமில்லாத ராஜ்யத்தைக் கஷ்டப்பட்டு வாங்கி—ஒருகால், சக்கிரவர்த்தியவர்களுக்கே திரும்பவும் ஒப்புவித்து விடுவாரோ? இது வீண் பைத்தியம் தான்; பெற்றுக்கொண்டே யிருக்கமாட்டார்; சீ! இல்லை; அப்படித்தான் நினைக்கச் செய்கின்றது; சோதிடசாஸ்திரிகளும் சொல்கிறார்கள்; இதுவுமன்றி 'அடியேன் விடுதலை பெறுவதற்கு எழுதியிருக்கிறேன்' என்ற

தற்கு, 'நீ எவ்விதத்திலும் இப்பொழுது விலகக்கூடாது' என்று, அன்று வசிஷ்டரும் குறிப்பித்திருக்கிறார். இவற்றை யோசித்தால் ஐயப்பாடாகவே யிருக்கிறது; எல்லாவற்றிற்கும் இன்னும் சில நாட்கள் இருந்து பார்க்கலாம்; 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' பரம்பொருளே, உன்னையே நம்பியிருக்கிறேன்.

"எனக்கெ னச்செயல் வேறிலே; யாவும்இங் கொருநின்
றனக்கெ னத்தகும் உடல் பொருள் ஆவியும் தந்தேன்;
மனத்த கத்துள வழுக்கெலாம் மாற்றி எம்பிரான் நீ
நினைத்த தெப்படி யப்படி யருளுதல் நீதம்."

[உலாவுகிறான்.] அதிக நேரமாய்விட்டது; அவர் வந்து காத்துக்கொண்டிருப்பார்; சபைக்குச் செல்லலாம். [மறைகிறான்.]

---

## களம் 4.

இடம் :—தபோவனம்.

காலம் :—காலை.

[விசுவாமித்திரன் பிரவேசிக்கிறான்.]

விசுவாமித்திரன் :—இதுவே இயற்கையாய்விட்டது; ஒன்றை நினைத்துச் செய்தால் அது வேறொன்றாய் முடிகின்றது; ஆபத்தை உண்டாக்குவதும் அதை அடக்குவதுமே இப்பொழுது நமக்குப் பெருந்தொழில். [உலாவுகிறான்.] அரசர்க்கரசன்; சக்கிரவர்த்தி; நிரம்பிய சுகத்தில் இருந்தவன்; கஷ்டங்களைச் சகிக்கமாட்டான் என்று உத்தேசித்தால், நம்மினும் அதிகமாகவே அங்கீகரிக்கிறான்; குறை கூறுகின்றதும் இல்லை; ஆ! ஆ!! எத்தனை ஆபத்துக்கள்! ஒன்றாக்காவது சலித்தானா? [யோசிக்கிறான்.] மனைவியா! அம்ம

வோ!! அவனுக்குமேல் இருக்கிறாள்; அவனை நினைக்கும் பொழுதே நடுக்கம் எடுக்கின்றது;

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்."

பாலைவனங்கள் எத்தனை; கான்யாறுகள் எத்தனை; பூதகணங்கள் எத்தனை; அட! கொஞ்சமும் அஞ்சவேயில்லையே; நேற்று யாக்ஞவல்கியர், 'உலகம் அடங்கலும் அவனுக்காகத் துன்புறுகின்றது; இந்த உலகத்துக்கு அவன் ஒரு பெரிய ரோஜாமலர்' என்றார். [உலாவுகிறான்.] அரிச்சந்திரா! நீ உலகத்துக்கு முக்காலும் ரோஜா மலர்தான்; அதிற் சந்தேகமே யில்லை; அதன் மென்மைத் தன்மையையும் மணத்தையும் அடைகின்றவர் பலர்; நான் மாத்திரம் அதன் கூரிய முட்களையும் பயனற்ற இலைகளையுமே அடைந்து வருகிறேன்; [கையைப் பிசைகிறான்.] பக்ஷபாதம் செய்யும் துஷ்டா! நான் விசுவாமித்திரன்; அந்த மலரை வேகவைத்து ஒரு துளி அத்தராகவாவது அடையாமல் விடுவதில்லை; இந்தப் பயனற்ற இராஜ்யம் யாவர்க்கு வேண்டும், விசுவாமித்திரன் வேண்டுவது ஒன்றே யொன்றுதான்; விண்ணுலகத்துக்கும் அரசனாக்கிவிடுகிறேன்; அல்லையேல்; ஹதம்! [பூமியை உதைக்கிறான்.] ஹதம்!! ஆகட்டும், எங்குத் தப்பினாய்? ஒன்றல்ல; ஒன்பது பொய்; விழுந்து வேண்டச் செய்கிறேன்; [யோசிக்கிறான்.] ஆம், கரும்பைக் கசக்கித்தான் சுவை எடுக்கவேண்டும்; [உலாவுகிறான்.] மனிதர்களில் நம்மவனாய், பரிக்கும் ஆற்றல் பொருந்தியவனாய், மனத்தூய்மை உள்ளவனாய்—யாவர் இருக்கிறார்கள்? பதிவிரதை; சாம்பராய்விடுவார்கள்; [கண்களை மூடிக்கொண்டு யோசிக்கிறான்.] ஆம், கிடைத்துவிட்டான்; தருந்தவன்; இவனிலும்

தூய்மையுள்ளவர் இல்லை; ஒன்றாய் வைக்கலாமா? இல்லை, இல்லை; பிரித்துவிடுவதுதான் சிறந்தது; ஆயின், அவனுக்கு யார்? [கையைப் பின்புறத்தில் கட்டிக்கொண்டு] நிஷ்பக்ஷபாதி; [சிஷ்யனொருவன் பிரவேசிக்கிறான்.] தகும், தகும்;

காத்யாயனன் :—அடியேன் காத்தியாயனன். [வணங்குகிறான்.]

விசுவா :—[திடுக்கிட்டு] என்ன! என்ன சங்கதி?

காத்யா :—கண்வர் கவனப்படுத்தச் சொன்னார்.

விசுவா :—கண்வரா! எதற்கு? [யோசிக்கிறான்.]

காத்தியா :—இஷ்டி யாயிற்றே; போஜனமும்—.

விசுவா :—ஓ! சரி!! வற்கலங்களுடன் சித்தமாயிரு; இதோ வந்துவிட்டேன்; [காத்தியானன் வருகிறான்.] அதிக வேலைகள் பலவும் இப்பொழுதான் வருகின்றன; [யோசிக்கிறான்.] 'உகிர்ச்சுற்றின்மீது அம்மி விழுந்ததை யொப்ப' விடுதலை அடையவேண்டுமோம்; ஒரு காலில் நிற்கிறான்; இராஜ்யபாரமா? அம்மவோ! அது இராக்ஷஸ வேலையாயிற்றே; அவன் விலகி விட்டால்—அப்புறம் என்ன விருக்கின்றது? இப்பொழுதே வசிஷ்டனுக்கு வணங்க வேண்டியதுதான்; நாம் என்ன செய்யலாம்; சபதத்தின் முடிவுகாறும் இருந்தே தீரவேண்டும்; எல்லாவற்றிற்கும் இப்பொழுது இஷ்டிக்குச் சென்றுவரலாம். [மறைகிறான்.]

---

## களம் 5.

இடம் :—வனம்.

காலம் :—நண்பகல்.

[அரிச்சந்திரன் சந்திரமதி லோகிதாஸ்யன் மூவரும் பிரவேசிக்கிறார்கள்.]

அரிச்சந்திரன் :—

“உற்றாரை யான் வேண்டேன்; ஊர்வேண்டேன்; பேர்வேண்டேன்;
கற்றாரை யான்வேண்டேன்; கற்பனவும் இனியமையும்;
குற்றாலத் தமர்ந்துறையும் கூத்தா நின் குரைகழற்
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே.”

சர்வேசா! அரசகாலத்தில் அடையமுடியாத இன்பங்களை யெல்லாம் இப்பொழுது அனுபவிக்கிறேன்;

சந்திர:—நாதா, எப்பொழுதும் தங்கள் அருகு இருத்தலை இழக்காதிருக்கின்ற இந்த வாழ்க்கையே எனக்கும் இன்பமாக இருக்கின்றது.

அரி:—ஆம், நானும் இதற்குச் சந்தோஷிக்கிறேன்.

லோகி:—அரண்மனை உணவுகளைக் காட்டிலும் இவைகள் ருசியாயிருக்கின்றன; நடப்பதும் இப்பொழுது வருத்தமாயில்லை;

அரி:—ப்ரியே சந்திரமதி! ‘விலையாகாத சரக்கை விற்றுத் தொலைத்த வர்த்தகனைப்போல’ அயோத்தியைத் துறந்ததுமுதல் விசாரமும் என்னை விட்டுப்பறந்தது; இரவும் பகலும் என்தாய் வசுமதியின் கரத்தைவிட்டுச் சிறிதும் அகலாதவனாயிருக்கிறேன்.

சந்திர:—இப்பொழுது தான் என் வாழ்நாட்கள் பயன் பெற்றன; என் அருமைக் கண்மணிக்கும் ஆருயிர்த் தலைவருக்கும் என் கரத்தால் உண்டி யுதவப்பெற்ற இந்தப்பாக்கியம், என் ஆயுள் முடிவுகாறும் அயோத்தியில் இருந்தாலும் கிடைக்கமாட்டாது.

லோகி :—மான் குட்டிகள் மருண்டு பார்ப்பது மனச் சந்தோஷத்தை வளரச் செய்கின்றது; பசும்புல் தரையில் துள்ளி விளையாடுகின்ற இவற்றைக் கண்டுகளிப்பதே எனக்குப் பேரானந்தமும் இளைப்பாறுதலுமாக இருக்கின்றன; இந்த விடத்திலேயே இருந்து விடலாமே. [அரசனும் அரசியும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கிறார்கள்.]

அரி :—முனிவர்க்குத் தரவேண்டிய பொன்னைக் கொடுத்துவிட்டு இந்த இடத்துக்கே வந்து விடலாம்.

லோகி :—ஆயின், இன்னும் எத்தனை நாட்கள் நடக்க வேண்டும் ?

அரி :—மூன்றே நாள் போதும்.

லோகி :—அப்புறம் இங்கு வந்து விடலாமா ?

அரி :—யோசிக்கலாம்.

லோகி :—இப்பொழுது அந்த மான் குட்டியோடு மாத்திரம் சற்று விளையாடி வருகிறேனே ?

அரி :—தூரத்திற் செல்லாதே; இவ்விடத்திலேயே விளையாடிக் கொண்டிரு.

லோகி :—அப்படியே. [செல்கிறான்.]

அரி :—முனிவர் கடனை நினைந்தால—அந்தோ ! எவ்வண்ணம் அளிக்கப் போகின்றோம் ?

சந்திர :—ஆம், தவணையும் நெருங்கிவிட்டது.

அரி :—பொன் கிடைக்கும் வழி எப்படி ? முன் பின் அறியாத காசிப் பட்டணத்தில்—ஒன்றும் தோன்றவில்லை.

சந்திர :—அவரும் தவணையை அதிகப்படுத்த மாட்டார்; கடவுள்தான் கருணை செய்யவேண்டும்; ஒரு கால்—[யோசிக்கிறாள்.] அரசனிடம் வாங்கி அளித்துவிட்டால்—

அரி :—நாயகி! என்ன அறிவைத் தாழ்த்திக் கொள்ளுகின்றாயே?

"சினக்கதிர்வேற் கண்மடவாய்! செல்வர்பாற் சென்றீ
எனக்கென்னும் இம்மாற்றம் கண்டாய்—தனக்குரிய
தானம் துடைத்துத் தருமத்தை வேர்பறித்து
மானம் துடைப்பதோர் வாள்."

சந்திர :—[பயத்துடன்.] மன்னிக்க வேண்டும்; தவணை நெருங்கி விட்டதே யென்று சொல்லவந்தேன்; 'எண்ணற வெண்ணி எழுத்தறப் படிக்கினும், பெண்மதி பேதைமதி.'

அரி :—சூரியன் தாமரை நண்பனாயினும் கரையிலிருந்தால் காய்ந்து கொல்வான்; நிலை மாறுதலை நினைப்பூட்டினேன்.

சந்திர :—மறந்துவிட்டேன்; மற்று எப்படி யோசித்திருக்கிறீர்கள்?

அரி :—அதுதான் விளங்கவில்லை.

சந்திர :—அணிகலன்களும் அயோத்தியில் செலவாய் விட்டன.

அரி :—அதைப்பற்றி என்ன? இந்தக் கோலத்துக்கு இதுதான் சிறந்தது; [இருவரும் மௌனமாய் யோசிக்கிறார்கள்.]

சந்திர :—நாதா, வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கு அழுவானேன்? அடியாள் ஒன்று நினைத்திருக்கிறேன்; அந்தப்படி செய்தால்.—

அரி :—எப்படி?

சந்திர :—சக்கிரவர்த்தி யவர்களுக்குச் சொந்த உடைமை; அதை உபயோகப்படுத்துதல் அறவொழுங்கும் ஆகும்.

அரி :—ஒன்றும் விளங்கவில்லையே ?

சந்திர :—சற்பாத்திரத்தில் செலவழிப்பது சிலாக்கிய மானது ; அடியாள் இருக்கையில் விசாரம் என்ன ? மீட்டுக் கொண்டுவிட்டால் போகிறது ;

அரி :—[முகத்தை மூடிக்கொள்கிறான்.] சந்திரமதி! என்னைச் சுடாது சுடுகின்றாய் ; [திரும்பிக்கொண்டு.] அரிச்சந்திரா ! நீ மகா கொடியவன் ; உனக்கு இந்தத் தண்டனை தகுந்தது தான் ; மண்ணில் நடந்தறியாத மதிதயன் மகளை, மங்கையர்க் கரசியை, வனத்தில் இழுத்துவந்ததும் அன்றி—அந்தோ! அடிமையாக்கவும் துணிந்துவிட்டாய் ; மாம்ச விக்கிரயிகளும் சற்றுக் கூசுவார்கள் ; உன்னையே நம்பிய, வேறு துணையின்றிய, அரசகுமாரியை, அடிமைப்படுத்தி—உன்கடனுக்கு நீ ஏன் அடிமையாகக்கூடாது ?

சந்திர :—நாதா, யோசித்துப்பாருங்கள் . தங்களுக்கு நேர்ந்த இத்தனை துன்பங்களுக்கும் அடியாள்தான் முதற் காரணம் ; கௌசிகர் சிஷ்யைகளைத் தாங்கள்.

அரி :—வாயை மூடு ; மிருகத்தொழில் ; பாதிவிரத்தியம் பெண்களுக்குச் சொந்தமானது போலவே ஏகபத்னீவிரதம் புருஷர்களுக்குப் பூஷணம்.

சந்திர :—அடியாள் அடிமைப்பட்டால் சக்கிரவர்த்தியவர்கள் மீட்கலாகும்.

அரி :—அந்தோ ! கடவுளே, மனைவியையும் அடிமைப் படுத்த வேண்டுமா ? [கீழ் நோக்கியவண்ணம் துக்கிக்கின்றான்.]

சந்திர :—அடியாள் ஒருத்தி இருக்கையில் தாங்கள் அடிமைப்படுவது தருமம் அன்று ; உலகமும் கொள்ளாது;

[லோகிதாஸ்யன் பிரவேசிக்கிறான்.]

லோகி :—தந்தையே, நன்றாய் விளையாடினேன்! அலுப்புண்டாய்விட்டது.

அரி :—இப்படிவா! உடம்பு முழுவதும் வியர்த்துவிட்டதே. [தடவுகிறான்.]

சந்திர :—கனிகளையும் கொஞ்சம் எடுத்துக்கொள்கிறாயா?

லோகி :—தாருங்கள். [கொடுக்கிறாள்; பெற்றுக் கொள்கிறான்.]

அரி :—நாயகி! எனக்கும் பசியாயிருக்கிறது; பொய்கைக்குச் செல்லலாம்.

சந்திர :—குழந்தாய், வா! [யாவரும் மறைகிறார்கள்.]

---

# நான்காவது அங்கம்.

## களம் 1.

இடம் :—காசிப் பட்டணத்தின் ஒரு தெரு.

காலம் :—காலை.

[அரிச்சந்திரன், சந்திரமதி, லோகிதாஸ்யன், காத்யாயனன் ஆகிய நால்வரும் பிரவேசிக்கிறார்கள்.]

அரி :—விசுவநாதா, இந்தக் காசிப் பட்டணம் முழுவதும் கால் கடுக்கச் சென்று விலை கூறினும் கொள்வார் இல்லையே; இதுவும் உமக்கு லீலையா? குலத்தைக் கெடுக்கப் பிறந்த கோடரிக் காம்பாயினேன்; உலகத்தின் கொடுமைகளை நீக்கிப் பரிபாலித்துவந்த பரிதியின் குலத்தில், தருவதாய்ச் சொல்லியதையும் கொடுக்கச் சக்தியின்றி, நடைப்பிணமாய் நிற்கிறேன். ஆ! இந்த உலகத்தில் வறுமை எவற்றினும் கொடியது.

"தரித்திரம் களிப்பாம் கடலுக்கோர் வடவை; சாற்றும் எண்ணங்கள் வாழிடமாம்; தரித்திரம் பற்பல துக்கமும் தோன்றத் தக்கபேராகரம் என்ப; தரித்திரம் நன்மை சால்ஒழுங் கென்னும் தழைவனந் தனக்கு அழல் தழலாம்; தரித்திரம் கொடிய எவற்றினும் கொடிது அத்தகையதை ஒழித்தல் நன்றாமே."

இதனை அறிந்து தான் "கொடிது கொடிது வறுமை கொடிது" என்று கூறுகின்றார்கள் போலும்;

சந்திர :—பிராணநாதா, தைரியம் சிறந்த பூஷணமாயிற்றே;

"இடுக்கண்வந் துற்றகாலை எறிகின்ற விளக்குப் போல
நடுக்கம் ஒன்றுனும் இன்றி நகுக; தாம் நக்க போழ்தவ்
விடுக்கணை அரியும் எஃகாம்; இருந்தழுது யாவர் உய்ந்தார்?
வடுப்படுத் தென்னை யாண்மை; வருப வந்துறுங்கள்; அன்
[றே.

இப்படித் துன்புறுவது அழகன்று ; ஆபத்துப் போழ்திற்றான் அறிவு குன்றாதிருக்க வேண்டும் ; நம் துயரைக் கண்டால் கொள்கின்றவர்களும் பின்னிடைவார்கள்.

காத்:—[தனக்குள்.] அந்தோ ! இந்தத் தம்பதிகள் படும் கஷ்டத்தைப் பார்க்கக் கூடவில்லை ; இப்படி வருந்தி அவர் அடையவிருக்கின்ற பயனும் இன்னதென்று விளங்கவில்லை; ஒரு நிமிஷமும் அதிகமாக்கக் கூடாதாம்.

சந்திர :—நாதா, தவணை என்றுடன் முடிகின்றது ?

அரி :—நாளைக்குமேல் இல்லை.

சந்திர :—நம்மால் என்னசெய்ய முடியும், திருவருள் இன்றியமையாத சமயம் இதுதான் ; கொடுத்துவிடுவோம் என்று மாத்திரம் எனக்குள் ஒன்று சொல்லிக்கொண்டிருக்கின்றது ; ஆனால், இதன் நிச்சயம் எப்படியோ ?

அரி :—சுவாமி, தவணையைப் பற்றி ஏதேனும் சொல்லியதுண்டோ ?

காத்யா :—உண்டு ; அதிகப்படக் கூடாதென்று மாத்திரம் சொல்லியிருக்கிறார்.

அரி :—[யோசித்துக்கொண்டு] நியாயந்தான் ; எப்படி அதிகப்படுத்த முடியும் ?

காத் :—[தனக்குள்.] அவர் கொடுமையினால் வெல்லப் பார்க்கிறார் ; இவர்கள் பொறுமையினால் வெல்ல இருக்கிறார்கள் ; வது ; அவர் எண்ணம் சிறிதும் பலிப்பதாய்த் தோன்றவில்லை.

சந்திர :—நாதா, இங்கு நின்றுகொண்டிருத்தலிற் பயன் யாது ? மற்றொரு முறையேனும் சுற்றிப்பார்க்கலாம்.

அரி :—எங்குச் சென்றாலும் கேட்பார் இல்லையே.

சந்திர :—ஆதற்காக முயற்சியை மட்டுப்படுத்தலாகுமோ?

"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாதுஞற்று பவர்."

அரி :—சுவாமிகளே, தங்களுக்குச் சிரமத்தைக் கொடுக்கும் மகா பாபியாய்விட்டேன்.

காத்யா :—சக்கிரவர்த்தியவர்கள் இவ்வளவு கஷ்டப்படுகையில்—.

அரி :—இன்னொருமுறை அந்தப் பெயரை உச்சரியாதிருக்கப் பிரார்த்திக்கிறேன்; கொள்கின்றவர்களும் கூச்சப்படுவார்கள்.

காத்தி :—[தனக்குள்.] ஆ! என்ன விநயம்; என்ன அடக்கம்; [வெளியில்.] நித்திய கருமங்களை முடிக்கவேண்டும்; கங்கைக்குச் சென்றுவருகிறேனே.

அரி: —அப்படியே; [வணங்கிக்கொண்டு] வந்து கண்டு கொள்கிறேன். [மறைகிறான்.]

சந்திர :—நாதா, நாளைக்கு நிறுத்தக்கூடாதே?

அரி :—எப்படி நிறுத்தலாம்? முடியாது.

சந்திர :—ஆயின், வாருங்கள்; வர்த்தகர்வீதி முதலிய விடங்களுக்குச் சென்றுவரலாம்.

அரி :—முந்திச் சென்றதுதானே!

சந்திர :—ஆம்; சிலர் அப்பொழுது இல்லாதிருக்கலாம்.

அரி :—அப்படியா! செல்லலாம். [யாவரும் மறைகிறார்கள்.]

## களம் 2.

இடம்:—காசிப்பட்டணத்தின் ஒரு தெரு.

காலம்:—நண்பகல்.

[பிராமண னொருவன் பிரவேசிக்கிறான்.]

அந்தணன்:—அவர்பகைமையால் இவர்கள்மிகவும் வருந்துகின்றார்கள்; [யோசிக்கிறான்.] இந்தப் பரந்த உலகம் அடங்கலும் பெருந்துயர் உழக்கின்றன; என்ன தரும சங்கடம்; நம்மைக் கட்டாயப் படுத்துகிறார்; தபோதனமாம்; இந்தப் பாழுந்தனம் யாவர்க்கு வேண்டும்? பின்னை ஒருவரும் இல்லையாம்; ஏன்? நான் நான் என்று ஹவிர்ப்பாகத்துக்கு மாத்திரம் நாக்கை நீட்டுவதற் கில்லை; இவர் கண்ணுக்கு அக்னி ஒருவன்தான் அகப்பட்டுக்கொண்டான் போலும்; [உலாவுகிறான்.] கொல்லும் பேயும் கருணை கொண்டாடுகின்றது; ஆம், அபகாரமாவது செய்யாதிருக்கலாம்; எங்ஙனம்? அதற்கும் வழியில்லையே;

"நல்லது செய்யல் ஆற்றீ ராயினும்
அல்லது செய்யல் ஓம்புமின்; அதுதான்
எல்லாரும் உவப்ப தன்றியும்
நல்லாற்றுப் படூஉம் நெறியுமா ரதுவே."

மனவொற்றுமை சிறிதும் இன்றியே ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கின்றது. என்ன செய்யலாம்; மறுக்க விதியில்லை; [யோசிக்கிறான்.] தெய்வாதீனம்; அவன்றான் தீர்த்தயாத்திரை சென்றிருக்கிறான்; யார்? காளகண்டன்; ஆம், இதுதான் தகுந்தது; [பயனற்ற குறிப்புடன்.] நமக்கென்ன வந்தது? சொன்னதைச் செய்து விடலாம்; [கையைக்கட்டிக்கொண்டு] சீக்கிரம் கொடுத்தாலாவது உதவியாயிருக்கும்; இதைக் காட்டிலும் நம்மால் என்ன செய்ய முடியும்? ஆம், இப்

பொழுது அவர்களைக் கண்டுபிடிக்கச் செல்லவேண்டும். [மறைகிறான்.]

[திரைக்குள்.] அரசர் சபையில், அக்னி சாக்ஷியாய், அரைக்கணமும் பிரியேன் என்று மணப்புரிந்த மனைவியை அடிமைப் படுத்துகிறேன். அருமறை யறியும் அந்தணராயினும், மனுநெறி தெரியும் மன்னவராயினும், விலை பகர்ந்தளிக்கும் வர்த்தகராயினும், நற்றுதி புகலும் மற்றவராயினும் ஆருக; கொள்ளத் தடையில்லை; பெண்கள் தொழில் பலவும் வல்லவள்; அடக்கம் வாய்ந்தவள்; கற்புநெறி கடவாதவள்; இலக்ஷம் வராகனுக்கு அடிமைப் படுத்துகிறேன்; கொள்ளவாருங்கள்; கொள்ளவாருங்கள்.

ஒருவன்:—ஒருபெண்ணுக்கா இலக்ஷம்வராகன் விலை? நன்றாயிருந்தது; பைத்தியம் பிடித்திருக்கிறதா என்ன?

மற்றொருவன்:—இந்த அம்மணிக்குப் பணிவிடை புரிந்து பதம் பெறுதலைத் தவிர்த்துப் பணிவிடை பெற்றுக் கொள்கின்றவர் யார்? ஸ்ரீமகாலக்ஷ்மி யாயிற்றே.

வேறொருவன்:—ஆம், குலத்தோடு கொலைந்து விடுவார்கள்; அந்தோ! எதற்காக விலைப்படுத்துகின்றாரோ? என்ன கஷ்டமோ? ஒன்றும் தெரியவில்லை. [மறைகிறார்கள்.]

[காளகண்டன் பிரவேசிக்கிறான்.]

காள:—என்ன இங்கே? தாயைத்தொடரும் கன்றைப் போல ஜனங்கள் திரண்டு செல்கிறார்கள்; என்னவாயிருக்கலாம்; துன்பம் பெரிதா யிருக்கின்றது; [அரிச்சந்திரன், சந்திரமதி, லோகிதாஸ்யன் மூவரும் பிரவேசிக்கிறார்கள்.] ஸ்ரீமகா லக்ஷ்மியும் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியும்போல விளங்குகிறார்கள்; பனியால் மறைக்கப்பட்ட பாலசூரியனைப்போல முகங்கள் பொலிவழிந்துவிளங்குகின்றன; என்ன காலவித்தியாசமோ?

[உற்றுப்பார்க்கிருன்.] அனிச்சமலரைக் காட்டிலும் குழைந்து காணப்படும் அலத்தகப் பதங்கள், வெள்ளரிக்கனி யென்ன வெடித்து விளங்குகிறதே; அந்தோ! அந்தோ!! அவர் மனிதப்பிறப்பாகவே காணப்படவில்லை; கருணையைக் கனவிலும் கண்டறியாத கொடுமை என்பதன் திரண்ட வுருவம் தான்; சென்று விசாரிக்கலாமா? ஆம்; [சமீபம் சென்று] ஐயா, நீங்கள் யார்? வருந்தக் காரணம் என்ன?

அரி:—பூஜ்யரே, அடியேன் அயோத்திக்கு, இல்லை, இல்லை; இப்பொழுது அவனியில் அலைந்து திரியும் ஒரு அகதி; இவள் மகாபாபியாகிய என்னை மணந்தவள்; இந்தத் துக்கங்களை யெல்லாம் அநுபவிக்கப் பிறந்தவன் அச் சிறுவன்; கால வித்தியாசத்திஞல் மனைவியை அடிமைகூறி வருகின்றேன்.

காள:—மனைவியையும் அடிமைப் படுத்தும்படியான கஷ்டம் தலைக்கொண்டுவிட்டதா? அந்தோ! கொடுமை!! கொமை!!!

அரி:—ஆம்.

"யானை யெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்
சேனைத் தலைவராய்ச் சென்றோரும்—ஏனை
வினையுலப்ப வேருகி வீழ்வர்; தாம் கொண்ட
மனையாளை மாற்ருர் கொள".

என்பதில் அணுவும் தவறவே யில்லையே;

அரி:—அடியேன் அவ்வளவு உயர்ந்த செல்வத்தி இப்பொழுது இருக்கவில்லை; கௌசிக முனிவர்க்குக் கொடு சம் கடன் கொடுக்கவேண்டியதாய் விட்டது; வேறு வ இல்லாமையிஞல் விற்கத்துணிந்தேன்.

காள:—ஸ்ரீ மகா லக்ஷ்மி போன்ற இந்த மாதரசி அடிமைப் படுவதென்றால்—பாழும் தெய்வத்துக்குக் கண் இல்லையே.

அரி:—பூஜ்யரே, தெய்வத்தை வெறுத்தலிற் பயன் யாது?

"ஊழிற் பெருவலி யாவுள? மற்றொன்று
சூழினும் தான் முந்துறும்."

காள:—அந்தோ! ஆபத்தென்று தெரிந்தும் வெறுமனே செல்வது மகாபாபம்; ஏழைப்பிராமணன்; என்னால் என்ன செய்ய முடியும்?

அரி:—இவ்வளவு அன்பு கொண்டு விசாரித்தே அடியேன் செய்த பாக்கிய விசேஷம்தான்; இதனிலும் தாங்கள் என்ன செய்யலாம்? "தாம் தாம் முன் செய்தவினை தாமே அநுபவிப்பார்." பூஜ்யரே தங்களை இன்னாரென்று அறிய விரும்புகிறேன்.

காள:—நான் இந்தக்காசிப்பட்டணத்தில் மணிகர்ணிகா கட்டத்தில் வாழும் ஒரு ஏழை அந்தணன்; காளகண்டன் என்று சொல்வார்கள். [யோசித்துக்கொண்டு.] அப்படி எவ்வளவு பொன் கொடுக்க வேண்டியிருக்கிறது?

அரி:—இலக்ஷம் வராகன்.

காள:—அவ்வளவு மொத்தமா? நினைக்கவும் பயமாயிருக்கின்றதே; எப்பொழுது கொடுக்கப்படவேண்டும்?

அரி:—நாளைக்கு.

காள:—ஆ! அடுத்த நாளேயா?

அரி:—ஆம்.

காள:—ஆயின் செல்வவான்கள் வசிக்கும் வீதிக்குச் சென்று பார்க்கலாகுமே?

அரி :—அடியேனும் சற்றுதவிடம் இல்லை.

காள :—ஆம், அடிமை கொண்டுதான் என்ன செய்வார்கள். இவளுக்குப் பணிவிடை செய்வதற்கே இன்னொருத்தரை நியமிக்கவேண்டும்; அதனுற்றான் ஒருவரும் விரும்பவில்லை போலும்.

அரி :—அப்படி நினைக்கவேண்டாம்; பெண்கள் செய்வதற்குரிய தொழில்கள் பலவற்றையும் குறிப்பினுல் அறிந்து திருத்தமாய்ச் செய்வாள்.

காள :—அடிமை வேலை என்பது மகாகடினம்; சுகத்திலேயே வளர்ந்திருக்கின்ற இவள், பழக்கமுடையவர்களுக்கும் பயத்தை விளைவிக்கின்ற அந்த வேலையை ஒப்புக்கொள்வது—.

சந்திர :—உத்தமரே, யஜமானத் துரோகம் மகாபாபம் ஆயிற்றே ; எப்பொழுதோ செய்த வினையைத்தான் இப்பொழுது அநுபவிக்கிறேமே ; அடியாள் கொஞ்சமும் தவறமாட்டேன்.

காள :—ஜகதீசா, எனக்குத் திரண்ட செல்வம் இருக்கக்கூடாதா ? ஒருவர் துயரத்தைக் கேட்டால், கூடுமான வரையில் ஒத்தாசை செய்யவேண்டும் என்பது சாஸ்திரம்; நானே சக்தியற்றவனு யிருக்கிறேன் ; ஐயா, இதுகாறும் மெள்ள மெள்ள ஐம்பதினுயிரம் வராகன்தான் சம்பாதித்து வைத்திருக்கிறேன்; அதற்குமேல் என்னிடம் ஒன்றும் அதிகமாகக் கிடையாது ; உங்களைப் பார்த்து வெறுமனே செல்வதற்கும் மனம் தாளவில்லை ; அஃது உங்களுக்குச் சம்மதமானுல் தருகிறேன் ; வேலை செய்வதற்கென்று விசாரம் வேண்டாம் ; நாங்கள் ஸ்திரீ புருஷர்கள் இரண்டு பெயர்கள்

தான்; கிடைத்தபொழுது பணத்தைக் கொடுத்து மீட்டுக் கொண்டு செல்லலாம்.

[அரசனும் அரசியும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கிறார்கள்.]

சந்திர:—மற்ற ஐம்பதினாயிரத்துக்கு எங்குச் செல்வது?

அரி:—பிராமண சிரேஷ்டரே, நாங்கள் மிகவும் நொந்திருக்கிறோம்; எப்படியாவது கருணை கொண்டு இக்கூட்டம் வராகன் அளித்து மானத்தைக் காப்பாற்றினால், எங்களுக்குத் தாய், தந்தை, குரு, தெய்வம் முதலிய யாவரும் தாங்கள்தான்; அருள் செய்யவேண்டும்.

காள:—என்னிடம் அதனிலும் அதிகமாய் ஒருகாசும் கிடையாதே; இருந்தால் கொடுத்துவிடுவேன்; இனிக் குடியிருக்கும் வீடுதான் மிச்சம்.

அரி:—நாயகி, அந்தணதிலகர் வாக்கு அறவொழுங்கும் ஆகின்றது; தீவினை இழைத்த பாவியை மணந்ததற்கு, உன்னை விற்றுக்கொண்டும் பாதி கடன் கொடுக்கிறாய்; ஒழிந்த பாதியையேனும் நான் கொடுக்காவிட்டால்.—

சந்திர:—நாதா, அடியாள் தங்கள் உடைமை; அதை எவ்விதத்திலும் உபயோகப் படுத்திக்கொள்ளச் சக்கிரவர்த்தியவர்களுக்குச் சொந்தம் உண்டு.

காள:—ஆ! ஆ!! சக்கிரவர்த்தியா!!! நானும் முந்தியே யோசித்தேன்; எந்தநாட்டிற்கு?

[அரசனும் அரசியும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கிறார்கள்.)

அரி:—உத்தமரே, இப்பொழுதில்லை; மன்னிக்கவேண்டும். [மனைவியை நோக்கி] நாயகி! இந்தக் காசிப் பட்டணத்தில், இதனிலும் கேட்பாரைக் காணோமே; இவ்வளவு தொகை கொடுப்பதாகவேனும் ஒப்புக்கொண்டது நம் பாக்கியம்தான்.

சந்திர:—ஆம், தாங்கள் மிகுந்திருந்தாலாவது அடியாளை மீட்க வகை தேடுவீர்கள்.

அரி:—கடனைக் கொடுக்கக் கதியற்ற உன் நிமித்தம், மனைவி அடிமைப்படுதலைக் கண்டும் உன்உயிர் போகாதது ஆச்சரியம்தான்; நிர்ப்பாக்கியனே! நீ கல்லினும் வலிய நெஞ்சம் படைத்தவன். [கண்ணீர் சொரிகிறான்.]

சந்திர:—எனக்கல்லவோ தேற்றரவு சொல்லவேண்டும்; தாங்கள் வருந்துவதைக் கண்டால், அடியாள் உயிர் பிரிந்துவிடுவதுபோல் இருக்கின்றது; மேலும் அதிற் பயன் என்ன? இனியேனும் தங்களை வெறாக்காதிருக்கக் கேட்டுக்கொள்கிறேன்.

காள:—சுகுணனே, அவள் சொல்வது நியாயமானதுதான்; கடன் முழுமைக்கும் அடிமைப்படுத்தினால், நீ மீட்கப் பிரயத்தனிக்கலாம்; இப்பொழுதோ மற்றப் பாதிக்கு வகை செய்யவேண்டி யிருக்கிறது; ஆதலின், மற்றொருவிசை சென்று தெரிவித்துப்பார்; ஒருகால் இலக்ஷம் வராகனுக்கே எவரேனும் கொள்ளவருவார்கள்; நான் செல்கிறேன். [செல்கிறான்.]

அரி:—பூஜயரே, சற்று நிதானிக்கவேண்டும்; [நிற்கிறான்; மனைவியைப் பார்த்து] நாயகி! கைக்குவாராதபெரிய வைபத்தை

நினைந்து, கைக்குக் கிடைத்த இதனையும் இகழ்ந்துவிடுவது அழகல்லவென்று நினைக்கிறேன்.

சந்திர:—என்ன செய்யலாம்; சரி, கடவுள் சித்தத்துக்கு நம்மை ஒப்புக்கொடுக்க வேண்டியதுதான்; பெற்றுக் கொள்ளுங்கள்.

அரி:—குருடன் கைக்கோல் போலச் சமயத்தில் உதவி புரியவந்த என் குலதெய்வமே, ஐம்பதினயிரம் பொன்னை அங்கீகரிக்கிறேன்; இனித் தங்கள் அடிக்கமலமே எங்களுக்கு அடைக்கலாலயம்; இவளால் செய்து நிறைவேற்றப்படும் தங்கள் உரிமைப் பணிவிடைகளில் ஏதேனும் தவறுகள் காணப்பட்டாலும், கடவுள் அருள்முகம் நோக்கி அதனை மன்னிக்கப் பிரார்த்திக்கிறேன்.

காள:—சுகுணனே, உங்கள் அன்பையும் துன்பையும் கண்டு ஆற்றமுடியாது கொள்கிறேனேயன்றி அடிமையை வேண்டிக் கொள்கின்றேன் இல்லை; ஒன்றுக்கும் யோசிக்க வேண்டாம்; சவுகரியமானல் நீயும் வந்திருக்கலாம்.

அரி:—தாங்கள் கூறியதே எனக்குப் போதுமானது; உயர் குலத்தவர்; பொறுமைக் கடல்; ஞானசுவரூபி; மனைவியை ஒப்புவிக்கின்றோம் என்ற வருத்தமும் இனி எனக்கில்லை.

காள:—நாழிகை கழிகின்றது; இந்தா, பெற்றுக்கொள்! [கொடுக்கிறான்; கொள்கிறான்.] சரியாயிருக்கின்றதா? இனிநான் சென்று வருகிறேன்.

சந்திர:—அடகுழந்தாய்! உன்னையும் பிரிந்து செல்கின்றேனே; [முத்தம் கொள்கிறாள்]

லோகி:—அம்மா! ஏன் பிரியவேண்டும்? நானும் வரு

சந்திர:—கண்மணி! நான் அந்தணர்பின் செல்கிறேன்; நீ உன் தந்தையோடு இரு; உன்னைக் காப்பாற்ற முடியாதவளாயிருக்கிறேன்.

காள:—பிள்ளாய்! நீ பிரியவேண்டாம்; நீயும் உன் அன்னையுடன்வா! [அரசனை நோக்கி] இவனைக் காப்பாற்ற உன்னால் முடியாது; ஆதலின் தாயுடன் இருக்கட்டும். [அரசனும் அரசியும் ஒருவரை யொருவர் பார்க்கிறார்கள்]

சந்திர:—நாதா, தங்கள் வருத்தத்தில் குழந்தையை எப்படிக் கவனிக்க முடியும்? அவரும் வரச்சொல்கிறார்; அழைத்துச் செல்கிறேனே?

அரி:—செல்வமே, தாயுடன் செல்லப் போகிறாயா? [தழுவிக்கொண்டு உச்சியை முகருகிறான்.]

லோகி:—தந்தையே, தாங்கள் வரவில்லையோ?

அரி:—பிராமணரை அனுப்பிவிட்டு வருகிறேன்; நீ இப்பொழுது அம்மாளுடன் செல்.

லோகி:—ஆனால்; செல்கிறேன்.

காள:—சுகுணனே, சென்று வருகிறேன். [நடக்கிறார்.]

சந்திர:—நாதா, மகனை நினைந்தேனும் மகாபாபியாகிய இந்த அடியாளை மறந்துவிடாதிருக்கக் கேட்டுக் கொள்கிறேன். [வணங்குகிறாள்.]

அரி.—ஆ! விதியே!! [வஸ்திரத்தினால் முகத்தை மூடிக் கொள்கிறான்.]

சந்திர:—தெய்வமே, கானகம்சென்றாலும் காய், இலை தின்றாலும் காதலனுடன் இருக்கிறோம் என்று களித்திருந்தேனே; அந்த அமைதியையும் அகற்றிவிட்டாய்; இனி யாவர் முகத்தைக்கண்டு துக்கத்தை ஆற்றிக்கொள்ளப் போகிறேன். [அரசன் கரத்தைப் பற்றிக்கொண்டு.] அவனிபர்க

ளுக்கு அபயம் அளித்து விளங்கிய இந்தக் கரத்தை இனி என்று காண்பேன்; உயிரைப் பிரிந்துசெல்லும் உடல் எங்கும் இல்லையே. [கரத்தைக் கண்ணீரால் கழுவுகிருள்.]

அரி:—அரைக்கணமும் பிரிந்தறியாத ஆருயிர்க் காதலியையும்—அந்தோ! கஷ்டகாலமே! இன்னும் எங்களை எந்தக் கோலம் காண இருக்கின்ருயோ? அறிகிலேன்.

சந்திர:—பிராண நாதா, அதோ சென்றுவிட்டார், விடைதாருங்கள். [வணங்குகிருள்.]

அரி:—இந்தக் கொடியவனை வணங்கவும் வேண்டுமா? [முகத்தில் அறைந்துகொள்கிருன்.]

சந்திர:—கண்மணி! வா, செல்லலாம்.

லோகி:—தந்தையே, ஐயனை அனுப்பியதும் வந்து விடுகின்றீர்களா?

அரி:—[தனக்குள்.] என் நிலைமை எனக்கே தெரியவில்லையே, மற்றப்பாதியையும்சேகரிக்கவேண்டும். [வெளியில்.] வந்து விடுகிறேனப்பா! அம்மாள் சொல்லும் வண்ணம் நடந்துகொண்டிரு.

லோகி:—அப்படியே செய்கிறேன். [தாயைத்தொடரு

சந்திர:—[சிறிதுசென்றதும் திரும்பி] பிராணநாதா, கடன் கொடுத்த பின்பேனும் கவனம் இருக்கவேண்டும்; எப்படி இருக்கப் போகிறேனே? [மகனுடன் மறைகிருள்.]

அரி:—ஜகதீசா, [உட்காருகிருன்.] நடுக்கடலில் சுழற்கலம் என்ன, நாற்புறமும் துன்பத்தால் நெருக்கப் படுகிறேன்; பிரிந்தமனைவிக்கா, அடைந்த துயருக்கா, ஒழிந்த பொன்னுக்கா, எதற்கென்று விசனப்படுவேன்; ஓம்ருதயே சுவரி! இந்தப் பாபியின் மனத்தில் உன்னைப் பிரிந்த

பின்புதான் உன் பெருங்குணங்கள் பசுமரத்தாணிபோல ஒவ்வொன்ருய் அழுந்துகின்றது. [எழுந்திருக்கிருன்.]

உன்னைத்தொலைத்த எனக்கும் நற்கதியா? [கரத்தைப் பார்க்கிருன்.] அந்தோ! கொடுங்கரமே, உன்னையே பற்றிய மதியன் மகனை அடிமைப் படுத்தியதுமன்றிப், பொன்னும் பெற்றுக்கொண்டு விட்டாயே; [பூமியில் அறைகிருன்.] இன்னும் எவ்வெவற்றைக் கூசாது பெறப் போகின்ருயோ? உன்னைப் பார்க்கவும் பயமாயிருக்கிறது; [கையைத் தொங்கவிடுகிருன்.] ஓ! தெரிந்துவிட்டது; கரம்தானே; அன்பின் பெருமை உனக்கு எப்படித் தெரியும்? [யோசிக்கிருன்.] பொன்னை மாத்திரமாவது அளித்துவிட்டால் கொஞ்சம் ஆறுதலாயிருக்கும்; அவர் அங்குக் காத்துக்கொண்டிருப்பார்; திரரக்ஷகா, உன்னையே நம்பிச் செல்கிறேன்.[ மறைகிருன்.)]

---

## களம் 3.

இடம் :—தபோவனம்.

காலம் :—காலை.

[விசுவாமித்திரனும் காத்யாயனனும் பிரவேசிக்கிருர்கள்.]

விசுவாமித்திரன் :—முழுவதும் பெற்றுக்கொண்டுவிட்டாயா?

காத்யாயனன் :—ஆம்.

விசுவா :—தவணை எப்படி?

காத்யா :—[தனக்குள்.] இன்னமும் வருத்தப்படுத்துவதற்கா? [வெளியில்.] நிமிஷமும் அதிகப்படவில்லை.

விசு :—கொடுத்தவிதம்?

காத்யா:—அடிமை முன்னிலையில்.

விசுவா :—[திகைப்புடன்] ஆ ! அடிமையா ? யாவரை அடிமைப் படுத்தினன் ?

காத்யா :—தன்முதல் யாவரையும்.

விசுவா :—ஆ ! தன்னையும் அடிமைப்படுத்திக் கொண்டுவிட்டானா ? இப்படி வரும் என்று தெரிந்தால் வேண்டாம் என்றே மறுத்திருப்பேன் ; யாவர்க்கு அடிமை ?

காத்யா :—[தனக்குள்.] இல்லாவிட்டால் காசிப் பட்டணத்தில் புதையல் எடுத்துத் தருவார் என்று நினைத்திருந்தார் போலும் ; [வெளியில்.] மனைவியும் மகனும் காளகண்டன் என்ற ஒரு அந்தணனுக்கு ; தான் வீரபாகு வென்னும் ஒரு—[தயங்குகிறான்.]

விசுவா :—என்ன இழுக்கின்றாயே ; யாரவன் ?

காத்யா :—சுடுகாடு காக்கும் ஒரு சண்டாளன்.

விசுவா :—பறையனா ; பறையனா ! ! வெட்கமாயிருக்கின்றதே ; நீ ஒரு பயனற்றவன் ; சக்கிரவர்த்தி ; கொஞ்சமும் இங்கிதம் தெரிவதில்லை ; ஏன் பெற்றுக்கொள்ளவேண்டும் ? வந்துவிடக்கூடாதா ?

காத்யா :—[தனக்குள்.] வந்துவிட்டால் நாலும் அரிச்சந்திரன்தான் ; [வெளியில்.] தவணை கழிந்தால் வந்துவிட்டிருக்கலாம்.

விசுவா :—ஒன்றும் நன்றாயிருக்கவில்லை ; சண்டாளனுக்கு அடிமைப் படுவதைக் கண்டும்.

காத்யா :—அடியேன் இரக்கத்திற் பயன் இல்லையே ; என்னுடையதா யிருந்தால்—

விசுவா :—சரி, இனி அதைப்பற்றி என்ன ? காரியம் முடிந்துவிட்டது. [யோசிக்கிறான்.] இருவரும் அடிமைப்படு வானேன் ?

காத்யா :—மனேவியையும் மகனேயும் ஐம்பதினுயிரம் பொன்னுக்குத்தான் அந்தணர் அடிமைகொண்டார்.

விசுவா :—என்னேப்பற்றி நிரம்பவும் தூஷித்திருப்பார் கள் ; சந்தேகமே யில்லே.

காத்யா :—சிவசிவா ! ஒருபோழ்தும் இல்லே.

விசுவா :—என்ன இல்லே ? மனவருத்தமே இல்லேயா ?

காத்யா :—[தனக்குள்.] ஆம், 'குற்றமுள்ள நெஞ்சு குறு குறுக்கின்றது ' [வெளியில்.] தங்களேப் பற்றி இல்லே என்று சொன்னேன்.

விசுவா: —பின்பு யாவரைப்பற்றி ?

காத்யா: —தங்கள் விதியின் கொடுமையை நொந்துகொ ண்டார்கள்.

விசுவா :—அதற்கும் நான்றுனே முதற்காரணம்.

காத்யா: —[தனக்குள்.] அது வெளிப்படைதான்.

விசுவா: —நான் என்ன செய்யட்டும்; அரசு முதலிய வற்றை ஒப்புக் கொள்ளும்படி அப்பொழுதே சொல்லியிருக் கிறேன் ; ஊட்டுவார்களா என்ன ?

காத்யா: —[தனக்குள்.] அந்தப்பெண்களே மணம் புரிவ தானுல் ஒப்புக்கொண்டுதான் இருக்கலாம் ; [வெளியில்.] தானம் கொடுத்ததனுல் மறுத்துவிட்டார் போலும்; தவ னேக்குள் அபாயமின்றிப் போய்ச்சேருவதே அரியதாய் விட்டதாம்.

விசுவா :—ஏன் ? ஏன் ?

காத்யா:—எத்தனையோ பேதாளங்களும் பைசாசங்களும் குறுக்கிட்டனவாம்; முடிவில், நெருப்பாற்றையும் கடந்துசெல்ல நேரிட்டதென்று சொன்னார்கள்.

விசுவா:—பேதாளங்களாவது, நெருப்பாறுவது; எல்லாம் ஆச்சரியமாக வல்லவோ இருக்கின்றது; காசிப்பட்டணத்தின் வழியில் இவைகள் ஏது?

காத்யா:—[தனக்குள்.] செய்வதையும் நன்றாய்ச் செய்துவிட்டு இப்பொழுது ஒப்பாரிவைத்து நடிக்கிறார். [வெளியில்.] உண்மையில் இருந்தனவாம்.

விசுவா:—அந்தோ! பரிதாபம்; எப்படிச் சகித்தார்களோ? கேட்பதற்கே வருத்தமாயிருக்கிறது; சக்கிரவர்த்தியாயிற்றே; என்ன வேலைதான் செய்யமுடியும்?

காத்யா:—[தனக்குள்.] இவருக்கு ஒன்றுமே தெரியாது; [வெளியில்.] அடிமைப்பட்டபின்பு எல்லாவேலையும் செய்ய வேண்டியது தான்; சுடுகாடு காத்துவருகிறார்.

விசுவா:—சிவசிவா! [காதைப் பொத்திக்கொள்கிறான்.] வெளியிற் சொல்லாதே.

காத்யா:—[தனக்குள்.] இந்தப் பொய்நடிப்பிற் பயன் என்ன? மனோரதம் நன்றாய் நிறைவேறிவிட்டது; [வெளியில்] விதியைக் கடக்க யாவரால் முடியும்?

விசுவா:—இன்று காலைமுதல் கஷ்டங்களையே கேட்டு வருகிறேன். [யோசிக்கிறான்.] கடைசியில் என்ன சொன்னார்கள்?

காத்யா:—[தனக்குள்.] இன்னமும் கொடுமைப்படுத்தச் சொன்னார்கள்; [வெளியில்.] அரசனும் அரசியும், 'தங்கள் கருணை மாறாதிருக்க வேண்டும்' என்று வந்தனம்செய்து கேட்டுக்கொண்டார்கள்.

விசுவா:—நல்லவர்கள்தாம்; நாம் என்ன செய்யலாம்; சரி, பொன்னை எங்கு வைத்திருக்கிறாய்?

காத்யா:—இங்குத்தான், ஆச்சிரமத்தில்.

விசுவா:—அவற்றை அயோத்திக்கு அனுப்பிவிடு; அரசனைப்பற்றி நன்றாய் யோசிக்கவேண்டும்.

காத்யா:—[தனக்குள்.] ஏன்? இவ்வளவு துன்பமும் போதாதென்றா? [வெளியில்.] எதற்காக?

விசுவா:—மீட்கும் உபாயத்தைப்பற்றி; [யோசனையை அபிநயித்து.] சரி, நீ செல்.

காத்யா:—[தனக்குள்.] உங்கள் யோசனை அவர் க்ஷேமத்துக்கென்று ஏற்படவில்லை; 'திக்கற்றவனுக்குத் தெய்வம் தான் துணைசெய்ய வேண்டும்'. [வெளியில்.] வந்தனம். [மறைகிறான்.]

விசுவா:—[உலாவுகிறான்.] என்ன பெருமை; என்ன அடக்கம்; அந்தோ! சாமானிய மனிதனும் செய்யச் சங்கோஜிக்கின்ற பிணம்சுடு தொழிலை ஒரு சக்கிரவர்த்தி, சகஜமாய்ச் செய்துவருகிறான்; இதனிலும் வேறு என்ன மானக்கேடு வேண்டியிருக்கின்றது; ஏது, ஒன்றும் தோன்றவில்லை.
"தீர்வரும் இன்னல் தம்மைச் செய்யினும் செய்ய சிந்தைப்
பேரருளாளர் தத்தம் செய்கையிற் பிழைப்ப துண்டோ?
கார்வரை நிறத்தித் தன்னைக் கனல்எழக் கலக்கக் கண்டும்
ஆர்கலி அமரர் உய்ய அமிழ்து பண்டளித்த தன்றே"
இது நிச்சயம்தான்; [யோசிக்கிறான்.] ஆதிமுதல் அந்தப் பாவி வசிஷ்டனே நமக்குப் பெரும் சத்துருவாய்விட்டான்; அரசைத் தொலைத்தான்; ஆசை மக்களைத் தொலைத்தான்; அரும் தவங்களைத் தொலைத்தான், ஒன்றா, இரண்டா! எத்தனை யென்றுதான் நீக்குவது; அவனுடன் அல்லற்பட முடி

யவேயில்லே; சிலந்தி தான் கட்டிய வலேநடுவில் சுகமாயிருப் பதுபோல நிச்சிந்தையாயிருக்கிறன்; கொஞ்சமும் கவலே கிடையாது; விசுவாமித்திரன் பங்குக்கு அவன் என்றும் தூமகேதுதான்; [பயன்ற குறிப்புடன்.] அவன் என்ன செய் தான்; நாமே சணப்பன் விட்டுக் கோழியாயினேம்; கால சக்கிரத்தின் வசப்படாதவர் யார்? [உலாவுகிறன்.] தவனே கடக்கவென்று செய்த உபாயங்களில் ஒன்றும் பயன்பட வில்லே; [ஆள்காட்டி விரலேப் பார்த்துக்கொண்டு.] ஒரு பெண், ஒரு பெண்; அரசசுகம் அநுபவித்தவள்; அந்தப்புரத்திலே யே இருந்தவள்; காட்டில், காரிருளில், பேதாளங்களேப் பார்த்தும் பயப்படவில்லேயே; [மூக்கின்மீது விரலே வைக்கி றன்.] தாஸிதாஸர்களாக அல்லவோ மதித்து விட் டாள்; நெருப்பாறு; கொழுந்துவிட்டு எரிந்துகொண்டு வந் தது; ஒரு நீராற்றளவும் நினேக்கவில்லேயே; இப்பொ ழுதும் உடல் நடுங்குகின்றது; [உலாவுகிறன்; கனேத்துக்கொ ண்டு.] சந்திரமதீ! ஆகட்டும்!! உன் தைரியமும், உன் கணவன் தைரியமும்—அறிகிறேன்; [தலேயை ஆட்டுகிறன்.] அடிமைப்பட்டதனுலேயே யாவும் முடிந்துவிட்டதென்று நினேக்கிறீர்கள் போலும்; இனியல்லவோ இருக்கின் றது; உத்தேசம் அடிமை அன்று; பொய்புகலச் செ ய்வது; அதுமுடியுந்தனேயும் உங்கள் கஷ்டமும் முடி யாது; [கருணேயை அபிநயித்து.] அந்தோ! ஏன் வருந்து கின்றீர்கள்? ஒருகால் கஷ்டத்தைப்பார்த்து விட்டு விடு வான் என்று நினேத்திருக்கலாம்; ஓ! ஓ! இனி நினேக்க வேண்டாம்; எவரும் தான் சாக மருந்துண்ணமாட்டார்கள்; [உலாவுகிறன்.] இன்றளவும் விசுவாமித்திரன் உயர்ந்தே வந் திருக்கிறன்; இனி, அந்தப் பஞ்சை வசிஷ்டனுக்கும், பிணம் சுட்டுப் பொசுக்கும் பயனற்ற உனக்குமா தாழப்போகிறன்?

கைகொட்டிச் சிரிக்க மாட்டார்களா? என்னை இவ்வளவு வருத்தங்களுக்கு உள்ளாக்கிவைத்த உன்னை—பிழிந்து சாறு எடுத்து விடுகிறேன்; [கையைக் கட்டிக்கொள்கிருன்.] ஆயிரம் யானைகளை அரைக்கணத்தில் அதப்படுத்திவந்த ஒரு சிங்கம், அற்பச் சிலந்தி வலையில் அகப்பட்டு விழிக்கலாயிற்று; ஆ! என்ன மானக்கேடு; [கையைப் பிசைகிருன்.] விசுவாமித்திரன் கோபம் வீண்போகாது; அதிருஷ்டஹீனனாகிய அரிச்சந்திரா! ஒரு பொய் சொல்லிவிட்டால் எல்லாவுலகங்களும் உனக்குச் சொந்தமாய் விடும்; இந்திரனையும் கால்வருடச் செய்கிறேன்; பல சொல்லிப் பயன் என்ன? விசுவாமித்திரனே உனக்கு அடிமையாய் விடுகிருன். [யோசிக்கிருன்.] இன்னமும் பார்க்கலாம். [காத்யாயனன் வருகிருன்.] என்ன; என்ன சங்கதி?

காத்யா:—அயோத்தியிலிருந்து தூதன் வந்திருக்கிருன்.

விசுவா:—எங்கு?

காத்யா:—ஆச்சிரமத்தில்.

விசுவா:—என்னவாம்?

காத்யா:—சத்தியகீர்த்தி யவர்கள் ஸ்ரீமுகம் அனுப்பியிருக்கிருர்களாம்.

விசுவா:—[தனக்குள்.] எல்லாவற்றைக் காட்டிலும் இராஜ்யக்கவலை இப்பொழுது பெரியதாய் விட்டது; என்ன கொண்டு வந்திருக்கிருனே; [வெளியில்.] வா; செல்லலாம். [இருவரும் மறைகிருர்கள்.]

---

## களம் 4.

இடம் :—வனத்தின் ஒருபாகம்.

காலம் :—மாலை.

[வசிஷ்டன் பிரவேசிக்கிறான்.]

வசிஷ்டன் :—விலாசாலங்கார பூதமான இராஜதானி சிறிதும் பொலிவின்றி மழுங்கிக்கிடக்கின்றது; இராஜ்ய லக்ஷ்மி நிராதரவாயிருக்கிறாள்; வசிஷ்டனும் விசுவாமித்திரனும் செய்துகொண்ட சபதத்துக்கு அரிச்சந்திரன் அவஸ்தை படவேண்டியிருக்கிறது; [உலாவுகிறான்.] அந்தணனுக்கு அடிமைப்படுத்தியது பெரிதன்று; அசேதனன், கோமாம்ஸ பக்ஷணி, சண்டாளன்; அடிமைப்பட்டதுமன்றி, அந்தோ! சுடுகாடு காக்கவும் தலைப்பட்டுவிட்டான்; என்ன செய்யலாம்; அன்று புகழாவிட்டால் இவ்வளவு அநர்த்தங்களுக்கும் இடம் இல்லை; ஆம், இஃதெங்ஙனம் பிழையாகும்? உண்மையை உரைக்கமாட்டார்களோ? [யோசிக்கிறான்.] புகழும் அநர்த்தத்துக்கு ஹேதுதான்.

"இகழரும் முகுந்தனும் இறைவனே இழி
தகவுற இடும்பையில் தங்கும் நீர்மையால்
உகலரும் செல்வத்தை உடம்பை அல்லது
புகழினை விரும்பலும் போதத் துன்பமே."

எப்படித் தெரியும்? இப்பொழுதோ ஒன்றும் சொல்வதற்கில்லை; இஞ்சி தின்ற குரங்காய் இருக்கிறோம்; [உலாவுகிறான்.] மிகவும் கோபக்காரன்; நிதானம் என்பது கொஞ்சமும் கிடையாது; என்ன சுகம் கண்டான்; ஊண் உறக்கமும் இல்லாமல் உழைத்து வருகிறான்; தவங்களைக் கணக்கின்றிப் பாழ்ப்படுத்துவதுதான் மிச்சம்; முடிவு மாத்திரம்

தெரியவில்லை; அரசகாரியங்கள் பலவும் அமைச்சன் தலையில் சுமந்தன; சாபத்துக்குப் பயந்து உழைக்கின்றார் களை யன்றி, உண்மையில் உழைக்கின்றவர் ஒருவரும் இல்லை; [யோசிக்கிறான்.] சாளுவத்தரசன் வடக்கில் போருக்கு வந்திருக்கின்றானும்; ஆம், சமயத்தை எதிர்பார்ப்பது யாவர்க்கும் சகஜம்தான்; [உலாவுகிறான்.] வந்தால் என்ன? வெற்றி என்பது வாரிக்கொண்டுபோகும் பொருள் அன்று; உதிரப் பெருக்கின் முன்னிலையில் உண்டாகக்கூடியது; இந்த அற்பத்துக்கெல்லாம் இடம் கொடுக்கமாட்டான்; வடக்கெல்லையில் நிரம்பிய படைகள் இருக்கின்றன; [பயனற்ற குறிப்புடன்.] இருந்தால் என்ன?

"நிலைமக்கள் சால உடைத்தெனினும் தானை
தலைமக்கள் இல்வழி இல்."

என்னவோ! சேனாபதியும் அவ்விடத்தில்தான் இருக்கிறான்; [யோசிக்கிறான்.] இப்பொழுது அரசனுக்குக் கிரகம் போதாது; இத்துணை வருத்தங்களும் அதன் குரூரத்தினால் தான்; சாந்தி செய்வதைத் தவிர்த்து நம்மால் என்ன செய்யமுடியும்? கடவுள்தான் கருணை செய்யவேண்டும். [பாடுகிறான்.]

"நற்பதத்தார் நற்பதமே! ஞானமூர்த்தி!
நலஞ்சுடரே! நால்வேதத் தப்பால் நின்ற
சொற்பதத்தார் சொற்பதமும் கடந்து நின்ற
சொலற்கரிய சூழலாய்! இது உன் றன்மை
நிற்பதொத்து நிலையிலா நெஞ்சம் தன்னுள்
நிலாவாத புலாலுடம்பே புகுந்து நின்ற
கற்பகமே! யான் உன்னை விடுவேன் அல்லேன்
கனகமா மணி நிறத்தெங் கடவுளானே."

ஜகதீசா, அரசனுக்கு மங்களம் உண்டாகவேண்டி வணங்கு

கிறேன் ; [வணங்குகிறான்.] இப்பொழுது என்ன செய்யவேண்டும் ? [யோசிக்கிறான்.] எல்லாவற்றிற்கும் கங்கைக்குச் செல்லலாம் ! காலாதீதம் ஆகின்றது. [மறைகிறான்.]

## களம் 5.

இடம் :—சத்தியகீர்த்தி அரண்மனையின் ஒரு அறை.

காலம் :—நண்பகல்.

[சத்தியகீர்த்தி யோசனையோடு பிரவேசிக்கிறான்.]

**சத்தியகீர்த்தி** :—இலக்ஷம் வராகன் ; இஃது எதுவாயிருக்கலாம் ; சக்கிரவர்த்தியவர்கள்தான் தக்ஷிணை செலுத்தவேண்டும் ; அதற்குள் தவணை முடிந்து விட்டதோ ? [விரலை விட்டு எண்ணுகிறான்.] சரி, அதுதான் ; சந்தேகமேயில்லை ; முன் பின் அறியாத காசிப் பட்டணம்; இவ்வளவு பெரிய தொகையைச் சேகரித்தது எப்படி? [உலாவுகிறான்.] பிரதாபருத்திரர் ; ஒரு கால்—ஏது? அவருக்கு எப்படித் தெரியும் ? [பயனற்ற குறிப்புடன்.] தெரியவிடமாட்டார்; ஆபரணங்களையும் இங்கேயே விநியோகப்படுத்திவிட்டார்கள் ; கிடைத்தவிதம் ? அதுதான் தெரியவில்லை ; அகில பூமண்டலத்துக்கும் அதிபதியாகிய சக்கிரவர்த்தி, அருமை மகனுடன் மனைவி பின் தொடர, அந்தோ! [தலையில் அடித்துக்கொள்கிறான்.] அரண்யம் தொலைந்தாலும் சிறிது ஆறுதலாயிருக்குமே ; தன் பாதுகையைத் தாங்கிக்கொண்டு திரியும் ஒரு அற்ப அரசன் பட்டணத்தில், தெருத்தெருவாய், [யோசிக்கிறான்.] அந்தவராகன் இல்லாமல் எங்குக் குறைந்துபோய் விட்டது ; கொஞ்சமும் குறைக்கவே முடியாதாம் ; என்ன நிர்த்தாக்ஷண்யம் ; பிரமரிஷிப் பட்டமும் பெற்றிருக்கிறார்;

“ அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்.”

'அரசர்க்குச் சகாயம் செய்கின்றவர்கள் தண்டிக்கப்படுவார்கள்?' இயற்கைக் குணம் என்றும் மாறமாட்டாது; விலகித் தொலைவதற்கும் வழியில்லையே; சரிப்படாதாம்; என்ன சரிப்படாது! பசுவின் மடியை அறுத்துப் பால் கொள்ளப் பார்க்கிறார்; [உலாவுகிறான்.] இரகசியமாய் விசாரித்தால்— திரிகாலக் கியானி; பிசகு, பிசகு; முக்காலும் பிசகுதான்; [சேவகனொருவன் பிரவேசித்து வணங்குகிறான்.] என்ன சங்கதி?

சேவகன் :—சேனாதிபதியவர்கள் வந்திருக்கிறார்கள்.

சத்திய :—வரச்சொல். [வணங்கிச் செல்கிறான்.] நல்ல சமயம்தான். விசேஷம் ஏதேனும் தெரிந்திருக்கலாம்; வரட்டும்; [விக்கிரமகேது வருகிறான்.] வாருங்கள், வாருங்கள்; எப்பொழுது?

விக்கிரம :—காலைதான் வந்தேன்.

சத்திய :—உட்காருங்கள்; [ஒரு ஆசனத்தைக் காட்டுகிறான்; உட்காருகிறான்.] தேகசுகம் ஒன்றும் குறைவில்லையே;

விக்கிரம :—உடல் நன்றாயிருந்தால்தானே துக்கங்களுக்கு அநுகூலமாகும்!

சத்திய :—இராஜ்ய க்ஷேமங்கள் எப்படி?

விக்கிரம :—இவ்விடத்துக்குத் தெரியாதது என்ன எனக்குத் தெரியப்போகின்றது?

சத்திய :—அதற்கல்ல; புதிய அரசரைப்பற்றி ஜனங்கள் அபிப்பிராயத்தை வினவினேன்.

விக்கிரம :—எனக்குத் தெரிந்தவரையில் சந்தோஷிக்கின்றவர் இல்லை.

சத்திய :—இத்தனைக்கும் இவர் கொஞ்சமும் இராஜ்யத்துக்கு அக்கிரமம் செய்யவில்லை; பழயவரசர் நீதியையும் ஒழுங்குகளையும்தான் என்னை அநுசரிக்கக் கட்டளையிட்டிருக்கிறார்.

விக்கிரம :—பொது ஜனங்களின் விருப்பு வெறுப்புக்களுக்கு வரியொழுங்குகளே காரணம் ஆகமாட்டா ; நிரபராதியான நம் அரசரிடத்தில் அவர் நடந்துகொண்ட—.

சத்திய :—ஆம், நீங்கள் சொல்வது நியாயம்தான்.

விக்கிரம :—ஒரு நாளாவது கொலுவுக்குவந்து இராஜகாரியங்களைக் கவனித்தால்———.

சத்திய :—அஃது எனக்கும் ஆச்சரியம்தான் ; எதை எழுதி யனுப்பினுலும் ‘ பழய வழக்கம்போற் செய்க ; எனக்கு வேலை இருக்கிறது ’ என்று பதில் எழுதுகிறார்.

விக்கிரம :—முந்தியும் ஒரு நாள் சொல்லியிருக்கின்றீர்கள் ; உன்மத்தம் பிடித்தவர்களைப்போல் எப்பொழுதும் யோசித்துக்கொண்டே யிருக்கிறாராம்.

சத்திய :—இவ்விஷயத்தில் அவருக்கும் சுகம் இருப்பதாய்த் தெரியவில்லை.

விக்கிரம :—இரண்டு தினங்களுக்குமுன்பு ஆரண்யத்தில் சிலவிஷயங்கள் தெரிந்தன ; அதுமுதல் ஒன்றும் தோன்றவே யில்லை.

சத்திய :—எனக்கும் இப்பொழுதுதான் விளங்குகின்றது; தாங்கள் கலிங்கம் செல்வதாய் எழுதியனுப்பவில்லை ?

விக்கிரம :—ஆம், உண்மைதான் ; நைமிசத்தில் ஒரு நாள் தங்கநேரிட்டது ; அங்குச் சில முனிவர்கள் தங்களுக்குள் என்னவோ பேசிக்கொண்டிருந்தார்கள் ; லதாகிருகத்தில் இருந்ததனால், அவர்கள் கவனிக்கமுடியவில்லை.

சத்திய :—என்ன, என்ன சங்கதி ?

விக்கிரம :—மகா முனிவரால் பொக்கிஷத்துக்குப் பணம் ஏதாவது சமீபத்தில் அனுப்பப்பட்டதா ?

சத்திய :—[தனக்குள்.] நம் உத்தேசத்துக்கு ஒரு வழி கிடைக்கும்போல் இருக்கிறது. [வெளியில்.] நானும் அதை

ப்பற்றியே இப்பொழுது யோசித்துக்கொண்டிருந்தேன்; நேற்றுத்தான் காத்யாயனர் இலக்ஷம் பொன் கொண்டு வந்தார்.

விக்கிரம :—வருவாய்க்குக் காரணம் தெரிவிக்கப்பட்டதா?

சத்திய :—இல்லை; இதற்கென்ன? தெரிந்ததுதானே; சக்கிரவர்த்தி யவர்கள் அளிக்கவேண்டிய தக்ஷிணைப் பொன்றாயிருக்கவேண்டும்.

விக்கிரம :—உண்மைதான்; காசிப்பட்டணத்தில் அரசப் பெருமாட்டியையும் இளவரசரையும், [தயங்குகிறான்.]

சத்திய: —என்ன தயங்குகின்றீர்களே?

விக்கிரம:—ஐம்பதினாயிரம் பொன்னுக்கு யாவருக்கோ அடிமைப்படுத்தி—[சத்தியகீர்த்தி மூர்ச்சிக்கிறான்.] இவர் இங்ஙனம் ஆவார் என்று முன்னமே தெரிந்ததுதான் [பனிநீர் தெளித்துவிசிறிக்கொண்டே தனக்குள்.] நாம் என்ன செய்யலாம்; சொல்லாதிருக்க முடியுமோ? இன்னும் அரசர் சங்கதியைக் கேள்வியுற்றால், [சத்திய கீர்த்தி சிறிது மூர்ச்சை தெளிந்துகொண்டே] ஐயோ! உயிர்— [கண்களை மூடுகிறான்; பனிநீரால் கண்களைத் துடைத்து விசிறிக்கொண்டே வெளியில்.] மனத்தை இவ்வளவு இளகச் செய்து விடுகின்றீர்களே? தைரியப்படுத்திக்கொண்டு எழுந்திருங்கள். [மெள்ள எழுந்து உட்காருகிறான்.]

சத்திய :—இத்தனை பெயரும் அரண்மனையில் அரசசுகம் அநுபவித்துக்கொண்டிருக்கிறோம்; தனக்கு எத்தனையோ இராஜ மகிஷிகள் அடியில் விழுந்து பணிவிடை புரிந்து வந்த அரசப் பெருமாட்டி பிறருக்கு அடிமைவேலை செய்து வருகிறார்! மகரிஷியே, தங்கள் மனம் இப்பொழுதாவது குளிரட்டும்; இவ்வளவு துக்கங்களைக் கேட்டும், என் பிராணன் இன்னமும் இருக்க விரும்புகின்றது. [முகத்தில்

அறைந்து கொள்கிறான்.] "அற்ற குளத்தில் அறுநீர்ப் பறவை போல் உற்றுழித் தீர்வார்" என்பது எங்களிடத்தில் உண்மை யானதுதான்; விக்கிரமகேது அவர்களே, இனி அரைக்கண மும் எனக்கு இங்கிருக்க முடியாது; அவர் என்ன வேண்டு மானாலும் சபிக்கட்டும்; அவர்கள் செய்யவேண்டிய அடி மைவேலைகளை நான் செய்துகொண்டு காலத்தைக் கழிக்கி றேன்; விசுவாமித்திரருக்கு இப்பொழுதே—

விக்கிரம :—தாங்கள் இப்பொழுது விலகவே கூடாது.

சத்திய :—[திகைத்துக்கொண்டு தனக்குள்.] நம்மைப்போல் இவரும் அபிப்பிராயப் படுகிறார்; இன்னமும் விசாரிப் போம்; [வெளியில்.] உங்கள் வசனம் ஒன்றும் எனக்குப் பிடி க்கவில்லை; சரி, அவர்கள் இன்னும் என்ன சொல்லிக்கொண் டார்கள்?

விக்கிரம :—சக்கிரவர்த்தியவர்கள் வருந்தனையும், தங் களால் தான் இராஜ்யம்——

சத்திய :—என்ன! என்ன!! சக்கிரவர்த்தியவர்களா?

விக்கிரம :—ஆம், ஆம்; சீக்கிரம் வந்துவிடுவார்களாம்.

சத்திய :—இது நம்பக்கூடிய விஷயம் அல்லவே?

விக்கிரம :—நிச்சயமாய் நம்பலாம்; அவர்கள் வசனத் தில், [நாற்புறமும் பார்க்கிறான்.] விசுவாமித்திரர் என்னவோ ஒன்றைச் சாதிப்பதற்காகச் சக்கிரவர்த்தியவர்களை வருத்தி வருவதாய்த் தெரிகின்றது.

சத்திய :—[தனக்குள்.] நம் உத்தேசம் சரிதான்; [வெ ளியில்.] எனக்கும் ஒருவாறு படுகின்றது; முந்தி ஒரு சம யம் 'நான் விலகவேண்டும்' என்று எழுதியதற்கு 'நீ விரு ம்பக்கூடிய சக்கிரவர்த்தி ஒருவரைக் கொண்டுவருகிறேன்; அது காறும் நீ விலகக்கூடாது' என்று எழுதியிருக்கிறார்.

விக்கிரம :—அது நிச்சயமாகவே யிருக்கலாம்; தன் காரியநிமித்தம் தேவர்களையும் ஏவல் கொள்ளுகின்றாராம்; தவங்கள் கணக்கின்றிச் செலவு செய்யப்படுகின்றனவாம்.

சத்திய :—அப்படியா? [மூக்கின்மீது விரலை வைக்கிறான்.] ஆனால், அந்தக் காரியம், மிகவும் அவசியமான ஒன்றாய் இருக்கவேண்டும்.

விக்கிரம :—நானும் அப்படித்தான் எண்ணுகிறேன்.

சத்திய :—ஒழிந்த பாதியைச் சேகரித்தவிதம்? [ஒருவன் பிரவேசித்து வணங்குகிறான்.] என்ன சங்கதி?

சேவகன் :—கலிங்க தேசத்து அரசர் வந்திருக்கிறார்கள். [சத்தியகீர்த்தியும் விக்கிரமகேதுவும் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்கிறார்கள்.]

விக்கிரம :—வாருங்கள்; சென்று வரவேற்கலாம்; என் பிரயாணமும் ஒருகால் இங்கேயே முடிந்துவிடும்போல் இருக்கிறது.

சத்திய :—அதற்கென்ன தடை? நிச்சயம்தான்.

[மூவரும் மறைகிறார்கள்.]

---

# 5-வது அங்கம்.

## களம் 1.

இடம் :—காசிப்பட்டணத்தின் ஒரு தெரு.

காலம் :—காலே.

[சோமசுந்தரன் வசுசேகரன் நீலலோகிதன் மூவரும் பேசிக்கொண்டு பிரவேசிக்கிருர்கள்.]

சோமசுந்தரன் :—ஏன், காளகண்டர் வீட்டு லோகிதத்தையும் அழைத்துக்கொண்டு போகலாமே; அவன் பழக்கம் கொஞ்சம் நாள்களாகவே நமக்குக் கிடைத்தாலும் அதிகமாய்விட்டது.

வசுசேகரன் :—ஆம், இப்பொழுது அவனே அரைக்கணமும் பிரிந்திருக்க முடியவில்லே; நமக்கு மிகவும் இன்றியமையாதவனுய்விட்டான்.

நீலலோகிதன் :—எனக்குத் தூக்கத்திலும் அவன் கனவுதான்; ஆசாரியரிடத்தில் நாம் கஷ்டப் பட்டுக் கற்றுக் கொண்ட அரிய விஷயங்கள் பலவற்றையும் அரைக்கணத்தில் சுலபமாய்ச் சொல்லிவிடுகிருன்.

சோம :—சாதாதப ஸ்மிருதி விஷயமாய் அன்ெருருநாள் இவன் சொல்லிய சமாதானத்துக்கு நம்குருசிரேஷ்டர் சச்சிதானந்த யோகீசுவரர் கூட இவனைப் பார்க்க விரும்பினர்.

வசு :—ஒரு சமயம் அவ்வளவும் படித்தவனுயிருக்கலாமோ?

சோம :—ஏது? இருக்கமுடியாது; இன்னமும் அதற்கு வயதாகவில்லேயே.

வசு :—பின் எப்படி ? அதிருஷ்டமான விஷயங்களுக்கெல்லாம் சமாதானம் சொல்லிவிடுகின்றானே ?

நீல :—'சாபத்தினால் இந்த உலகத்துக்கு வந்த ஒரு தெய்வகுமாரனு யிருக்கலாம்' என்று நினைக்கிறேன்.

சோம :—எனக்கும் அந்த எண்ணம் உண்டுதான் ; பிராம்மண குலத்தில் பிறந்த அதிமேதாவிகள் பலரும்—.

நீல :—திருத்துழாய் முளைக்கும்பொழுதே மணமும் விறுவிறுப்பும் கூடப்பிறக்கின்றன; "குலவிச்சை கல்லாமற் பாகம் படும்" என்பது பழமொழி.

சோம :—சூரியன் ஒளிக்கதிர்களுக்குமுன் உடுக்களும் கிரகங்களும் ஒளி மழுங்கி விடுவதுபோல அவன் முன் நம் அறிவு மழுக்கமடைகின்றது.

வசு :—இத்தனை நாட்களாய் அவனுடன் பழகியும் அவனை இன்னான் என்று தெரிந்துகொள்ளவில்லை. நாம்.—

நீல :—நிறுத்து ; அவன் வீடு சமீபித்துவிட்டது. இன்று எப்படியும் கேட்டு விடலாம்.

வசு :—முதலில் இன்று நம்முடன் வருகின்றானோ இல்லையோ ?

சோம :—வராமல் என்ன? வருவான்; இதுதான் அவன் வீடு; கூப்பிடு.

நீல :—லோகிதம் ! லோகிதம் ! !

சிறுவன்:—[திரைக்குப் பின்னால்] அம்மா! இந்த அற்பத்துக்கெல்லாம் சிந்திக்காதே ; அதோபார்; துணையும் கிடைத்து விட்டது; பிராமணப்பிள்ளைகள் என்னை அழைக்கிறார்கள் ; அவர்களோடு சென்று வருகிறேன்.

ஸ்திரீ :—உன்னுடன் அவர்களும் வருகின்றார்களா ? ஆனால் சீக்கிரம் வந்து விடு. புதர்களுக்குள் செல்லாதே ; துஷ்டமிருகங்கள் இருக்கும்.

சிறுவன் :—இல்லை; அப்படியே வந்துவிடுகிறேன். [திரைக்கு வெளியில் லோகிதாஸ்யன் பிரவேசித்துக்கொண்டே] என்னைக் கூப்பிட்டீர்களா? மூவரும் எங்குச் செல்கிறீர்கள்?

வசு :—ஆம், உன்னைத்தான்; சமிதம் சேகரிக்கச் செல்கிறோம்; நீயும் வரவேண்டிய வேலை இருக்குமோ?

லோகிதாஸ்யன் :—அக்னி காரியத்துக்குச் சமிதம் ஆய்விட்டது; தனித்தாவது செல்லவேண்டும் என்றிருந்தேன்; நல்லகாலம்; தாங்கள் வந்தது அன்னைக்குக் கொஞ்சம் ஆறுதலை உண்டாக்கிற்று.

நீல :—உன்னுடன் செல்வது எங்களுக்கு மகாசந்தோஷம்; விடைபெற்றுக்கொண்டு விட்டாயா?

லோகி :—ஆம், வாருங்கள்; யஜமானர் கருடசயனம் ஆரம்பிக்கப் போகின்றார்; கொஞ்சம் அதிகமாகவே சமிதம் முதலியவைகள் சேகரிக்கவேண்டியிருக்கின்றன.

சோம :—அதற்கென்ன? சேகரித்துக் கொண்டால் போகிறது; பட்டணத்துக்கு வெளியில் வந்துவிட்டோம்; இடம் சுத்தமாயிருக்கிறது; இப்படி உட்காரு; சற்றுப் பொறுத்துச் செல்லலாம்.

லோகி :—தங்கள் கட்டளைக்கும் மறுப்பு உண்டோ? வேலையை முடித்துக்கொண்டு விட்டால் சாவகாசமா யிருக்கலாம். [சொல்லிக்கொண்டே உட்காருகிறான்; மூவரும் உட்காருகிறார்கள்.]

சோம :—வேலைக்கு முடிவு ஏது? ஒன்று போனால் மற்றொன்று; அஃது எப்பொழுதும் நம்மை அடிமை கொண்டிருக்கின்றது.

நீல :—நமக்குக் கட்டையோடுதான் ஒழிவு; ஒருகால் பரலோக யாத்திரையில்—.

லோகி :—ஏது, அப்பொழுது கொஞ்சமும் ஒழிவில்லே; இங்குச் செய்த அதிக பாகங்களை அநுபவிப்பதற்காக வல்லவோ ஆங்குச் செல்கிருேம்; அந்தத் தசையில் நாம் முழுவதும் பராதீனர்கள். [மூவரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொள்கிருர்கள்.]

வசு :—உனக்கு வேதாந்த சாஸ்திரத்தில் கூடப் பரிசயம் உண்டுபோல் காணப்படுகின்றதே ?

லோகி :—[வெட்கக் குறிப்புடன் கையைக் கூப்பிக்கொண்டு] சுவாமிகாள் ! வெட்கமாயிருக்கின்றது; அக்ஷரவாசனைகூடச் சிறிதும் தெரியாத அறியாதவன்; உயர்த்திச் சொல்லுதலுக்குப் பாத்திரன் அல்லேன்.

சோம :—இவன் எப்பொழுதும் இப்படித்தான் ; தன்னை ஒருவர் புகழப் பொறுக்கமாட்டான்; கிடக்கட்டும் விடு.

நீல :—லோகிதம், உனக்குக் காளகண்ட சர்மா என்ன ஆகவேண்டும் ?

லோகி :—யஜமானர்.

நீல :—எப்படி ?

லோகி :—என் தாயை அடிமைகொண்டவர். [மூவரும் திகைக்கிருர்கள்.]

வசு :—என்ன? தாயை—அடிமை—கொண்டவர். [மூக்கின்மீது விரல்வைக்கிருன். மூவரும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொள்கிருர்கள்.] எவ்வளவுக்கு?

லோகி :—ஐம்பதினுயிரம் வராகனுக்கு.

வசு :—அவரா ஐம்பதினுயிரம் கொடுத்துக்கொண்டார்?

லோகி :—ஆம்.

நீல :—அடிமைப்படுத்தியவர் யார் ?

லோகி :—என் தந்தை.

சோம :—[விசனக்குறிப்புடன்.] மனைவியையும் அடிமைப்படுத்த நேர்ந்து விட்டதா ? உன்னையும் உன் தாயையும் பார்த்தால் மிகவும் உயர்ந்த நிலைமையில் இருந்தவர்கள் போலக் காணப்படுகின்றதே.

லோகி :—என்ன செய்யலாம்; காலவித்தியாசம்.

வசு :—கோபித்துக்கொள்ளாதே; சூது குடி முதலிய துர்க்குணங்கள் ஏதேனும் உன் தந்தையைத் தொடர்ந்திருக்கக்கூடுமோ ?

லோகி :—[காதைப் பொத்திக்கொண்டு] சிவ சிவா! பூஜ்யர்களே, என் தந்தையை அப்படிச் சொல்லவேண்டாம்.

நீல :—[தனக்குள்.] இஃதன்றோ உண்மைப்பிள்ளைகளின் இலக்ஷணம்; வருத்தத்தை உண்டாக்கிவிட்டோம். [வெளியில்.] லோகிதம் ! சிந்திக்காதே; மன்னித்துக்கொள்.

லோகி :—[தனக்குள்.] இவர்களும் இப்படிச் சொல்லும் படியான நிலைமையை அடைந்து விட்டோம்; என்ன செய்யலாம்; [வெளியில்.] மன்னிப்பதற்கு என்ன கிடக்கின்றது; தெரிந்தால் சொல்லியிருக்கமாட்டீர்கள்.

வசு :—மனைவியையும் பொருள் செய்யாமல் அடிமைப்படுத்துவதற்குத் தூர்த்த குணங்கள்தாம் அதிகமாய் உதவி புரிகின்றன; உன்னை மகனாய்ப்பெற்றவர், உத்தம லக்ஷணம் பொருந்திய ஒரு சக்கிரவர்த்தியாகவல்லவோ இருக்கவேண்டும்.

லோகி :—[தனக்குள்.] இவர்கள் வசனம் நம் உண்மையை அறிந்துகொண்டதுபோலக் காணப்படுகின்றதே. [வெளியில்.] இப்பொழுது மிகவும் சாதாரணமனிதர்தான்.

சோம :—உன் தந்தைபெயரையும் பட்டணத்தையும்—

லோகி :—அந்தண சிரேஷ்டர்களே, அன்னையின் உத்தரவின்றி அந்த ஒன்றை மாத்திரம் சொல்லக்கூடாதவனயிருக்கிறேன்; அநுக்கிரகிக்கவேண்டும்.

நீல :—[தனக்குள்.] முடியாதென்பதை வெகு அழகாய்ச் சொல்லி முடித்தான்; மற்றொரு சமயம் பார்க்கலாம்; [வெளியில்.] ஒவ்வொருவர் அந்தரங்கத்திலும் ஆழ்ந்த இரகசிய விஷயங்கள் எத்தனையோ இருக்கலாம்; அதற்கென்ன? பகல் ஏறுகின்றது; செல்லலாம் வாருங்கள்.

லோகி :—ஆம், முந்தியே குறிபிக்கலாம் என்றிருந்தேன்.—எழுந்திருக்கலாம். [யாவரும் எழுந்திருக்கிறார்கள்.]

வசு :—லோகிதம்! நீ ஒன்றும் வருந்திச் சேகரிக்கவேண்டாம்; உன் உடம்பு வருந்தப் பிறந்ததன்று; நாங்கள் வேண்டியதைக் கொடுக்கிறோம்.

லோகி: —சுவாமிகளே! அக்னிகாரியத்துக்குப் பணிவிடை செய்யக் கொடுத்துவைக்க வேண்டுமே; முடியுந்தனையும் சேகரிக்கிறேன்; தாங்களும் உதவுங்கள்.

சோம :—சொன்னால் கேட்கமாட்டாய்; புதர்களுக்குள் செல்லாதே.

லோகி :—அப்படியே; வாருங்கள் செல்லலாம்! [யாவரும் மறைகிறார்கள்.]

---

## களம் 2.

இடம் :—கங்கைப் படித்துறை.

காலம் :—பகல்.

[சந்திரமதி ஒரு புடவையைத் தண்ணீரில் அலசிக்கொண்டு பிரவேசிக்கிறாள்.]

சந்திரமதி :—ஊழ்வினையே, உனக்கு வந்தனம் செய்கிறேன்; தேவர்களும்—அந்தோ! வெட்கக் கேடுதான்; உன் அதிகாரத்துக்கு அடங்காதவர்கள்யார்? ஆம், நிஷ்பக்ஷபாதி;

"தவத்துறைமாக்கள், மிகப்பெருஞ் செல்வர்,
ஈற்றிளம் பெண்டிர், ஆற்றுப்பாலகர்,
இளையோரென்னுய், முதியோரென்னுய் ;"

யாவரையும் ஒருங்கே அடக்கிவிடுகின்ருய். மதிதயன் வீட்டில் மகளாய்ப்பிறந்து, அயோத்திக்கு அரசரை [வெட்கத்தோடு நாற்புறமும் பார்க்கிருள்.] இந்தக் கதிக்கு உள்ளாயினேம் ; பிராண நாதா ! சந்தனக்குழம்பையும் புஷ்பமாலிகைகளையும் எடுத்தால் 'உன் மேனிவருந்தும்'என்பீர்களே; இப்பொழுது அடியாள், அந்தணரும் அவர் மனைவியும் அவிழ்த்தெறிந்த, அழுக்கு வஸ்திரங்களைத் துவைத்து உலர்த்திக்கொடுக்கிறேன் ; அந்தோ! இந்த ஒன்று மாத்திரமா ? சமையற் பாத்திரங்களைத் துலக்கித் துலக்கிக் கையெல்லாம் தேய்ந்து போயின ; [கையைப் பார்க்கிருள்.] உனக்கு இந்தத் தண்டனை தகுந்ததுதான்; பிராணநாதருக்குச் செய்யும் அந்தரங்க கைங்கரியத்துக்கும் உயிர்ச்சேடியை விரும்பினுயல்லவா ? [வஸ்திரத்தைப் பிரிக்கிருள்.] அடிமை வேலையில் உள்ள கஷ்டங்கள் இப்பொழுதுதான் வெளியாகின்றன; [யோசிக்கிருள்.] 'ஐயரை அனுப்பியதும் வந்துவிடுகிறேன், என்றீர்களே ! இந்த மகாபாபிக்குத் தங்கள் திருமுகமும் மறந்துபோய்விட்டது; இவ்வளவில் கடுகத்தனை புண்ணியம் ; [துவைக்கிருள்.] குருசிரேஷ்டரும் குருபத்தினியும் போலவே இருவரும் இருக்கிருர்கள் ; எவ்வளவு கருணை; எவ்வளவு அன்பு; எந்தவேலைக்குப் போனுலும் 'செய்ய வேண்டாம் செய்யவேண்டாம், என்கிருர்கள்; ஒன்ரு இரண்டா ! இந்தப் பயனற்றவளுக்கு ஐம்பதினுயிரம் பொன்னைக் கொட்டிக் கொடுத்தார்கள் ; தோலைச் செருப்பாய்த் தேய்த்தாலும் ஈடாகமாட்டாது. [யோசிக்கிருள்.] அவர்கள் சொல்கிருர்கள் ; நாம் எங்ஙனம் வெறுமனே யிருக்கமுடியும்?

எவ்வளவோ பாபங்களைச் செய்துதான் இப்பொழுது அடிமைப் பட்டிருக்கிறோம்; அந்தணர் அன்னத்தை எப்படி ஏற்றுக்கொள்வது ; சக்கிரவர்த்தியின்—சீ ! அல்ல ; அலல; அடிமை [வஸ்திரங்களை அலசுகிறாள்.] நம்தொழிலை நாம் சரியாய்ச் செய்யவேண்டும் ; அக்கினிபகவான் போன்ற அந்தணருக்குக் காசியில், இந்தப் பணிவிடை செய்ய, ஆ ! ஆ !! [ஆங்கொரு பிராமணன் தம்பதிகளாய்த் தானம் செய்வதில் அதிக பலன் கிடைக்கும் என்றதை உற்றுக்கேட்டு] பாகீரதீ ! சக்கிரவர்த்தியும் நானும் உன்னில் மூழ்கி உயர்ந்த தானங்கள் எத்தனையோ செய்திருக்கிறோம் ; அலைக்கரங்களால் அப்பொழுது அன்புடன் உபசரித்த நீ, இப்பொழுது அந்தக் கரங்களாலேயே கடிந்து கோபிக்கின்றாய் ; ஆம், " மானம் குலம் கல்வி வண்மை அறிவுடைமை,தானம் தவம் முயற்சி தாளாண்மை" முதலிய பலவும் எங்களை விட்டுத்தொலைந்தன ; இப்பொழுது கடியவேண்டியது நியாயம்தான்.

" இல்லாரை எல்லாரும் எள்ளுவர்; செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு."

என்றவர் வாய்க்குச் சர்க்கரைதான் போடவேண்டும் ; [வேஷ்டியைப் பிழிகிறாள்.] லோகிதத்துக்கு இருக்கும் அறிவுகூட நமக்கு இல்லையே ; அவன் ஐயர்க்கு ஆனவேலைகளை அமரிக்கையுடன் செய்துவருகிறான்;அக்னிகாரியத்தின் வேலை பலவும் அவனுக்குச் சொந்தமாயின; [யோசிக்கிறாள்.] அவன் அறிவும் விநயமும் அயோத்தியில் இருந்தால்—இப்பொழுது காட்டிற்காய்ந்த நிலவாய் விடுகின்றன; [நாற்புறமும் பார்க்கிறாள்.] ஓ ! பிராமணர் [illegible] பகற் கடனைக் கழிக்க வருகின்றார்கள்; நெடுநேரமாய்விட்டது ; இனி இருக்கக்கூடாது; முன்பு சந்திரன் சீதள கிரணங்களும் நேராய்ப்படப் பயந்து கிளைகளிலும் கவாக்ஷங்களிலும் மறைந்து அருமையாய்ப்

பட்டுக்கொண்டிருந்தன; இப்பொழுது சூரியன் சண்டகிரணங்கள் சுறுக்குச் சுறுக்கென்று உடம்பிற்பாய்ந்து கன்றச் செய்கின்றன; அந்தணச் சிறுவர்களுடன் அடவிக்குச் சென்ற நம் கண்மணி லோகிதமும் வரும்வேளை ஆய்விட்டது; [வஸ்திரங்களை எடுத்துக்கொள்கிருள்.] செல்லலாம்; பாகீரதி! அநுக்கிரகம் செய்யவேண்டும். [மறைகிருள்.]

---

## களம் 3.

இடம் :—இடுகாடு.
காலம் :—பகல்.

[அரிச்சந்திரன் ஒரு பிணத்தை நெருப்பில் எரித்துக் கொண்டு பிரவேசிக்கிருன்.]

அரிச்சந்திரன்:—விதியே, உன் எண்ணப்படி நடக்கச் சித்தமாயிருக்கிறேன். இந்திரன் சந்திரன் முதலிய கடவுளர்களே உன் மந்திரத்தில் அகப்பட்டு விழிக்கிருர்கள் என்ருல்—ஒரு மசகமாத்திரம்; காலத்துக்குத் தக்கவண்ணம் யாவும் மாறுகின்றன; [யோசிக்கிருன்.] விதம் விதமான வாசனைகளை மாற்றி மாற்றி அநுபவித்துவந்த நாஸிகை, இப்பொழுது பிணங்களின் சுடுநாற்றத்தை வெறுப்பின்றி நுகர்கின்றது; கற்பரண் சுகாசனமாயிற்று; விவித கானங்களையும் கேட்டுத் தொளையுற்ற செவி, மகனை, மகளை, மணமகனை, மனைவியை, மாதாபிதாக்களைப் பறிகொடுத்தவர்கள் புரண்டு புலம்பும் பேரொலியை அருவருப்பில்லாமல் விரும்புகின்றது; [காத்தைப் பார்த்து.] அந்தோ! கொடுங்காலமே! மதியன் மகள், மனமகிழ்ச்சியுடன் மடித்துக் கொடுக்கும் வாசத் தாம்பூலத்தையும் வாங்கச் சங்கோஜித்த, செங்கோல் தரித்த, ஈதலிற் சிறந்த, இந்தக் கொடுங்கரம், இப்பொழுது பிணங்களைச் சுட்டுப் பொசுக்கும் கரிக்கோலைக்கொண்டு

கட்டணப்பணத்தைக் கேட்டும் வாங்குகின்றது; [உலாவுகிறான்.] ஆ! ஒன்றா இரண்டா!! எத்தனை பிணங்கள்!!! சக்கிரவர்த்தியாய்த் தரணியைப் பரிபாலித்துக் கொண்டிருந்த நாம் [நாற்புறமும் பார்க்கிறான்.] சுடுகாட்டைக் காக்கவும் தலைப்பட்டுவிட்டோம்; ஆச்சரியம்! பசுவுக்கு இட்டு மலத்துடன் கழிந்த பிணவாய் அரிசி, அந்தோ! அந்தோ!! [தடியை ஊன்றி நின்றுகொண்டு.] என்ன உணவு வேண்டியிருக்கின்றது; ஆம்,

> "ஒருநாள் உணவை ஒழியென்றால் ஒழியாய்;
> இருநாளைக்கு ஏலென்றால் ஏலாய்;—ஒருநாளும்
> என்னோ அறியாய்; இடும்பைகூர் என் வயிறே
> உன்னோடு வாழ்தல் அரிது."

என்று எவ்வளவு அழகாய்க் கூறியிருக்கிறார்; நமக்குத் தெரியவில்லை; செல்வம் என்பதைத் தெரிவித்துக்கொண்டே நம்மிடத்தில் செல்வம் இருக்கின்றது; என்ன பயனற்ற செல்வம்:

> "பல்கதிர் விரித்துத் தோன்றிப் பாடுசெய் கதிரே போல
> மல்லல்நீர் உலகில் தோன்றி மறைந்திடும்; நம்மை விட்டுச்
> செல்வம் என்று உறுவதற்குச் செல்வம்என் றுரைக்கும் [பேர் நன்று
> அல்லலை விளைப்பது ஆகாது, அரும்பெறற் செல்வம்."

அம்மவோ! சுக துக்கங்கள் எப்பொழுதும் மனிதனைச் சுற்றிக்கொண்டே இருக்கின்றன; [யோசிக்கிறான்.] அவர்கள் தாம் கடவுள், குரு முதலிய பலரும்; கடன்பட்டுக் கதியற்றிருந்த நம்மை, ஆ! திக்குநோக்கித் தெண்டன் செய்ய வேண்டாமா! [வணங்குகிறான்.] ஒப்புக்கொண்டவன்று தோன்றிய அவமானமும் அருவருப்பும், வரவரக் குறைந்து கொண்டே

வருகின்றன; ஆம், எவற்றிற்கும் அப்பியாசந்தான் காரணம்; [ஆங்கு வெந்துகொண்டிருக்கும் பிணம் ஒன்று புரண்டு கீழே விழுதலும் அதைப் பார்த்து.] ஏன் விழுந்துவிட்டாய்? கடன் கொடுக்க வேண்டி யிருக்கின்றதோ? பாக்கியிருந்தால் இங்கு வந்திருக்கமாட்டாயே; ஒருகால் உலகத்துக்கு உதவி செய்யலாம் என்பதா? எனக்குத் தோன்றவில்லை; இனி உன்னால் என்ன உதவியுண்டு: [அது விரைத்துப் புரள்கின்றது.] ஓ! நான் தொட்டேன் என்ற வருத்தம் போலும்; ஆம், இருக்கலாம்; உன்னிலும் எத்தனையோ மடங்கு தாழ்ந்தவன்றான்; சந்தேகமே இல்லை; [யோசிக்கிறான்.] நீ மனைவி மக்களைச் சீர்ப்படுத்தி வந்திருக்கிறாய்; நான் அடிமைப்படுத்தி வந்திருக்கிறேன்; என் தொடுதலுக்கு வெறுக்கவேண்டியது நியாயம். பயப்படாதே; இனி உன்னைத் தீண்டமாட்டேன்; சுகமாய்ச் செல்; [கைத்தடியால் நெருப்பிற்றள்ளி விறகு அடுக்குகிறான்.] பிணங்களுக்கும் பணிவிடை செய்யப் பண்பட்டுவிட்டோம் [உலாவுகிறான்.] தவம் கிடந்து பெற்ற அருமை மகன் 'ஐயனை அனுப்பியதும் வந்துவிடுங்கள்' என்றான். உடலைப் பிரிந்து செல்லும் உயிரைப்போல, மனைவி திரும்பிப்பார்த்துக்கொண்டே சென்றாள்; அந்தோ! அவர்களை இனி எப்பொழுது காணப்போகிறோம்; [பயனற்ற குறிப்புடன்.] ஏது, இடமேயில்லை; என்ன வருந்துகின்றார்களோ! என்ன கஷ்டமோ! பரம்பொருளே, நீதான் கதி; [யோசிக்கிறான்.] அவர் நல்லவராகத்தான் காணப்பட்டார்; மனைவியின் குணம் எப்படியோ? அண்டினவர்களை ஆதரிக்கும் அரசர்குலத்தில் பிறந்த நாம், அண்டினவர்களுக்குத் தண்டனைசெய்யக் கொஞ்சமும் தவறினேம் இல்லை; கணவன் சுடுகாடு காத்துக்கொண்டிருக்கிறான் என்றால்—அப்பொழுதே பிரிந்து போய்விடுமே; என்ன செய்யலாம், கடவுளுக்கே உவப்பாயிருக்கின்றது.

"ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே
அடக்குவித்தால் ஆரொருவர் அடங்காதாரே
ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடாதாரே
உருகுவித்தால் ஆரொருவர் உருகாதாரே
பாட்டுவித்தால் ஆரொருவர் பாடாதாரே
பணிவித்தால் ஆரொருவர் பணியாதாரே
காட்டுவித்தால் ஆரொருவர் காணாதாரே
காண்பார் ஆர்? கண்ணுதலாய் காட்டாக்காலே."

[ஒரு பிணத்தின் வயிறு வெடித்துச் சத்தம் உண்டாதலும், அதைப் பார்த்து] நீ பரோபகாரிதான்; இறந்தும் உதவி செய்கிறாய்; உன் கொழுத்த மாம்சங்களை அக்கினிபகவான் நன்றாய் உட்கொண்டு பசியாறுகின்றார்; "தன்னைத் துணித்தாலும் தாங்காது அறம் செய்க" என்றும்,

"இளமையும் நில்லா; யாக்கையும் நில்லா;
வளவிய வான்பெரும் செல்வமும் நில்லா;
புத்தேள் உலகம் புதல்வரும் தாரார்;
மிக்க அறமே விழுத்துணை ஆவது."

என்றும் உள்ள வசனங்களை நன்றாய்த் தெரிந்திருக்கிறாய்; புண்ணியவான்; உன்னை என்னசெய்துகொள்ளவும் சுவாதீனம் உண்டு; நானோ உடலையும் ஒருவர்க்கு அடிமைப்படுத்தி யிருக்கிறேன்; என்னை நெருப்பு எங்ஙனம் கொள்ளும்? தற்கொலை செய்துகொள்வதற்கும் அசக்தன்; சுவாமி காரியம்தான் எனக்குத் தருமம். "அளந்தன போகம் அவரவர் ஆற்றால்." எல்லாம் முந்தியே ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றன; இப்பொழுது ஆசைப்படுவதிற் பயன் யாது? [தூரத்தில் புதிய பிணம் ஒன்று வருதலும், ஆங்கு வெந்துகொண்டிருக்கும் ஒரு பிணத்தை உற்றுப்பார்த்து.] ஓ! உனக்குத் துணைவன் வந்துவிட்டான்; அவனை அழைத்துவருகிறேன்; அதற்குள் நீ சுத்தனாய்விடு. [மறைகிறான்.]

## களம் 4.

இடம்:—காடு.

காலம்:—பகல்.

[லோகிதாஸ்யன் சமிதம் பொறுக்கிக்கொண்டு பிரவேசிக்கிறான்.]

லோகிதாஸ்யன்:—பிராமணப்பிள்ளைகள் மிகவும் பக்ஷமாயிருக்கிறார்கள்; அடிமைகொண்ட அந்தணர் அரைக்கணமும் பிரியவிடேன் என்கிறார்; அன்னையின் அன்பு அனைத்தினும் விஞ்சி யிருக்கின்றது; [யோசிக்கிறான்.] இப்பொழுது தந்தை அருகில் இல்லாத ஒன்றுமாத்திரம்தான் குறைவு; 'ஐயரை அனுப்பிவிட்டு அப்பொழுதே வருகிறேன்' என்று சொன்னாரே! எங்குச் சென்றிருப்பார்? [உலாவுகிறான்.] அயோத்தியிலிருக்கும்பொழுது அரைக்கணமும் தனித்திருக்கமுடியாது; இப்பொழுது நம்மைக் கவனிப்பவர் யார்? கடவுள்தான்; காட்டில் மான் குட்டிகளுடன் விளையாடிக்கொண்டிருப்பது மனத்துக்குச் சந்தோஷமாயிருக்கிறது? அவைகளின் மருண்ட பார்வையும், சிறுத்த கால்களும் மனத்தைக்கவர்கின்றன; [புறாக்கூட்டம் ஒன்று வந்து உட்காருதலும்] இந்தப் புறாக்களின் அழகினலும், மயில்களின் சிருங்காரத்தினலும் காடு பட்டணத்தைக் காட்டிலும் பதின்மடங்கு அதிகமாய் விளங்குகின்றது; [ஆங்கு மரத்திலிருந்து கிளிக்குஞ்சு ஒன்று கீழேவிழுதலும் அதைச் சென்று எடுத்துக்கொண்டு] அந்தோ! பாபம்!! கால் முறிந்து விட்டதோ? [காலைத் தடவுகிறான்.] பறக்கும் பருவம் வந்தும் படியில் விழக் காரணம் என்ன? ஒருகால் தவறியிருக்கலாமோ? உனக்கு உணவு ஊட்டுகிறேன்; [கொவ்வைப் பழம் ஒன்றைப் பறித்து] இந்தா, இது உனக்கு நல்ல உணவு; உண், உண், உண்; [வாயின் அருகில் வைக்கிறான்; அது உண்கின்றது.] கடவுள் ஜீவகோடிகளுக்குத் தகுதியான வெவ்வேறு

உணவுகளை உண்டு பண்ணியிருக்கிறார்; [அது சிறகடித்துக் கொள்ளுகின்றது.] பயப்படாதே; உன்னைக் கூட்டில் இட மாட்டேன்; குரு சிரேஷ்டர் பறவைகளைக் கூட்டில் அடைப் பது பெரும்பாவம் என்று சொல்லியிருக்கிறார்; எப்பொ ழுதோ செய்தபாபத்தினுல்தான் இப்பொழுது அடிமை வேலை செய்து வருகிறேன்; இஷ்டமான விடத்துக்குச்செல்; [விட்டுவிடுகிருன்; அது பறந்து செல்கின்றது.] தெய்வா தீனம்; அம்மட்டில் கால் முறியவில்லை; கூட்டுக்குச் சென்று விட் டது; [மேலேபார்க்கிருன்.] ஓ! நாழிகையாய் விட்டதே; "செய்வன திருந்தச் செய்." சமிதம் போதுமானது; அவர்க ளும் வந்து விடுவார்கள்; இப்பொழுது தருப்பம்தான் சேக ரிக்கவேண்டும்; உயர்ந்ததருப்பம் எங்கிருக்கின்றது? [நாற்புற மும் பார்க்கிருன்.] அதோ அந்தப் புதரில் செழிப்பாய் வளர் ந்து கிடக்கின்றன; அவற்றில் கொஞ்சம் பறித்துக்கொள்ள லாம்; [சமீபத்தில் சென்று தருப்பம் கொய்துகொண்டு] எவ்வ கைக் கருமங்களுக்கும் தருப்பம் இன்றியமையாததாயிருக் கின்றது; காரணம் விளங்க வில்லை; அந்தண சிரேஷ்டரைக் கேட்கவேண்டும்; [பாம்பு ஒன்று காலில் கடிக்கின்றது.] என்ன! என்னவோ காலில் கடிக்கின்றதே; [உதறிக்கொண்டு குனிந்து பார்த்துப் பயத்துடன்.] ஐயோ! பாம்பு!! பாம்பு!!! [அது மறை கின்றது.] பாம்பு கடித்து விட்டதே; [அலறிக்கொண்டு கீழே விழுகிருன்.] அந்தண சிரேஷ்டர்களே, பூஜ்யர்களே, சுவாமி களே, அபயம்! அபயம்!!

[திரைக்குள்.] வசு! நீலம்! சீக்கிரம் வாருங்கள்; சீக்கி ரம் வாருங்கள்; நம் லோகிதம் குரல் போல் இருக்கின்றது; அபயமிடுகிருன்.

[வசு சேகரன், நீலலோகிதன், சோம நாதன்மூவரும் பிரவே சிக்கிருர்கள்.]

மூவரும்:—லோகிதம்! என்ன!! என்ன!!! எதைக் கண்டு பயந்தாய்?

லோகி:—என்னைப்பாம்பு கடித்துவிட்டது; இதோ பாருங்கள். [காலைக்காட்டுகிறான்.]

மூவரும்:—[காலைத்தொட்டுப் பார்த்துக்கொண்டு] ஐயோ! இரத்தம் கறுத்து வடிகின்றதே; என்ன செய்யலாம்; பாம்பைப் பார்த்தாயா?

லோகி:—ஆம், அந்தப் புற்றில் ஒளிந்து கொண்டுவிட்டது.

வசு:—சோம நாதா! முதலில் காலைக்கட்டு; விஷம் ஏறிவிடப் போகின்றது; [செய்கிறான்.]

லோகி:—மூச்சுவிட முடிய வில்லை; விஷம் ஏறுவது போல் இருக்கின்றது; ஜகதீசா! என்ன செய்வேன்?

நீல:—மந்திரம் முதலிய ஒன்றும் தெரியமாட்டாதே; என்ன செய்யப்போகிறோம்; விசுவநாதப்பிரபோ! இதுவும் உமக்குத் திருவிளையாடலா?

சோம:—அடிமை வேலை போதாதென்று பாம்பும் பார்த்துக்கொண்டிருந்ததே; நாங்கள் பறித்துத் தருகிறோம்; உன்னால் முடியாது முடியாதென்று நூறு தடவை சொல்லியும் கேட்கவில்லையே;

வசு:—நடந்ததைச் சொல்வதிற் பயன் என்ன? இப்பொழுது செய்யவேண்டியதைச் சீக்கிரம் சொல்லுங்கள்.

நீல:—இந்த நிர்மானுஷ்யமான காட்டில் நாம் வைத்துக்கொண்டு என்ன செய்கிறது; விஷம் நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகரிக்கின்றது; சீக்கிரம் தூக்கிக்கொண்டு பட்டணத்துக்குச் செல்லவேண்டியதுதான்.

சோம:—ஆம், அதுதான் நல்ல யோசனை; வழியிலும் தெரிந்தவர்கள் யாரேனும் எதிர்ப்படலாம்.

வசு :—லோகிதம் ; தைரியப்படுத்திக்கொள் ; வா! எடுத்துக்கொள்கிறோம். [எடுத்துக்கொள்கிறார்கள்.]

லோகி:—[சிறிது சென்றதும்] ஆப்தர்களே, என்னை விட்டுவிடுங்கள்; மார்பு அடைக்கின்றது! பார்வை தெரியவில்லை; ஐயோ! என்னவோ செய்கின்றதே; அம்மா ! அம்மா !! [கீழேவிடுகிறார்கள். நீலகண்டன் உட்கார்ந்து மார்பில் சார்த்திக்கொள்கிறான்.]

நீல:—லோகிதம், உனக்கு என்ன செய்கின்றது அப்பா; [தலை தொங்கிவிடுகிறது ; சோமசுந்தரம் எடுத்து நிமிர்த்துகிறான்.]

லோகி :—நா வறள்கிறது. தண்ணீர் ! தண்ணீர் !!

சோம :—இதோ வந்துவிட்டேன். [ஓடுகிறான்.]

வசு :—லோகிதம், ஏன் விழித்துப் பார்க்கிறாய் ?

லோகி :—அம்மா ! அம்மா !! இனி நான் பிழைக்கவே—

நீல :—[தனக்குள்.] இனிப் பிழைக்கமாட்டான் போல் இருக்கின்றதே ; என்ன செய்வோம். [கையைப் பிசைகிறான்.] விசுவேசா! [வெளியில்.] அப்பா, பயப்படாதே; [சோமசுந்தரம் தாமரை யிலையில் தண்ணீர் கொண்டு வருகிறான்.

லோகி :—என் அன்னைக்கு—தண்ணீர் ! தண்ணீர் !!

சோம :—இந்தா ! இந்தா !! வாயைத்திற ; [திறக்கிறான்; விடுகிறான்.]

லோகி :—என் கடைசி வந்தனத்தை—[மூர்ச்சிக்கிறான்.]

வசு :—அடே, முகத்தில் தண்ணீர் தெளி. [தெளிக்கிறார்கள்; சிறிது பிரக்ஞை வருகிறது.]

லோகி :—துக்கப்பட வேண்டாம் : ஐயோ ! மார்—கண்களை மூடிக்கொள்கிறான்; தண்ணீர் தெளிக்கிறார்கள்.] தந்தை வரும்—ஐயோ ! போகிறேன். தண்ணீர்! [வாயில் தண்ணீர்

விடுகிறார்கள்.] அன்னையை—[கண்களை மூடிக்கொள்கிறான்; தண்ணீர் தெளிக்கிறார்கள்.] அந்தணருக்கு—ஐயோ! தண்ணீர்! தண்ணீர்!!! [வாயைத் திறக்கிறான்; விடுகிறார்கள்.] கடவுள் என்னை—[மலர விழிக்கிறான், மூவரும் துக்கப்படுகிறார்கள்.] அம்மா சொல்லி விடுங்கள்; [வாயைத் திறக்கிறான், தண்ணீர்விடுகிறார்கள். கையைக் குவித்து மலரவிழித்துக்கொண்டே.] ந—ம—கா—ம். [கண்களைச் சுழற்றுகிறான். மூச்சு அடங்கி விடுகிறது.]

வசு :—லோகிதம்! ஐயோ லோகிதம்!! லோகிதம்!!! போய்விட்டாயா!!! [மூவரும் முகத்தில் அறைந்து கொள்கிறார்கள்.]

மூவரும் :—ஐயையோ! லோகிதம், எங்களை இப்படி நடுக்காட்டில் தவிக்கவிட்டுச் செல்வாயா! ஐயோ! ஐயோ!! [முகத்தில் அடித்துக்கொள்கிறார்கள்.]

சோம :—ஜகதீசா, எங்களுக்கு இவன் ஒருவன் சிநேகமாயிருப்பது பொறுக்கவில்லையா?

வசு :—அட! சிந்தாமணி, உன் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாலும் போதுமே.

நீல :—அந்தோ! மகா பாபிகளாகிய நாங்கள் இரண்டு நாழிகைக்கு முன்புதானே உன் பெருங்குணங்களை வர்ணித்துக்கொண்டிருந்தோம்;

வசு :—நாங்கள் என்ன செய்தால் உன் ஆத்மாவுக்கு ஆறுதல் உண்டாகுமோ அதுவும் தெரியாதிருக்கின்றோமே; ஈசுவரா!

சோம :—அந்தோ! நிர்ப்பாக்கியர்களான எங்களுடன் நீ சேராமல் இருந்தால் சௌக்கியமாகவே இருந்திருப்பாய்.

நீல :—கடவுளே, ஸ்ரீ மகாலக்ஷ்மி போன்ற அந்த அம்மணிக்கு இவன் மரணத்தை எங்ஙனம் சொல்லப்போகின்றோம்? அப்பா! நீ மாத்திரம் தனித்துப் போய்விட்டாயே.

வசு :—எங்களுடன் வந்துதானா சாகவேண்டும்? இந்தப் பாழும்பாம்பு வீட்டில் கடித்திருக்கக் கூடாதா?

சோம :—விசுவநாதா! எங்கள் அருமை லோகிதம் தங்கள் பாதத்தில் வந்து சேர்ந்துவிட்டானா? இளங் கரும்பு போன்ற இவன், பாம்புகடித்து இறப்பதற்குக் காரணம் தெரியவில்லையே?

நீல:—எங்கள் வரையில் இப்பொழுதே கலிகாலம் உதயமாய்விட்டது; இது யார் செய்த தீவினையோ?

வசு :—அப்பா! உன்னைக் காட்டில் விட்டு எப்படித் தனித்துச் செல்லப்போகிறோம்; ஏது? நீ சென்றவழியை இதோ நாங்களும் சென்று பின்பற்றுகிறோம். [லோகிதாஸ்யனைக்கீழே வளர்த்திவிட்டுப் புற்றண்டைசென்று] சர்ப்பராஜனே! உனக்குக் கோடி புண்யம் உண்டு; எங்களையும் லோகிதத்துடன் அனுப்பிவிடு; ஏன்? காது கேட்கவில்லையா? உன்னை அனைவரும் கட்செவி என்று அழைக்கிறார்களே.

சோம :—வசு, லோகிதத்தைச் சீக்கிரம் எடுத்துக் கொண்டு செல்லலாம்; ஒருகால், மாந்திரிகர்கள்—

நீல:—அவன் அப்பொழுதே இறந்துபோய்விட்டானே; இறந்தவர்களை உயிர்ப்பிக்கும் அற்புத புருஷர்களும் இருக்கின்றார்களா?

சோம:—அவன் தாயிடம் ஒப்புவிப்பது எதற்கும் நல்லதல்லவா?

வசு :—அதுவும் முடியாத காரியமாயிற்றே; காட்டில் இறந்த பிணத்தை எப்படி வீட்டுக்கு எடுத்துக்கொண்டு செல்வது?

நீல :—இங்கே விட்டுச்சென்றால் துஷ்ட மிருகங்கள் வாயிற் போட்டுக்கொண்டுவிடும்; அவன் அன்னைக்குப் பிணமும் அகப்பட மாட்டாது.

சோம :—இவ்விடத்திலேயே பத்திரப் படுத்தித்தான் செல்லவேண்டும்; சீக்கிரம் சென்று தெரிவித்தாலாவது அந்த அம்மணிக்குக் கொஞ்சம் உபகாரமா யிருக்கும். [யாவரும் பிணத்தண்டை வருகிறார்கள்.]

வசு :—லோகிதம், இனி உன்னை எப்பொழுது காணப் போகிறோம்; அப்பா, உனக்கு இந்தக் காசிக் காடுதானா மரணஸ்தானமாக ஏற்பட்டது? தழைகளை ஒடித்துப் பரப்புங்கள்; [இருவரும் செய்கிறார்கள்; வசுசேகரன் இடத்தைச் சுத்தம் செய்கிறான்,]

மூவரும் :—லோகிதம், உனக்கு இந்தக் கொஞ்சித் தழைப் படுக்கையைத் தவிர வேறு ஒன்றும் அமைக்கச் சக்தியற்றவர்களா யிருக்கிறோம். [வளரவிடுகிறார்கள்.]

வசு:—மேலேயும் தழை பரப்புங்கள். [செய்கிறார்கள்.]

மூவரும் :—வனதேவதைகளே! எங்கள் அருமை லோகிதத்தை உங்கள் ஆதீனத்தில் விட்டுச் செல்கிறோம்; இவன் அன்னை வருங்காறும் இவனைக் காப்பாற்றுவது தங்கள் கடமை; அறியாச் சிறுவர்கள்; வேறு என்ன செய்யப் போகிறோம்?

வசு :—பிரிந்து செல்லக் கால் எழவில்லை; பொழுதும் சாய்ந்துவிட்டது: அன்னைக்குச் சீக்கிரம் சென்று தெரியப் படுத்த வேண்டுமே.

நீல :—விசுவநாதப் பிரபோ! தங்கள் திருவுளச் செயலை மாற்ற வல்லவர் யார்? லோகிதம்! உன்னை உயிருடன் முத்தம் கொள்ளும் பாக்கியம் எங்களுக்குக் கிடைக்காவிட்டாலும் உன் பிணத்தையாவது முத்தம் கொள்கிறோம். [மூவரும் செய்கிறார்கள்: தழையால் நன்றாய் மூடிவிட்டு] வசு, தழைகளை அடையாளமாக வழியில் ஒடித்துப் போட்டுக்கொண்டு

செல்லலாம்; அது அன்னைக்கு வழியைக் கண்டுபிடிப்பதற்கு அநுகூலமா யிருக்கும்.

இருவரும்:—ஆம், நல்லதுதான். [மூவரும் மறைகிறார்கள்.]

## களம் 5.

இடம்:—காசிப்பட்டணத்துப் பறைச்சேரியின் ஒரு புறம்.

காலம்:—மாலை.

[வீரபாகு பிரவேசிக்கிறான்.]

வீரபாகு:—உலகத்தில் தவத்துக்கு மிஞ்சியது வேறு ஒன்றும் இல்லை; உயர்வடைய விரும்புகின்றவர் பலரும் தவத்தையே செய்யவேண்டும்;

"வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும்."

பறையனாகவும் உருமாறி, அரிச்சந்திரனை அடிமைகொள்வதற்கு; வேறு என்ன விருக்கின்றது? [உலாவுகிறான்.] இந்திரன் முதலிய தேவர்களும் அதற்குப் பயப்படுகிறார்கள்.

"ஐந்தவித்தான் ஆற்றற்கு அகல்விசும்புளார் கோமான் இந்திரனே சாலும் கரி.

சீ! இந்திரனா? அவன் பாட்டன் இந்திரைக் கேள்வனாயிருந்தாலும்தான் என்ன? பிருகு முதலிய மகரிஷிகள்—[யோசிக்கிறான்.] இல்லாவிட்டால், விசுவாமித்திரருக்கும் நமக்கும் என்ன சம்பந்தம்? மனத்தினால் கூட நம்மைத் தூஷிப்பது கிடையாது. [உலாவுகிறான்] பறைத்தொழில்; அதனிலும் பிணம் சுடுதல்; ஒரு நாளாவது பின்வாங்கினா னில்லையே; என்ன மரியாதை; என்ன

பக்தி; இப்படி ஒருவராலும்—[நாற்புறமும் பார்க்கிறான்.] என்னவோ ஒன்றும் பிடிக்கவில்லை; பயனற்ற வேலையில் இறங்கியிருக்கிறார்; எப்படி முடியும்?

"மிக்குடையராகி மிகமதிக்கப் பட்டாரை
ஒற்கப்பட முயறு மென்றல் இழுக்காகும்.
நற்கெளி தாகி விடினும் நளிர்வரைமேல்
கற்கிள்ளிக் கை உய்ந்தார் இல்."

அவருக்கும் சுகம் இல்லை; பிறரையும் சுகிக்க விடுவதில்லை; ஹடவாதி; இரவும் பகலும் உழைத்து வருகிறார்; இது காறும் என்ன பயன் கண்டுவிட்டார்? பரிதாபமாகத் தான் இருக்கிறது; முக்கியம் அவரைத் திருப்புகின்ற வர் ஒருவரும் கிடையார்; அனைவரும் திரும்புகின்ற வர்கள் தாம்; [யோசிக்கிறான்.] நமக்கு என்ன? சொன் னதைச் செய்துவிடலாம்; பத்துடன் பதினொன்று; இன் னும் இரண்டொரு தினம்தானே; ஏன் விரோதித்துக்கொள் ளவேண்டும்? பொன்னைச்சுட்டால் மாற்று அதிகரிக்கின்றது; [உலாவுகிறான்.] அவரே வழிக்கு வந்துவிடுகிறார்; நான்கில் ஒருபாகம்; ஆ! ஆ!! கிடைக்கக் கூடியதா? என்னவிந்தை! யாவர்க்குக் கிடைக்கும்? ஆம் இப்பொழுது என்ன செய்ய வேண்டும்? [ஆகாயத்தைப் பார்த்து] சுடுகாட்டுக்குச் சென்று வருவது எதற்கும் நல்லது; பலன் கொடுக்கும் சமயம் இது தான். மகன் கண்முன் இறந்து பிணமாய்க் கிடக்க—மனை வியை அனுப்புவதற்கும் வழியில்லை; கொள்ளிக்கும் விள்ளாத கொடிய இரவு; எவரும் கவனிக்கமுடியாதாம்; இருந்தால்? யஜமானத் துரோகமா? கனவிலும் நினைக்க மாட்டான் [உலாவுகிறான்.] அரிச்சந்திரனையும் விசுவாமித் திரனையும் கண் இமைக்காமல் கவனித்துக் கொண்டு வருகிறார்கள்; ஏன்! தெருச்சண்டை அல்லவோ! ஒரு

மாதத்துக்கு எண்ணேயே வேண்டாம் ; கண்ணுக்குக் குளிர்ச்சிதான்; நம்மவர்க்கு இப்பொழுது இதுவே மணியமாய் விட்டது. எருது நோய் காக்கைக்குத் தெரியுமா? அநுபவிக்கின்றவன் அரிச்சந்திரன்; தாரைவார்க்கின்றவர் விசுவாமித்திரர் ; [யோசிக்கிருன்.] நான் பொறுமை நான் பொறுமை ; என்று பெருமையடித்துக் கொள்கின்ருர்களே ; ஒரு பக்கம் இடிந்து விழுகின்ற பூமிக்கும் பொறை என்ற பெயர் கிடைத்திருக்கின்றது ; என்ன பொறுமை ! பயனற்றபொறுமை! அரிச்சந்திரனிடத்திலும் சந்திரமதி யிடத்திலும் தான் பொறுமையைப் பார்க்கவேண்டும் ; சந்திரமதி மாத்திரம் கொஞ்சம் மனத்தில் நினைத்துவிட்டால், ஆ ! ஆயிரம் கோடி விசுவா மித்திரகளா யிருந்தாலும் என்ன ? அரைக்கணம் தான் : பஸ்மம் ! பஸ்மம் !! தவம் போனுற் போகட்டும் ; ஆள் பிழைத்தால் அதுவே வெற்றிதான் ; விசுவாமித்திரர் உயர்வதற்கும் தாழ்வதற்கும் இந்த ஒரு ராத்திரி நடுவில் இடறுகட்டையாக இருக்கிறது; சுட்டாலும் சுடலாம்; விட்டாலும் விடலாம்; என்ன செய்வானே ? எல்லாவற்றிற்கும் நலம் ; கொஞ்சம் மறைந்து பார்த்து வரலாம். [மறைகிருன்.]

# ஆருவது அங்கம்.

## களம் 1.

இடம் :—வனம்.

காலம் :—முன் இரவு.

[சந்திரமதி மகனைத் தேடிக்கொண்டு பிரவேசிக்கிருள்.]

சந்திரமதி:—குழந்தாய் இந்தப் பரந்த காட்டில் உன்னை எங்கென்று கண்டு தேடுவேன்; என் கொடுங் கண்களும் ஜலத்தில் மறைந்து சமயத்தில் சதிசெய்து விடுகின்றன; [கண்ணைத் துடைக்கிருள்.] அந்தோ; இந்தக் காடு அடங்கலும் என் அருமைக் கண்மணி யாகவே காணப் படுகின்றதே; [பொய்த் தோற்றத்தைத் தழுவலும் அங்கு ஒன்றும் இல்லாமைக் கண்டு.] குழந்தாய், என்னை வஞ்சிப்பது தருமமா? இது காலமும் அல்லவே; [நடக்கிருள்.] பொழுதும் எப்பொழுதோ மறைந்து இருட்டி விட்டது; துணை இன்றித் தியங்குகின்ற எனக்கு உன்னைக் காட்டுவாரையும் காணேனே; உன் தந்தை வந்து லோகிதம் எங்கே என்ருல், என்ன சொல்லுவேன்; ஆ! என்ன விபரீதம்;

"செங்கோல் அறத்தின் முறையே செலுத்து
 திறலோன் எவர்க்கும் உறவோன்
வெங்கோப யானை விறல் மன்னன் நம்மை
 விடுவிக்க எண்ணி வரு நாள்,
பங்கேருகத்து மலர்போல் விளங்கு
 வதனு மகிழ்ந்த பரிவால்
எங்கே என் ஆசை மகன் என்றுரைக்கில்,
 எதிர் எது சொல்லன் மகனே."

வாழை யடிவாழையாய்ப் பெருகிக்கொண்டுவந்த, பரிசுத்த சூரியவம்சம், மகாபாபியாகிய என்னுடன் தலை கவிழ்ந்து

விட்டது; பெரும்புலி யொன்று கர்ஜிக்கின்றது.] ஒருகால் இந்தப் புலிதான் மகனை அருந்தி விட்டதோ? இந்தக் காடு முழுவதும் துருவிப் பார்த்து விட்டேனே; ஆம், அப்படித்தான் இருக்கவேண்டும்; என் செல்வமே, ஏது, இனி உன் முகத்தைக் காணப்போகின்றதே யில்லை; [யோசிக்கிறாள்.] இரண்டும் அநுபவித்துவிட்டோம்; பின்னும் எதற்காக இந்த உடலை விரும்பவேண்டும்; நாமும் இதற்கு உணவாய் விடலாம்; குழந்தாய், உன்னைத் தின்ற மிருகத்துக்கே இரையாகி, நானும் உன்னைப் பின்பற்றுகின்றேன்; இனி அரைக்கணமும் சகியேன்; [அதன் சமீபம் சென்று] புலியரசனே, உனக்கு உணவாக வந்திருக்கிறேன்; சீக்கிரம் என்னையும் உண்டு பசியாறு; [அதுவெறுமனே யிருக்கின்றது.] ஏன்? பசி இல்லையா? நாளைக்கு என்ன செய்வாய்? இருவர்க்கும் பயன் உண்டு; [அது ஒன்றும் செய்யாதிருக்கின்றது.] ஓ! தெரிந்து விட்டது; உனக்குக் கோபம் உண்டாக்க வேண்டும் போலும்; அப்படியானால் என் அருமை லோகிதம் என்ன கோபத்தை உண்டாக்கி யிருக்கிறான்; ஒருகால் பயமா? ஆயின் அவனையே தின்றிருக்கக்கூடாது; பயப்படாதே; அருகில் அரசர் இல்லை; ஏற்றுக்கொள்: இதோ உனக்குக் கோபம் மூட்டுகிறேன்; [அதன்மீது விழுகிறாள்; அது கண்ணீர் வடித்துக்கொண்டு நிற்கின்றது.] ஏன் அழுகிறாய்? நீ லோகிதத்தைக் கொல்லவில்லை; உங்கள் இனத்தார் நரமாமிசம் விரும்புகின்றவர்களாயிற்றே; என் மாமிசம் ருசிக்கமாட்டாரோ! [அது நக்குகின்றது.] ஓ! மறந்து விட்டேன்; அடிமைப் பட்டவள்; அதனாற்றான் கொள்ளவில்லைபோலும்; அந்தோ! ஐம்பதினாயிரம் பொன்னைக் கொட்டிக் கொடுத்திருக்கிறார்; சுவாமித்துரோகம் சித்திக்கும்; மிருகேந்திரனே, உன்னைக் கும்பிடுகிறேன்; [வணங்குகிறாள்.]

இது கிடக்கட்டும்; உனக்கு இரவில் நன்ருய்க் கண் தெரியுமே; என் கண்மணி லோகிதம் இருக்கும் இடத்தைக் காண்பி; உனக்குப் புண்ணியம் உண்டு; [திரும்புகிருள்.] வயிற்றில் என்னவோ செய்கின்றதே; குழந்தாய், உன் இருப்பிடம் தெரியாமல் அலைந்துகொண் டிருக்கிறேனே; கொஞ்சமும் கருணை இல்லையா? [உற்றுப் பார்க்கிருள்.] ஆ! இஃதென்ன வடவிருக்ஷமா! ஒருகால் அந்தப் பிள்ளைகள் குறித்தவிடம் இதுதானே? வனதேவதைகளே, நீங்களேனும் கொஞ்சம் வாய் திறந்து வசனிக்க மாட்டீர்களா? ஒன்றும் தெரிய வில்லையே; [கால் இடறிக் கீழேவிழுகிருள்.] என்ன இது! சில்லென்று தட்டுப்படுகின்றதே; [குனிந்து பார்த்து.] குழந்தாய்! லோகிதம்!! லோகிதம்!!! [மூர்ச்சிக்கிருள். பின்பு தெளிந்து உட்கார்ந்து] இருட்டில் அநாதையாய்ப் படுத்துக்கொண்டிருக்கிருயே; [எடுத்து ஒரு முத்தமிட்டு] என்துரையே, பேசமாட்டாயா? இடறிவிட்டேன் என்று கோபமா? தெரியாமற் செய்துவிட்டேன்; முன்பெல்லாம் கோபிக்கமாட்டாயே; சற்று உன் முகத்தைக் காட்டு; [மடியில் வைத்து முத்தமிட்டுக் கொண்டு] என் செல்வமே, நீ அயோத்தியை [நாற்புறமும் பார்க்கிருள்.] அரசாள்வாய் என்று கூறினர்களே; என்னிலும் மகாபாபிகள் உலகத்தில் உண்டா? ஒரு சார்வபௌம சக்கிரவர்த்தி, சர்வ விதத்திலும் கெட்டுச் சென்ற விடமே தெரியவில்லை; குமாரக்கடவுள் போன்ற, இந்தக் குவலயத்தை ஆளப்பிறந்த, குலவிளக்கு, கொடும் பாம்புக்கு இரையாய் விட்டான்; ஏன் பெண்ணுய்ப் பிறந்தோமோ? [முகத்தில் அறைந்துகொள்கிருள்.] என் பச்சைக்கிளியே,

"பனியால் நனைந்து வெயிலாலுலர்ந்து
  பசியால் அலைந்தும் உலவா
அரியாய வெங்கண் அரவால் இறந்த
  அதிபாபம் என்கொல்? அறியேன்,

தனியே கிடந்து விடநோய் செறிந்து
 தரைமீதுருண்ட மகனே!
இனியாரை நம்பி உயிர்வாழ்வம்
 என்றன் இறையோனும் யானும் அவமே."

உன்னைக் கண்டு விலகியிருந்த துக்கங்கள் எல்லாம் இப்பொழுது ஒன்றாய்ச் சூழ்ந்துகொண்டனவே; என் கொடுங் கண்கள் கொஞ்சம் கலங்கவும் சகிக்காத நீ, இப்பொழுது ஆறாய்ப் பெருகி உன்னை அபிஷேகம் செய்யவும் அறியாதிருக்கின்றாய்; உன்னால், இந்த உலகம் அடங்கலும் எனக்கு இருளாய் விட்டதப்பா! கட்டிக்கரும்பே, இப்படி மோசம் செய்வாய் என்று கனவிலும் நினைக்க வில்லையே; அப்பா, அந்தணர் சமிதை கொண்டுவருவாய் என்று காத்துக்கொண்டிருக்கிறாரே; அயர்ந்து தூங்குகின்றாயா? லோகிதம், என் மீது கோபமா? எத்தனை தடவை முத்தமிட்டுக் கதறியும் ஏன் என்று கேட்டாயில்லையே; "அம்மணி, நாங்கள் அடிமைகள்; சுவாமித் துரோகிகளாய் விடுவோம்" என்று குதூகலத்தோடு பணிவிடை செய்வாயே; "உங்களுக்கு நற்காலம் வந்துவிட்டது; சீக்கிரம் மேன்மை அடைவீர்கள்" என்று ஐயரவர்கள் அக்கிஹோத்திர முன்னிலையில் நேற்றுத்தானே கூறினார்கள்; உன்னைப் பாம்புக்குப் பறிகொடுப்பதுதான் நற்காலமா? அப்பா, அவர் வாக்கு உண்மையாகவே இருக்கலாம்.

செய் தீ வினை இருக்கத் தெய்வத்தை நொந்தக்கால்
எய்த வருமோ இருநிதியம்?—வையத்து
அறும்பாவம் என்ன அறிந்தன்றிடார்க்கின்று
வெறும்பானை பொங்குமோ மேல்?"

நம் தீவினையை மாற்றுவதற்கு யாவர் வல்லவர்? என் முத்தே; பாம்புக்காகவா உன்னைப்போற்றி வளர்த்தேன்?

என்ன பயந்தாயோ? என்ன நினைந்தாயோ அடி பாபி இவ்வளவு துக்கத்தைக் கண்டும், உன் நெஞ்சம் பிளக்க வில்லையே; உன் மனம் என்ன இரும்பா? சீ! அல்ல, அல்ல; அது நெருப்பில் இளகுமே; இது கேவலம் வலிய கல்; சந்தேகமே யில்லை; [மார்பில் அறைந்து கொள்கிருள்.] என் அருமைக் கிளியே, அரசச் செல்வத்தில் வளர்ந்த நீ,

" நிறை யோசை பெற்ற பறையோசை யற்ற
நிறையாய் நிறைந்த கழுகின்
சிறை யோதை யுற்ற செடியூடிறக்க
விதியார் இழைத்த செயலோ"?

அந்நாளில் இறந்தால், இந்த அவனி அடங்கலும் அருந் துயர் உழக்கும் என்றுதான் இப்பொழுது இறந்தாயோ? அப்பா, நீ பிறந்த சீரும், வளர்ந்த செல்வமும், அந்தோ! யாவும் கனவாய் விட்டனவே; உன்னையும் பறிகொடுத்து விட்டு, ஐயோ! ஐயோ!! [முகத்தில் அறைந்து கொள்கிருள்.] என்னிலும் பாபி இந்த உலகத்தில் உண்டா? என் கட்டிக் கரும்பே, இந்தப் பரந்த காட்டில் உன்னைத் தவிர வேறுயாவர் எனக்குத் துணை இருக்கிருர்கள்? அப்பா! ஒன்றும் சொல்லமாட்டேன் என்கின்ருயே;

" வானின் றிழிந்து சொரிகின்ற தாரை
மழைபோல வீழ விழி நீர்
ஊனின்றி மேனி உதிரங்கள் சிந்த
உயிரின்றி வெம்பு தழலின்
மேனின்று வெந்த தளிர்போல் உயங்கி
விதியாரை நொந்து தனியே
யானின் றிரங்க ஏனென்பதில்லை
இதுவோ உன் நீதி மகனே."

உன் தந்தையும் அய்யருடன் சென்று விட்டார்; இப்பொழுது இன்னது செய்வதென்றும் தெரியவில்லையே; [யோசிக்கிறாள்.] சுடுகாடு எங்கிருக்கின்றதோ? எவ்வளவு தொலைவோ? சொல்வாரையும் காணேன்; அப்பா, உன்னைச் சுடுகாட்டுக்கா எடுத்துக்கொண்டு செல்வேன்; [அணைத்துக்கொள்கிறாள்.] என்ன செய்வேனடா? குழந்தாய், நீயோ பேசமாட்டேன் என்கிறாய்; பேய்களும் உறங்குகின்றன; உன்னை இந்த நள்ளிரவில், எடுத்துச் செல்வாரும் அற்று, இடுகாடும் தெரியாமல் ஏங்கித் தவிக்கிறேன் அப்பா, "ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும், மாண்டார் வருவாரோ?" என்றதை நிச்சயமாக்கி விட்டாயே; கண்மணி, வா! உன்னை நானே எடுத்துச் செல்கிறேன்; [எழுந்து மார்பில் சார்த்திக் கொள்கிறாள்.] எந்தப் பக்கமும் இருட்டாயிருக்கின்றதே; இந்தத் திக்கில் இருக்கின்றேனென்றும் தெரியவில்லை; சர்வேசா, என்னால் என்ன செய்யமுடியும்? தங்கள் திருக்குறிப்பின் வண்ணம் நடக்கச் சித்தமாயிருக்கிறேன்.

குழந்தாய், செல்லலாம் வா! [மறைகிறாள்.]

---

## களம் 2.

காலம்:—இரவு.

இடம்:—காளகண்டன் வீடு.

[காளகண்டனும் காந்திமதியும் பிரவேசிக்கிறார்கள்.]

காந்திமதி:—நாதா! சந்திரமதியை இன்னும் காணோமே?

காளகண்டன்:—அகாலமாய் விட்டது; இனிவரமாட்டாள்.

காந்தி:—துணையின்றிக் காட்டில் அகப்பட்டுக்கொண்டுவிட்டாளோ?

காந்தி:—யார்? காளகண்டனா?

காள:—ஆம்.

காந்தி:—இத்தனை நாள் எங்கிருந்தான்?

காள:—நேபாளத்தில்.

காந்தி:—ஆனால், இப்பொழுதே செல்லலாமே?

காள:—கூடாது; விடியற்காலையில்தான் மறையவேண்டும்.

காந்தி:—ஏன்!

காள:—ஒருகால் இப்பொழுது சந்திரமதி வரக்கூடும்.

காந்தி:—[ஆச்சரியத்துடன்.] இப்பொழுதா? அகாலமாய் விட்டதே: எதற்காக?

காள:—மகனை அடக்கம் செய்வதற்கு.

காந்தி:—தகனம் செய்து விட்டால் உண்மையில் இறந்து விடுவானே.

காள:—நான்தான் முந்தியே சொல்லியிருக்கின்றேனே விசுவாமித்திரர் அங்ஙனம் வரவிடமாட்டார் என்று; நாளைக்குள் வெவ்வேறு சம்பவங்கள் நடக்கப்போகின்றன. [யோசனையை அபிநயித்து] இரு, இரு; விசுவாமித்திரர் என்னைக் காண விரும்புகிறார்; செல்லவேண்டும்.

காந்தி:—இன்னும் எதற்காக? பதிவிரதை, விசுவாமித்திரர் கோபத்துக்காவது ஆறுதல் கிடைக்கும்; தாங்கள் ஒன்றும் ஒப்புக்கொள்ளவேண்டாம்.

காள:—அவர் முழுவதும் அடங்கிவிட்டார்; இனித் தீங்கு நேரிடமாட்டாது.

காந்தி:—ஆனால் சென்றுவாருங்கள்; நானும் உள்ளே செல்கிறேன். [இருவரும் மறைகிறார்கள்.]

---

## களம் 3.

இடம்:—இடுகாட்டின் ஒருபுறம்.
காலம் :—நள்ளிரவு.

[சந்திரமதி சிதை அடுக்கிக்கொண்டு பிரவேசிக்கிறாள்.]

சந்திரமதி:—கண்மணி, பிணங்களைச் சுட்டுக்கழிந்த, அந்தோ! கரிக்கட்டைகள், குறைக்கட்டைகள் ; சக்கிரவர்த்தித்திருமகனே, இவைகளா உனக்குச் சிதை ? சந்தனம், அகில், தேவதாரு முதலிய வாசனைக் கட்டைகள் ; என்ன காலம் ; குழந்தாய், உன் மரணத்தைப் பற்றி—இல்லை, இல்லை ; ஓவ்வொரு நிமிஷமும் இறந்துகொண்டே யிருக்கின்றது ;

" இதுவென வரைந்து வாழு நாளுணர்ந்தோர்
முது நீருலகில் முழுவதும் இல்லை. "

" கருவினில், மழவில், கங்குற் காலையில், பருவம் ஆறில்,
பெருகிய பொழுதில், நோயில், பிரிவினில், பகையில், [ஈட்டும
பொருள்வயின், வேட்ட தெய்தாப்புன்மையில், முதுமை [தன்னில்,]
மருவிய இழப்பில், சாவில் வன்றுயர் மனிதர்க்குண்டே."

கடவுளே, சத்துருவுக்கும் இந்தக் கஷ்டம் வேண்டாம் [மகன் சமீபம் சென்று] அயோத்தியை அரசாளப் பிறந்த நீ, இந்தக் காசிப்பட்டணத்தில், அர்த்தராத்திரியில், அநாதைப் பிணமாய் எரிக்கப்படுவாய் என்று, [மார்பில் கரத்தை வைத்துக் கொள்கிறாள்.] ஐயோ! கனவிலும் நினைத்தேன் இல்லையே ; குழந்தாய் ! [எடுத்துக்கொள்கிறாள்.] என் கண்ணே, [முத்தமிடுகிறாள்.] இந்த எரிந்த குறைக்கட்டைப் படுக்கையில், என் முத்தே, கண்வளர்வாயப்பா ; [சிதையில் வைக்கிறாள்.] செல்வமே, நீயும் சென்றுவிட்டாய் ; இனி யாவர் முகத்தைக்

கண்டு ஆற்றிக்கொள்ளப் போகிறேன்; [முகத்தைக் குனிந்து உற்றுப் பார்த்துக் கண்ணீர் வடித்துக்கொண்டு] அப்பா, இன்னும் சற்று நேரத்துக்குள் நீறுய் விடுவாயே; நீ இங்ஙனம் இறந்தது உன் தந்தைக்குக் கொஞ்சமும் தெரியமாட்டாதே; எங்கு இருக்கின்றாரோ? என்ன வருத்தப்படுகின்றாரோ? செல்வமே, அவர் உயிரெல்லாம் உன்னிடத்திலேயே இருக்குமே; ஐயோ! எங்ஙனம் ஆறப்போகின்றார்? [அரிச்சந்திரனை நினைந்து] பிராணநாதா, நம் அருமைக்கண்மணி லோகிதம், அநியாயமாய்ப் பாம்புக்கு இரையாய் விட்டான். அடியாள் இப்பொழுது அநாதைபோல இந்தச்சுடு காட்டில் அவனை அடக்கம் செய்துகொண்டிருக்கிறேன்; இன்னும் இரண்டொரு நிமிஷங்களில், எரிந்து நீறுய்விடுவான்; ஐயோ! [கீழே விழுகிறாள் உட்கார்ந்து கொண்டு] பிரேதகாரியங்களையும், ஐயோ! ஐயோ!! அடி பாபி, இன்னமும் உனக்குச் சாவு வரவில்லையே; [மார்பில் அறைந்துகொள்கிறாள்.] நாதா, இந்த ராக்ஷஸி [மௌனமா யிருக்கிறாள்.] ஆம், சந்தேகமேயில்லை; ராக்ஷஸிதான். அப்பா, நீ எனக்குச் செய்யவேண்டிய பிரேத காரியங்களை நான் உனக்குச் செய்யத் தொடங்கிவிட்டேனே; [சுடலையை அபிநயித்து] பேதாளங்களே, சக்கிரவர்த்தியைக் கண்டு அவர் அருமைக் கண்மணி அநியாயமாய் இறந்துவிட்ட செய்தியை—உங்களை வேண்டிக்கொள்கிறேன்; [மௌனமாயிருக்கிறாள்.] சீ! இப்படிப் புலம்புவதிற் பயன்யாது?

"ஊரும் சதமலல; உற்றார் சதமல்ல; உற்றுப்பெற்ற
பேரும் சதமல்ல; பெண்டீர் சதமல்ல; பிள்ளைகளும்
சீரும் சதமல்ல செல்வம் சதமல்ல; தேசத்திலே
யாரும் சதமல்ல; என்றும் சதங்காண் இறப்பதுவே."

அவர் சிறிதும் அறியமாட்டார்! நாமே எல்லாவற்றையும்

நடத்தவேண்டியதுதான்; [மகனை நோக்கி எழுந்து] கண்மணி, உனக்கு வாய்க்கரிசி வழங்கவும், வகையற்றுப் போய்விட்டேன்; இறந்துபோன உனக்கு அந்த வாய்க்கரிசி என்ன ஆறுதலை உண்டாக்கப் போகின்றதப்பா! [அங்கு எரிந்து கொண்டிருக்கும் நெருப்பில் கொஞ்சம் எடுத்துக்கொண்டு] வசிஷ்டர் முதலிய பிரமநிஷ்டர்களால், நியமம் தப்பாமல் அடக்கம் செய்யவேண்டிய உன்னை-[கீழே விழுகிறாள்; மறுபடியும் எழுந்து] ஆ! நாதா, இந்த மகாபாபியாகிய அடியாள், தங்கள் அருமை லோகிதத்துக்குக் கொஞ்சமும் கருணை இல்லாமல், அந்தோ! நெருப்பிடவும் துணிந்துவிட்டேன்; [திருக்கோயிலை நோக்கி] விசுவநாதப் பிரபோ, என் கண்மணி லோகிதம் தங்களை நாடி வந்துவிட்டான்; அவனுக்கு அடைக்கலம் கொடுத்து ஆ! என்ன காலத்தின் விபரீதம்! நம் கண்ணீர் அபிஷேக ஜலம்; பிரலாபனை வேதவசனம்; சாகினி, டாகினி முதலிய பைசாசங்கள் பந்துக்கள்; வைதிகாக்னி பிணத்தின் நெருப்பாய் முடிந்தது; கண்மணி, உன் பாட்டனார் சந்திரதய மகாராஜர் உனக்குத்தன் நாட்டைக் கொடுக்க நினைத்திருந்தாரே; நீ அதை வெறுத்துவிட்டு இப்பொழுது பொன்னாட்டுக்குச் சென்றுவிட்டாய; ஆங்குத் திரிசங்கு மகாராஜர் உன்னை ஆலிங்கனம் செய்துகொண்டாரா அப்பா? அநாத ரக்ஷகா, யாவும் தங்களருள். [நெருப்பிடுகிறாள்.] பிராண நாதா, நம் கண்மணியின் கடைசி காலத்திலும் தாங்கள் வரவில்லையே; அடியாள் சிறகு பறிகொடுத்த பறவையைப் போல, இந்தச் சுடுகாட்டில் அநாதரவாய் நிற்கிறேன்; என்ன பாபம் செய்து பெண்ணாய்ப் பிறந்தேனோ? ஆ! விதியே, [முகத்தில் அறைந்துகொள்கிறாள்.] ஐயோ! ஐயோ!! எரிந்துவிடுவானே; என் செல்வமே, இந்தப் பிறப்பில் என்றும் காணமுடியாதபடி சென்றுவிட்டாயே; பிராண

நாதா! [நெருப்பு சன்னமாய்ப் புகைகின்றது.] இந்த மகாபாபி வைத்த நெருப்பு எங்ஙனம் பற்றும்? ஆங்குச் செல்லாவிட்டால் —ஆம், நியாயம்தானே; ஒன்றல்ல, இரண்டல்ல; ஐம்பதினுயிரம்; அக்கினிபகவானே, நான் அடிமைப்பட்டவள்; சீக்கிரம் லோகிதத்தைப் பரிசுத்தனுக்கிவிடுங்கள்; அவன் இனி எழுந்திருக்கமாட்டான்; சக்கிரவர்த்தியும் அருகில் இல்லே; தாங்கள்தானே பரிசுத்தம் செய்யவேண்டும்; [புகை அடங்கிக்கொண்டு வருகிறது.] ஏன்? இஷ்டமில்லேயா! ஆகார விஷயத்தில் எப்பொழுதும் திருப்தி யில்லாதவராயிற்றே? [யோசிக்கிருள்.] தெரிந்துவிட்டது; எனக்கு அதிகாரம் இல்லே என்று மயக்கம்போலும்; என்ன செய்யலாம் சக்கிரவர்த்தி இல்லேயே; லோகிதம் இறந்த சங்கதி அவருக்குக் கொஞ்சமும் தெரியமாட்டாது; தயைசெய்யுங்கள்; [மௌனம்] அணைந்துவிடுகின்றதே; சுள்ளிகளேயாவது பொறுக்கி வந்து பற்ற வைக்கலாமா? குழந்தாய், நெருப்பும் பற்றமாட்டேன் என்று சதிசெய்கின்றது; அநாதையைப்போல இந்த அர்த்த ராத்திரியில்—பேதாளங்களே, உங்கள் காவலில் என் அருமைக் கண்மணியை வைத்துச்செல்கிறேன்; சற்றுப் பார்த்துக்கொண்டிருங்கள்; இங்கேயே சுள்ளிகள் பொறுக்கிவருகிறேன்; லோகிதம், உருவின கத்தியோடு எத்தனேயோ வீரர்களால் காவல் செயயப்பட்டுவந்த உன்னேப் பிணங்களேப் பிடுங்கித்தின்னும் பேதாளங்களின் காவலில் வைத்துச் செல்கிறேன்; கோபிக்காதே; சற்றுப் பொறுத்துக்கொள்; விதியே, நீதான் எனக்குத் துணே; வா! செல்லலாம். [மறைகிருள்.]

---

## களம் 4.

இடம்:—வனத்தின் ஒருபாகம்.

காலம்:—இரவு.

[விசுவாமித்திரன் விசாரத்தோடு பிரவேசிக்கிறான்.]

விசுவாமித்திரன்:—ஒரு சிறிய நா என்னும் உறுப்பை அடக்கச் சக்தியில்லாத நாம், பரந்த உலகத்தை அடக்கப் பிரயத்தனிக்கிறோம்.

" யாகாவார் ஆயினும் நாகாக்க; காவக்கால்,
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு."

என்ன? 'யா காவார் ஆயினும் நாகாக்க;' இதுவேதவசனம்; அப்புறம்? 'காவாக்கால், சொல் இழுக்குப்பட்டுச் சோ காப்பர்.' இது நமக்கென்றே உரைக்கப்பட்டதுதான்; இவ்வளவும் அநுபவித்து வருகிறோம்; [உலாவுகிறான்.] அவனைப் புகழ்ந்தால் என்ன; அன்றி இகழ்ந்தால்தான் நமக்கென்ன; சபைக்குச்சென்றால்—நம்மைத்தான் சனியன் பிடித்து ஆட்டுகின்றதே; எப்படி வெறுமனே யிருக்கமுடியும்? [யோசிக்கிறான்.] அவனுக்கு என்ன நஷ்டம்? விசுவாமித்திரன் என்ற கொழுத்தகிடா அகப்பட்டுக்கொண்டு விட்டது; அதன் தலையில் இராஜ்யத்தைச் சுமத்திச் சுகமாய்ச் சென்றுவிட்டா [உலாவுகிறான்.] காசிப்பட்டணத்துக்குச் செல்வதற்குள் எவ்வளவு தவங்களைச் செலவழித்து விட்டோம்; கொடிய மிருகங்களுக்கு எத்தனை? கொல்லும் பேய்களுக்கு எத்தனை? அக்னியாற்றை அனுப்புவதற்கு எத்தனை? ஆ! இவை எல்லாம் கிடக்கட்டும்; கூப்பிட்டவிடங்கள் தோறும் கையேந்திக்கொண்டு கிடக்கின்றவன்; பலருக்கும் வேலைக்காரன்; இவனை யஜமானனுகவைத்து, அதனிலும் சந்திரமதியை, ஆ! ஆ!! யாவர்க்குக் கிடைக்கும்? தன் மனைவியைப்போல நினைத்துக்கொண்டு விட்டான் போலும்;

கொஞ்சத்தில் ஓய்ப வில்லையே; [யோசிக்கிறான்.] ஐம்பதி னாயிரம் பொன்னைக் கை எரியக் கொட்டிக்கொடுக்கின்ற வனைப் போல அல்லவோ துக்கப்படுகிறான். [கோபத்துடன்,] ஏ! அக்னி, உன்னிலும் எத்துணையோ மடங்கு உயர்ந்த யம தர்மராஜன், சண்டாள வேஷமடா! பிணம் சுட்டுப் பொசுக் கும் வீரபாகு; அதோ இருக்கிறானடா சுடுகாட்டில்! உன் னைப்போல இவ்வளவு பிகுவு செய்துகொள்ளவில்லையே; சந்திரமதி தன்மகனுடன் உன் ஏழைக் குடிசையில், அட! அடிமை வேலை செய்ய எவ்வளவு தவம் செய்யவேண்டும்? [யோசிக்கிறான்.] உன்னைச் சொல்வதிற் பயன் என்ன?

"சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லும் சொல் இன்மை அறிந்து"

என்பதை நாம் மறந்துவிட்டோம்; [உலாவுகிறான்.] ஒரு மனிதனால் முயலக்கூடியவற்றிற்கு அதிகமே முயன்றாய் விட்டது; இந்த ஒரு இரவுக்குள், ஆ! ஆ!! படாதபாடும் படுத்தி விட்டோம்; ஆம், என்ன செய்யலாம்? இது நம் துரதிருஷ்ட விருக்ஷத்தின் திரண்டு கனிந்த நற்கனி; [யோசிக் கிறான்.] வெயிலிலும் பனியிலும், வியர்க்க, விறைக்க நின்று, அரிதிற் றேடிய அருந்தவங்கள் பலவும், அந்தோ! அந்தோ!! [மூக்கின்மீது விரலை வைக்கிறான்.] சாம்பலிற் செய்த ஆகுதியாய் விட்டன; கடந்ததைச் சிந்தித்துப் பயன் என்ன? விசுவாமித்திரன் புகழ்படைத்த நாள்களும் சில இருந்தன; எல்லாம் முடிந்து விட்டது; [உலாவுகிறான்.] இனி வளரவிடக் கூடாது; இந்த நம் தொழில் யானையைக் கட்டித் தீனி போடுவதாயிருக்கின்றது; சீக்கிரம் இரண்டில் ஒன்று தெரிந்துகொள்ள வேண்டியதுதான்; [யோசனையை அபி நயித்து] இந்த ஒன்றுதான் இருக்கின்றது; இதற்கு நிச்சயம்

வசப்பட்டுவிடுவான்; ஆம், நன்கு நேசிக்கப் பெற்றவள்; யார்க்குத்தான் கொல்ல மனம் துணியும்? [கோபத்தோடு பூமியை உதைக்கிறான்.] உன் சிஷ்யனைப் பொய் சொல்லும் வண்ணம் உன்னையே தூண்டச் செய்கிறேன்; என்ன செய்கிறாயோ பார்க்கலாம்; 'பிரம்ம ரிஷிதான்! பிரம்மரிஷிதான்!!' என்று உன்னை முக்காலும் கதறச்செய்தவனன்றோ? அந்த விசுவாமித்திரனை, இப்பொழுது ஒருவிளையாட்டுச் சிறுவன் என்று நினைத்துவிட்டாய்; [தலையை ஆட்டுகிறான்.] அட! இந்தத் தவங்களா! [கையை நொடிக்கிறான்.] நொடி! நொடி!! ஒரு நொடி!!! இறைக்கும் கிணறு; தானே சுரக்கின்றது; இறந்த மகன் இடுகாட்டில் நாறிக்கொண்டிருக்கிறான். [உலாவுகிறான்.] ஓஹோ தோன்றுகிறது? கொண்டமனைவியைக் கத்தியெடுத்துக் கொல்ல வடிக்கிறேன்; உடனே வந்து வணங்கச்செய்தாயோ தப்பினாய்; ஆகட்டும்; கொலைக்களத்தில் உன்னைக் கண்டுகொள்கிறேன்; இதோ வந்து விட்டேன்; மற்ற வற்றையும் ஏற்பாடு செய்ய வேண்டும். [மறைகிறான்.]

---

## களம் 5.

**இடம்:**—சுடுகாடு.

**காலம்:**—இரவு.

[அரிச்சந்திரன் பாணமீதிருந்த வண்ணம் பிரவேசிக்கிறான்.]

**அரிச்சந்திரன்:**—சீ! என்ன பயனற்ற கனவு; பிரதி இரவிலும் கனவுக்கே நம்மை ஒப்புக்கொடுக்கவேண்டி யிருக்கின்றது; பகல் முழுவதும் பிணம் சுடுதொழில்; இரவில் கனவுகாண் தொழில்; இரண்டும் நன்றாகவே அமைந்திருக்கின்றன; [மௌனம்.] இனிக்கிடைத்தாலும் ஒப்புக்கொள்வார் யார்? "மானம் அழிந்தபின் வாழாமை முன்னினிது" மனை

வியை அடிமைப் படுத்தியதுமன்றி—சந்திரமதி! குழந்தாய் லோகிதம்! உங்களை மாத்திரம் மறக்க முடியவில்லை; இந்தக் கோலத்திலும் உங்கள் பிரிவுதான் எனக்கு வருத்தத்தை உண்டுபண்ணுகின்றது; கொடுங்காலமே! [கைத்தடி கீழேவிழுதலும் திடுக்கிட்டு.] ஆ! என்ன மதிமயக்கம்; நினைக்கக் கூடாதவர்களை நினைத்து விட்டோம்; நித்திரையும் இன்று வஞ்சித்து விட்டது; [கீழே இறங்கித் தடியை எடுத்துக் கொண்டு] சுவாமி காரியபங்கம் இல்லாமல் சுடலையைச் சுற்றிப் பார்த்து வரலாம். [மறைகிறுன்; சந்திரமதி பிரவேசிக்கிறுள்.]

சந்திரமதி :—கண்மணி! புகை கிளம்பி விட்டதே; உன் தந்தைக்கு என்ன சொல்வேனப்பா! பாழ்வயிறே! வெளியிலும் எரிந்துபோக வில்லையே; [வயிற்றில் அடித்துக்கொள்கிறுள்.] இது போதாது; இன்னும் உனக்கு அதிக தண்டனை வேண்டும்; உன்னை முழுவதும் தொலைத்துவிடுகிறேன்; [நின்றுகொண்டு.] பிராணநாதா! நம் அருமை லோகிதத்துடன் மகாபாபியாகிய அடியாளும் எரிந்துவிடுகிறேன்; தங்கள் திருக்கரத்தால் எனக்கும் நீர்க்கடன் செய்துவிடுங்கள்; [பேதாளங்கள் தலையை அசைத்துச் சிங்கநாதம் செய்தலும், அவற்றை நோக்கி.] ஏன் கர்ஜிக்கிறீர்கள்? நான் இறப்பதில் உங்களுக்கு இஷ்டம் இல்லையா? அவர் பிரிந்தார்; அருமை மகன் இறந்தான்; இனி நான் என்ன செய்யப்போகிறேன்; [அவை மீட்டும் கர்ஜிக்கின்றன.] எதற்காகக் கர்ஜிக்கவேண்டும்? [மௌனம்.] ஓ! தெரிந்து விட்டது; உங்களை வணங்குகிறேன்; [கை கூப்புகிறுள்.] நீங்கள் மகோபகாரிகள்; பர்த்ரு த்ரோகமும் யஜமான த்ரோகமும் எனக்கு இல்லாதபடி செய்தீர்கள்; இன்னம் எத்தனை ஆபத்துக்கள் வந்தாலும் வரட்டும்; நான் இறக்கமாட்டேன்; [மகனைப் பார்த்து.] கண்மணீ! உன்னுடன் இறப்பதற்குத் தருமம் இடம் கொடுக்கவில்லையே; என்ன

செய்வேன்; [கீழேவிழுந்து மூர்ச்சிக்கிறாள்; அரிச்சந்திரன் பரபரப்புடன் பிரவேசிக்கிறான். மூக்கின்மீது விரல் வைத்துக்கொண்டு]

அரிச்சந்திரன் :—ஆ! என்ன இது!! ஆச்சரியமாயிருக்கின்றதே; இது நாம் அடுக்கிய சிதை அன்று; அர்த்தராத்திரியில், இப்படித் திருட்டுத்தனமாக, ஆ! ஆ!! [சுற்றிவருகிறான்.] ஓ! தெரிந்துவிட்டது; இதோ ஒருத்தி படுத்துக்கொண்டிருக்கிறாள்; [சமீபம் சென்று] யார் இங்கே விழுந்து கிடக்கின்றது? யார்? யார்? [சந்திரமதி திடுக்கிட்டு எழுந்து நிற்கிறாள்.] யார் நீங்கள்? இந்தப் பிணத்துக்கும் உங்களுக்கும் என்ன சம்பந்தம்?

சந்திர :—ஐயா! நான் இந்தக் காசிப்பட்டணத்தில் இருக்கும் ஒரு அடிமை; இவன் என் மகன்; அநியாயமாய்ப் பாம்புக்குப் பறிகொடுத்துவிட்டேன்.

அரி :—உங்கள் நிலைமை அடிமை என்பதற்கு இடம் கொடுக்கவில்லையே.

சந்திர :—உண்மையில் அடிமை ஐயா!

அரி :—[தனக்குள்.] இருந்தாலும் இருக்கலாம். [வெளியில்] ஆனால் அர்த்தராத்திரியில் இங்குக் கொண்டுவந்து கொளுத்துவானேன்?

சந்திர :—தருப்பைக்குச் சென்ற மகன் வனத்தில் இறந்த செய்தி மாலையின் தொடக்கத்தில்தான் தெரிந்தது; அதற்குமேல் கண்டுபிடித்துக் கொண்டுவருவதற்கு—

அரி :—[கோபத்துடன்.] இருக்கட்டும்; என் கட்டளையின்றி எப்படி உள்ளே பிரவேசிக்கலாம்?

சந்திர :—இந்தச்சுடுகாடு தங்கள் காவலுக்கு அடங்கியுள்ளதென்று அறிந்தேனில்லையே;

அரி:—எப்பொழுதும் இங்கு வந்ததில்லையா?

சந்திர:—இல்லை ஐயா! இதுதான் முதல்தடவை.

அரி:—இதைக் கவனியுங்கள்; இங்குப் பிணம் சுட வேண்டினால், சிதைக்காசு, பிணத்துணி, வாய்க்கரிசி இந்த மூன்றும் வழங்கவேண்டும்.

சந்திர:—முந்தியே அடிமை என்று தெரிவித்துக்கொண்டிருக்கிறேனே;

அரி:—[தனக்குள்.] என்ன கஷ்டம்? [வெளியில்.] ஓ! இருக்கலாம்; இங்குக் கட்டாயம் கொடுத்தே தீரவேண்டும்.

சந்திர:—ஐயா! நான் ஏழையினும் ஏழை; அதனிலும் சுவாதீனம் அற்றவள்.

அரி:—யஜமானர் கட்டளை யில்லை; கொடுத்து விட்டால்—

சந்திர:—இந்த வழக்கங்களைக் கொஞ்சமும் அறிந்தேனில்லையே; தங்களை மிகவும் வேண்டிக்கொள்கிறேன்; எப்படியாவது கருணை செய்யவேண்டும். [கைகூப்புகிறாள்.]

அரி:—ஓ! அது என்றும் முடியாதகாரியம்; இல்லையேல், சுடவொட்டேன்; இது உண்மை.

சந்திர:—இந்த அர்த்தராத்திரியில் தனித்து வந்ததனைக் கொண்டே அடியாள் இந்த உலகத்தில் ஆதரவற்ற ஒரு எளிய அடிமை என்பது வெளிப்படையாகுமே; கடவுள் அருள்முகத்தை முன்னிட்டேனும் கருணைபாராட்ட வேண்டிக் கொள்ளுகிறேன்.

அரி:—[தனக்குள்.] ம்மே பா ன்றவள்தான்; சந்தேகமில்லை; ஆம், நம்மால் என்ன செய்யமுடியும்? [வெளியில்.] நானும் உங்களைப் போன்றவன்றான்; ஆனால், [யோசிக்கிறான்.] வாய்க்கரிசியை மாத்திரம் நீக்கிவிட எனக்குச் சுவாதீனம் உண்டு;

ஒழிந்த இரண்டும் யஜமானருக்குச் சொந்தம்; சீக்கிரம் கொடுத்து விடுங்கள்.

சந்திர:—ஒரு காசுக்கும் வழியில்லாத நான் அந்த இரண்டையும் எங்ஙனம் கொடுக்கப் போகிறேன்? எப்படியாவது தாங்கள்தான் அருள் செய்யவேண்டும்.

அரி:—ஓ! இல்லை, இல்லை; அஃது எப்பொழுதும் முடியாது; இரண்டையும் தள்ளமாட்டேன்; கொடுத்தே தீரவேண்டும்.

சந்திர:—[தனக்குள்.] என்ன செய்யலாம்; இவர் இப்படிப் பேசுகிறாரே; [வெளியில்; கரங்களைக் குவித்துக்கொண்டு] கனம் பொருந்திய ஐயா, எனக்கு—

அரி:—[கோபத்துடன்.] நிறுத்துங்கள், நிறுத்துங்கள்; உங்கள் மோசச்செய்கை நன்றாய்த்தெரிந்துவிட்டது; இந்தப் பசப்பு வசனங்களைக் கொண்டே மகனை எரித்து விடலாம் என்று நினைத்து விட்டீர்கள்போலும்; அங்ஙனம் நினைக்க வேண்டாம்; இனி எரியவிடமாட்டேன்.

சந்திர:—ஐயா! அங்ஙனம் கட்டளையிடவேண்டாம்; அடியாள் யாருமற்ற ஒரு எளியபேதை; தங்களையன்றி—

அரி:—[மிகுந்த கோபத்துடன்.] ஓ! இல்லை, இல்லை; இனி ஒரு நிமிஷமும் தாமதியேன்; உங்கள் மகனை எடுத்துச் செல்லுங்கள். [கலைக்கச் செல்கிறான்.]

சந்திர:—[கூப்பிய கரத்தோடு குறுக்கே வந்து] ஐயா! அப்படிச் செய்யவேண்டாம்; தங்களுக்குக் கோடி புண்யம் உண்டு.

அரி:—வீண், வீண்; என் காவலுக்குள் என்றும் நடவாத காரியம்; எடுத்துச்செல்ல வேண்டியதுதான்.

[கோலால் கலைத்துத் தள்ளுகிறான்; சிதை கலைந்து பிணம் கீழேவிழுகின்றது.]

சந்திர :—[சென்று எடுத்துக்கொண்டு.] கண்மணி! என் முத்தே! கிரீடாதிபதிகளின் கரங்களில் விளையாடி வளர்ந்த உன்னை, இந்தச் சுடலைப் பறையனும் கொடுமை பாராட்டிக், காலால் உதைக்கும் காலம் வந்துவிட்டதப்பா!

அரி:—[தனக்குள்.] என்ன! என்ன!! கிரீடாதிபதிகளின் கரங்களில் வளர்ந்தவனும்; நாம் சுடலைப் பறையனும்; [மௌனம்] ஆம், ஆம்; முக்காலும் பறையன்றான்; சந்தேகமேயில்லை.

சந்திர :—பிணம் சுட்டுப் பொசுக்கும் சுடலைப் பறையனையும் பணிந்து வேண்டிக்கொள்ள விதித்த என் தீவினையே! திரிமூர்த்திகளும் உனக்கு—நான் எவ்வளவு; அற்பப் பெண்பால்; ஒரு வாழைப்பழந்தான்.

அரி :—[தனக்குள்.] என்ன? பிணம் சுட்டுப்பொசுக்கும் சுடலைப் பறையன்; [மூக்கின்மீது விரலை வைக்கிறான்.] அரிச்சந்திரா! பேஷ்!! நல்ல கீர்த்தியை அடைந்து விட்டாய்; இநனிலும் உனக்கு என்ன புகழ் கிடைக்கப்போகின்றது?

சந்திர:—கண்மணி லோகிதம்! நீ இறந்தது கூட எனக்குத் துக்கமாய்த் தோன்றவில்லை அப்பா! [மடியில் வளரவைத்துக்கொள்கிறாள்.]

அரி :—[தனக்குள்; பரபரப்புடன்.] என்ன! லோகிதம்!! லோகிதம்!!! எந்த லோகிதம்? [தடியை ஊன்றிக்கொண்டு யோசிக்கிறான்.]

சந்திர :—கண்மணி! உன்னை அடக்கம் செய்வதற்கு ஒரு வழியும் ஏற்படவில்லையே; பிராணநாதா! இந்தச் சுடலைப்பறையன் சுடவொட்டேன் என்று நம் லோகிதத்தை

உதைத்தும் தள்ளிவிட்டானே ; ஐயோ! இன்னமும் ஐயரை அனுப்பவில்லையா ?

அரி:—[தனக்குள்.] ஐயரா ! எந்த ஐயர் ? காத்யாயனரா ? சீ ! இருக்கமாட்டாது.

சந்திர :—இந்த மகாபாபியை நினைக்காவிட்டாலும் இந்த அவமானத்தைத் தாங்கள் கண்டால், அந்தோ ! அப்பொழுதே உயிரைத் துறந்துவிடுவீர்களே; அடி சந்திரமதி! இன்னமும் உன் நெஞ்சம் பிளந்து சாகவில்லையே ; இனி உனக்கு மரணமேயில்லை ; என்றும் சிரஞ்சீவிதான்.

அரி : — [திடுக்கிட்டுத் தனக்குள்.] என்ன! சந்திரமதியா ? [தலையைத் தொங்கவிடுகிறான்.] சந்திரமதி, லோகிதம், ஐயர்; இன்னும் என்ன சந்தேகம் ?

சந்திர :—பந்துமதீ ! பிரியம்வதே !! எனது இந்தக் கஷ்டங்களைக் கொஞ்சமும் அறியாமல் நீங்கள் யாவரும் அயோத்தியில் இருக்கிறீர்களே ? குழந்தாய், லோகிதம்! இந்தச் சுடுகாட்டில் உன்னை வைத்துக்கொண்டு—

அரி :—[தடியை நழுவவிட்டுக் கீழேவிழுந்து] அடா கட்டிக் கரும்பே! நீயும் என்னைத் துறந்துவிட்டாயா? [சந்திரமதி மனத் திகைப்புடன் பிணத்தைக் கீழேவிட்டு அருவருப்போடு விலகிக்கொள்ளுகிறாள்; அரிச்சந்திரன் பிணத்தைத் தழுவிக்கொள்ளுகிறான்.] கண்மணீ! சர்ப்பத்துக்கா உன்னை ஒப்புவிக்க நேரிட்டது ? என் எண்ணங்கள் யாவும் மண்ணைக்கவ்விக்கொண்டன; என் முத்தே ! மகா பாபியாகிய உன் தந்தை இதோ வந்திருக்கிறான்; அவனை மன்னித்துக் கொஞ்சம் திரும்பிப்பார்ப்பாயப்பா !

சந்திர :—[திடுக்கிட்டு எழுந்து நின்று, தனக்குள்.] ஆ ! இஃதென்ன விபரீதம் !! தந்தையா ? இவர் யார் ?

அரி :—அயோத்தியை அரசாள்வாய் என்று நினைத்திருந்தேனே; குழந்தாய்!

சந்திர :—[தனக்குள்.] என்ன! சக்கிரவர்த்தியா? [உற்றுப் பார்க்கிறாள்.]

அரி :—அப்பா! சூரிய வம்சத்தில் இதுகாறும் உன்னைப்போல ஒருவரும் இறந்ததில்லையடா!

சந்திர :—ஐயோ! பிராணநாதா! [கீழேவிழுந்து மூர்ச்சையாகிறாள்.]

அரி :—என் அருமைச் செல்வமே! அடிமை வேலை செய்து அலுத்துவிட்டாயோ? சூரியவம்சம் உன்னுடன் மழுங்கி விட்டதே; விதியே! கனவுகள்யாவும் நன்னிமித்தத்துக்கென்று நினைத்திருந்தேனே;

“ விலைப்பட்டாய்; பட்டும் வெவ் வரவத்திறை
றலைப்பட்டாய்; அன்னை தோளிற் கொணர்திடத்
தலைப்பட்டாய்; தமியேன் எறியத் தகர்ந்
தலைப்பட்டாய்; இதுவோ விதி ஐயனே!”

லோகிதாஸ்யன் முகத்தில் கரத்தைவைத்து.] குலவிளக்கே! அடிமைப்படுத்தினேன் என்ற வருத்தமா? இந்த மகாபாபியின் தீவினை உன்னையும் தொலைத்துவிட்டது; அந்தோ! பரிசுத்தமான அரசகுலத்துக்கும் ஒருஅபக்கியாதியை உண்டாக்கிவிட்டு இன்னமும் உயிர் வாழ விரும்புகின்றேன்; என்னிலும் கொடியவன் யார்?

சந்திர :—[மூர்ச்சைதெளிந்து எழுந்து] இந்தக் கோலமும் தங்களுக்கு எழுதியிருந்ததா? அந்தோ! கொஞ்சமும் கூசாமல் பார்த்துக்கொண்டிருக்கிறேனே; [முகத்தில் அறைந்துகொள்கிறாள்.] லோகிதம்! உன்னைப்போல நானும் இறந்திருக்கவில்லையே; தீவினையே, இப்பொழுதாவது என்னைக்

கொன்றுவிடமாட்டாயா? குழந்தாய்! உன் தந்தையைக் கண்டதும் நீ இறந்த துக்கம் கொஞ்சமும் இல்லாமல் பறந்துவிட்டதப்பா!

அரி:—இன்னும் என்ன பாபங்கள் அநுபவிக்கப் பிறந்திருக்கின்றேனே? என் தீவினை வசிஷ்டாதிகள் வாக்கையும் விழுங்கிவிடுகின்றது; அரிச்சந்திரன் ஒருவனால் சூரியவம்சம் ஒருங்கே தொலைந்து விட்டது; இப்பொழுது யஜமானருக்காக உயிர்வாழ விரும்புகின்றேன்.

சந்திர:—நாதா! தங்களுக்கு எதுமுதல் இந்தத்தொழில் சொந்தமாயிருக்கிறது?

அரி:—காத்யாயனரை அனுப்பியது முதல்.

சந்திர:—காலகண்டர்தாம் பொன் அளித்தாரே?

அரி:—அது பாதிக்குச் சரியாயிற்று; ஒழிந்ததை வீரபாகு என்ற ஒரு புண்ணியபுருஷர் அளித்தார்.

சந்திர:—அவர் யார்?

அரி:—இந்தச் சுடுகாட்டுக்குத் தலைவர்; இப்பொழுது நான் ஏற்றுக்கொண்டு வருவதும் அவர் தொழில்தான்.

சந்திர:—இப்படியும் முடிந்ததா? [முகத்தில் அறைந்து கொள்கிறாள்.] விதியே! உன் ஆற்றல் அவ்வளவும் எங்களிடத்திலேயே விநியோகப்படுத்தி விட்டாய்.

அரி:—நடந்ததை நினைத்துப் பயன் என்ன? யாவும் சிவன் செயல்.

சந்திர:—இனி ஒன்றும் அடியாள் நினைப்பதற்கே இடம் இல்லை; [மௌனம்.] லோகிதத்தை அடக்கம் செய்ய வேண்டுமே?

அரி:—அதுதான் முந்தியே சொல்லிவிட்டேனே; இப்பொழுதும் அந்த விடைதான்.

சந்திர :— அடியாளிடம் கொடுக்கக்கூடியது ஒன்றும் இல்லையே.

அரி :—அதற்கு நான் என்ன செய்யலாம்? இல்லையேல்,—

சந்திர:—அப்படி ஒரு போழ்தும் வேண்டாம்; உண்மையைக் காப்பாற்றுவதற்கன்றோ உலகத்தைத் துறந்தது?

அரி :—வேறு வகை, சரி—லோகிதத்தை இந்த எல்லையை விட்டு அப்புறம் எடுத்துச்செல்.

சந்திர :—இந்த அர்த்தராத்திரி வேளையில் அநாதையைப்போல எந்த இடத்துக்கு எடுத்துச்செல்லுவேன்?

அரி:—இனி இங்குக் கணமும் இருக்கத்தகாது; யஜமானர் கட்டளை யில்லை. [திரும்பிக்கொண்டு.] செத்த மகனைச் சுடுவதற்கும் கதியில்லாமல் ஒரு சக்கிரவர்த்தி—சீ! சக்கிரவர்த்தியா? எப்பொழுது? ஒரு தந்தை எதிரில் நிற்கிறான்; ஆம், ஏன் வெறுக்கவேண்டும்?

"நன்றுங்கால் நல்லவாக் காண்பவர், அன்றுங்கால்
அல்லற் படுவ தெவன்?"

இது நாம் முன்செய்த புண்ணியத்தின் பழம் "புண்ணிய பயிரிற் புண்ணியம் தெரியும்".

சந்திர :—ஐயர் வீட்டுக்குச் சென்று வருந்தனையும் நம் லோகிதத்தைச் சிறிது பார்த்துக்கொண்டிருக்க வேண்டுகிறேன்.

அரி :—இப்பொழுது ஏன் செல்லவேண்டும்?

சந்திர;—பிணத்துணி முதலியவை பெற்று வர.

அரி :—அளிப்பாரா?

சந்திர :—மகா நல்லவர்கள்; உடனுக வந்தும் உதவி செய்வார்கள்.

அரி:—சரி, இதுவும் ஒரு திருகூத்துத்தான்; சீக்கிரம் வந்து விடவேண்டும்; பேதாளங்கள் அதிகமாயிருக்கின்றன.

சந்திர:—அப்படிக் கட்டளையிடக் கூடாது; வந்து விடுகிறேன்.

அரி:—இங்ஙு உட்கார்ந்திருந்தால் சுவாமித்துரோகம் சித்திக்கும்; சீக்கிரம் வந்துவிடு.

சந்திர:—அப்படியே. [மகனை முத்தமிட்டு] குழந்தாய்! உன் தந்தையின் காவலில் சற்றுநேரம் கண்வளர்வாய் அப்பா! உன்னை அடக்கம் செய்வதற்குப் பொருள் பெற்றுக்கொண்டு சீக்கிரம் வந்துவிடுகிறேன். [செல்கிறாள்.]

அரி:—அட கட்டிக்கரும்பே! உன்னைத் தகனம் செய்யவும் சக்தியற்றவனுயிருக்கிறேன்; உன் அன்னை வருங்காறும் இவ்விடத்தில் இரு; எனது அடிமைத் தொழில் இக்காலத்திலும் உன்னைக் கவனிக்க விடவில்லை; [எடுத்து ஓரிடத்தில் வைக்கிறான்.] சர்வேசா! தங்கள் திருக்குறிப்பின் வண்ணம் நடக்கச் சித்தமாயிருக்கிறேன்; விதியே! நீதான் எனக்குத் துணை; வா! சுடலையைச் சுற்றிப் பார்த்து வரலாம்.

[மறைகிறான்.]

# ஏழாவது அங்கம்.

## களம் 1.

இடம்:—காசிப்பட்டணத்தின் ஒரு புறம்.

காலம்:—இரவு.

[காவலாளிகள் பிரவேசிக்கிறார்கள்.]

கறுப்பன் :—அண்ணே, என்ன ஆச்சரியம்! பாத்தியா! ஒண்ணு, ரெண்டா? எத்தனெ காவல்! ஆ!! ஆ!! [மூக்கின் மீது விரலை வைக்கிறான்.]

வீரன் :—அது என்னமோ எனக்கு ஒண்ணுந்தோணலே; என் தலேலே மயிர் மொளெச்ச நாள் தொட்டுக்கி ராஜாங்கத்துலேதான் சேவகம் சேஞ்சுக்கிட்டு இருக்கேன்; இந்த அநியாயத் திருட்டெக் கேட்டதேயில்லே.

கறுப்பன் :—ஆம் அண்ணே! உருவின கத்தி உருவின படி எத்தனே சிப்பாயிக காவலிருக்காக; எல்லார் கண்ணி லும் மண்ணெத் தூவிவிட்டல்லோ பய போயிருக்கான்.

வீரன் :—இருந்தாலும் உள்ளொளவு இருக்கவேணும்.

கறுப்பன் :—ஆமாங்கிறேன்; ஆமாம்; எனக்கும் அப் படித்தான் படுகிறது.

வீரன் :—யாரிருக்காக; உள்ளே அம்மா அவகளிடத் திலே யிருக்கிற தடிச்சிறுக்கிகதான் தூக்கிக் கொடுத்திருக்க வேணும்.

கறுப்பன் :—ஆமாம், அந்தப் பட்டிமுண்டெக ஒளவு இல்லாவிட்டா பயலுக்கு எங்ஙனே கெடைக்கும்?

வீரன் :—மேலும், நேத்துக்கூடக் குளி மொறையாம்; சின்ன எசமான்மேல் நகெ ஒண்ணும் இல்லையாம்; எல்லாத் தியும் களட்டிக் கைப்பெட்டிலே வெச்சிருந்தாகளாம்.

கறுப்பன் :—ஓ! பயலுக்குக் குளிமொறையிண்டு தெரியவில்லெ போலிருக்கு ; தெரிஞ்சா இண்ணெக்கு வந்திருக்கவேமாட்டான் ; சின்ன எசமானே பய என்ன பண்ணுவான்?

வீரன் :—அதுதான் தெரியவில்லே ; நம்ம—

கறுப்பன் :—பண்டமா என்ன? வாரி யெடுத்து மூலெலே வெக்க ; எசமான் மூளிச்சுக்கிட்டா பயபாடு திண்டாட்டந்தான் ; அங்ஙனே சொல்லாமெ பறந்திடுவான்.

வீரன் :—நம்ம பெரிய எசமான் முகத்தெப் பாத்தியா? காண வளங்கலெயே.

கறுப்பன் :—வேறெ கொளங்கெ இருந்தா அதுகளெக் கண்டு ஆறலாம்.

வீரன் :—அது மாத்திரந்தானு? பட்டத்துக்கும் வேறெ கொளந்தெ இல்லெயல்லோ?

கறுப்பன் :—அண்ணே, நம்ம சூளியப்பனும் பைரவனும் எங்கெபோனுக.

வீரன் :—அவகதான் வடக்குப்பக்கம் போயிருக்காகளே; ராஜாங்கம் அடங்கலும் சின்ன எசமானெத் தேடச் சென்றிருக்காக ; எப்படியாவது கண்டு பிடித்துப் பயலே குண்டுவெச்சுச் சுடணும்.

கறுப்பன் :—அதுக்கு யோசிக்கவேண்டாம் ; [மார்பைத் தட்டிக்கொண்டு.] பய இருக்குந்தனேயும் விட்டேனு அவனே ; அப்படிப்பட்ட சாமி, மூப்பன் முதலான பேர்வளிக எல்லாம் [தோளைத் தட்டுகிறான்.] பய பேரெச் சொன்னு போதாதா? [வீரபத்திரன் பிரவேசிக்கிறான்.]

வீரன் :—என்னடா வீரபத்திரா! எங்கிட்டிருந்து வாரே? ஏதாவது துப்பு தொலங்குச்சா?

வீரபத்திரன் :—மேலெக் கோட்டேலேருந்து வாரேன்; ஒண்ணும் கெடக்கெலே ; பட்டணத்திலே ஆள் நடமாட்டமேயில்லே.

வீரன் :—ஆறு எங்கே வந்தே ?

வீரபத்திரன் :—நாட்டாமெக்காரன் உங்களெக் கௌக்குத் தெருச் சந்துகளெப் பாக்கப் போகச்சொன்னான் ; கண்டு பிடிக்காவிட்டா ' கண்ணெப் பிடுங்கிக் காட்டிலே ' ஊம் ! தெரிஞ்சுதா !! எண்டு பெரிய மந்திரி எசமான் கட்டளெயிட்டிருக்காகளாம்.

வீரன் :—[பயத்தோடு.] மந்திரி எசமான் எங்கிருக்காக ?

வீரபத்திரன் :—நாட்டாமெக்காரனோடு பேசிவிட்டுத் தானும் பட்டணத்தெப் பாத்து வரேனெண்டு இப்போ தான் அப்பாலே போனாக.

கறுப்பன் :—[பரபரப்புடன்.] இங்கே வருவாரோ ?

வீரபத்திரன் :—எனக்கென்ன தெரியும் ? வந்தாலும் வருவாக.

வீரன் :—காளித்தாயே! காலபைரவா!! எங்க வவுத்திலே பாலெக் கறக்கணும் ; நாங்க கொளந்தெ குட்டிக்காரக ; உங்களுக்கு ரெண்டு ஆட்டுக்கடா வெட்டிப் பொங்கலிடுறோம்.

கறுப்பன்:—எங்க வூட்டுலே பெரியாண்டவனுக்கெண்டு ஒரு பண்ணி வளத்து வெச்சுக்கிட்டிருக்கோம்; அதையும் வெட்டி விடுறேன்.

வீரன் :—வாங்க, போவலாம். [யாவரும் மறைகிறார்கள்.]

---

## களம் 2.

இடம் :—காசிப்பட்டணத்தின் ஒரு தெரு.

காலம் :—இரவு.

[சந்திரமதி துக்கத்தோடு பிரவேசிக்கிறாள்.]

சந்திரமதி :—இந்தத் திக்கில் இருக்கின்றோமென்றும் தெரியவில்லையே; எல்லா இருட்டும் இப்பொழுதுதான்

"அள்ளிக் கொளலாய் அடையத் திரண்டொன்றாய்க்
கொள்ளிக்கும் விள்ளாத கூரிருளாய்" இருக்கின்றது;

இந்த நிலைமையில் ஐயர் வீட்டை எங்ஙனம் கண்டுபிடிக்கப் போகிறோம்; ஜகதீசா! தங்கள் திருவுளக்குறிப்பு இன்ன விதம் என்பதைக் கொஞ்சமும் தெரிய முடியாதவளாயிருக்கிறேன்; பிறந்த பிறப்பும், புகுந்த சிறப்பும், அந்தோ! அந்தோ!! அவற்றை இப்பொழுது நினைக்கவும் தகுதியற்றவளாயினேன்; மகன் இறந்ததும், மன்னவர் சுடலை காப்பதும், மறையவர்க்கு அடிமைப் பட்டதும்—[மௌனம்.] எல்லாம் முன்பிறப்பின் டயன்; உயர்ந்த வாழ்வும் அநுபவித்தாய் விட்டது; இழிந்த தாழ்வும் இதற்குமேல் இல்லை; இவ்வளவிலாயினும் இறப்பது உத்தமம்; [யோசிக்கிறாள்.] ஆம், எங்ஙனம் இறக்கமுடியும்? அது நம் அதீனத்தில் இல்லை; வேலை அவசரத்தில் அவர் லோகிதத்தைக் கவனிக்கப் போகிறாரா? ஏது? பூதங்கள் உணவாக்கிக்கொள்ளுமோ? நாய் நரிகள் நமக்கென்று எடுத்துச்சென்று விடுமோ? ஒன்றும் தெரியவில்லை; பொழுது விடிவதற்குள் ஐயர் வீட்டுக்குச் சென்று வரவேண்டுமே; சர்வேசா! அடியாள்மீது இவ்வளவேனும் கருணை பாராட்டலாகாதா? [திகைத்துநின்று] இஃதென்ன? எவ்வளவோ தெருக்கள் கடந்தும் முதலில் வந்த விடத்திலேயே வந்திருக்கின்றோமே; ஒருகால் திகை

ப்பூண்டை மிதித்துவிட்டோமா? சீ! இல்லை; அது பட்டணத்தில் ஏது? என்னவோ ஒன்றும் தோன்றவில்லை; [கால் இடறிக் கீழேவிழுகிறாள்.] ஜகதீசா! இதுவும் உன்சோதனையா? [எழுந்திருந்து] என்ன! காலில் என்னவோ மெத்தென்று தட்டுப்படுகின்றதே; [தடவிப்பார்த்து.] ஒன்றும் காணப்படவில்லை; மனித வுருப்போலிருக்கிறது; யாரோ? என்னவோ? கால் பட்டுவிட்டது. [இடி முழங்கி மின்னல் வெளிப்படுதலும் திடுக்கிட்டு.] ஆ! இஃதென்ன!! லோகிதம்போலிருக்கின்றதே; [சென்று எடுத்துக்கொண்டு.] இல்லை; லோகிதனன்று; அவன் இன்னும் பெரியவனாயிற்றே; அவயவ லக்ஷணங்கள் பலவும் அவனையே ஒத்திருக்கின்றன; [மற்றொரு மின்னல் வெளிப்படுகின்றது.] அந்தோ! அரசகுமாரன்போல் இருக்கிறான்; அட குழந்தாய்! அநாதைப்பிணமாய் நடுத்தெருவில் எறியப்பட்டிருக்கிறாயே; பெற்றவர்கள் மனம் எப்படிப் பற்றி எரிகின்றதோ? நீ இங்கு இறந்திருப்பதை அவர்கள் சிறிதும் அறியமாட்டார்கள் என்று நினைக்கிறேன்; எங்குத் தேடுகின்றார்களோ? என்ன வருந்துகின்றார்களோ? ராஜலக்ஷணங்கள் பொருந்தி விளங்கும் உனக்கும் இந்தத் தலைவிதி இருந்ததா அப்பா? என் மகன் லோகிதத்தை அடக்கம் செய்வதற்குக் கதியில்லாமல், பிணத்துணி முதலியவை இரந்து செல்ல வந்திருந்தும், உன்னைக்கண்டபின்பு அப்புறம் செல்லக் கால் எழவில்லையே; என்ன தவிக்கின்றார்களோ? சர்வேசா! இளம் பிள்ளைகளை யெல்லாம் இப்படிக் கொன்று குவிப்பதில் உமக்கு என்ன லாபம்! அட குழந்தாய்! உன் சங்கதியைத் தெரிவிப்பதற்கும் ஒருவரும் காணப்படவில்லை; உன் லக்ஷணங்களை யோசித்தால் இங்கு இறக்கக் காரணம் இல்லையே; எவரேனும் உன்னைக் களவாடிக் கழுத்தை முரித்து இங்குக் கிடத்திச் சென்றிருப்பார்

களோ? என்னவோ? இன்னும் வேறு காரணம் இருந்தாலும் இருக்கலாம்; ஒன்றும் தெரியவில்லை; உன்னை இந்த இடுக்குச் சந்தில் விட்டுச் செல்வதைக் காட்டிலும், மனிதர்கள் நடமாட்டம் நிறைந்த ஒரு நல்ல தெருவில் கிடத்திச் செல்லுதல் எல்லாவற்றிற்கும் நல்லது; இதைக்காட்டிலும் உனக்கு வேறு உதவிசெய்ய முடியவில்லை; வா! எடுத்துச் செல்கிறேன்; [எடுத்துக்கொள்கிருள்.]

[திரைக்குள்.] ஒருவன் :—அண்ணே! பாத்தியா இங்கு ஒரு பொம்பளே கொரல் கேக்கறது.

மற்ருருவன் :—ஆமாம் இரு! இரு!! கத்தாதே.

சந்திர :—யாவர் முகத்தில் விழித்தேனே? இன்று முழுவதும் துக்கத்தை அநுபவித்து வருகிறேன்; குழந்தாய்! உன்னை அறிந்திருந்தால் பெற்றவர்களிடத்திலேயே விட்டுச் செல்லுவேன்; இந்தப் பட்டணத்துக்கு நான் மிகவும் புதியவள். [காவலர் பிரவேசிக்கிருர்கள்.]

கறுப்பன் :—களவும் கையுமா ஆம்பட்டுக் கிட்டா.

வீரன் :—ஏண்டா கறுப்பா! காளித்தாய்க்குக் கடா வெட்டணும்; தெரிஞ்சுதா?

கறுப்பன் :—அதுக்கென்ன அண்ணே! கொழுத்த கடா! பண்ணியோடு! மெள்ள மெள்ள நடக்கிருளே; ஓடிப் போயிட்டா?

வீரன் :—[மார்பைத் தட்டிக்கொண்டு.] என்னெயாரெண்டு நெனெச்சுக்கிட்டிருக்கே? சிறுக்கிகொண்டையெப் பிடிச்சல்லோ இளுத்துக்கிட்டு வருவேன்; சும்மாபோவட்டும்; ஒரு தமாஷ்!

கறுப்பன் :—இல்லே, இருட்டுக்காலமாச்சேண்டு சொன்னேன்.

வீரன் :—கிடக்கட்டும் விடு! கொடலறுந்த நரி எங்கு ஓடப்போவுது?

சந்திர :—குழந்தாய்! இது நால்வரும் வரத்தகுந்த இடம்தான்; என் வேலே பலமாயிருக்கிறது; இந்த மூலேயில் வளர்த்திச் செல்கிறேன்.

கறுப்பன் :—அண்ணே! கிடத்திவிட்டு ஓடப் பாக்கிரு; இதுதான் சமயம்.

சந்திர :—இந்த இடத்தில் இரு. [கிடத்துகிருள்.]

வீரன் :—[ஓடிச் சென்று.] தடிச்சிறுக்கி! சின்ன எசமானெத் திருடி நடுத்தெருவில் கிடத்தி ஓடப் பாக்கிருயா? ஒதையடா ஒதை! குத்து!! குத்து!!! [இருவரும் உதைத்துக் குத்துகிருர்கள்.]

சந்திர :—ஐயோ! ஐயோ!! தெய்வமே!!! அடிக்கிருர்களே; ஒன்றும் தெரியவில்லேயே; என்ன செய்வேன்?

வீரன் :—உனக்குத் தெய்வங்கூட வுண்டா? [அடிக்கிருன்.]

சந்திர :—ஐயோ! விசுவநாதப் பிரபோ, இதுவும் உமக்குத் திருவிளேயாடலா? ஒரு பிழையும் செய்யவில்லேயே.

கறுப்பன் :—பெளே செய்யலியா? சின்ன எசமானெத் தெரியாமே திருடிப்போனது ஒளுங்கோ? [இடிக்கிருன்.]

சந்திர :—ஐயையோ! பொறுக்க முடியவில்லேயே; ஜகதீசா! நான் ஒரு பாபத்தையும் அறியேனே; இவர்கள் என்னேத் திருடி என்கிருர்களே; ஐயா! நீங்கள் இன்னுரென்றும் எனக்குத் தெரியவில்லே; யாவரையோ நினேத்துப் பேசி என்னே அடிக்கிறீர்களே?

வீரன் :—மாய்மாலக் கள்ளி ! திருடினது மில்லாமெ ஒளிக்கவும் பாக்கிறுயா ? நகெ எல்லாம் எங்கே ? அடே கறுப்பா! எசமானெ எளுப்படா ; சிறுக்கியே நான் பாத்துக் கிட்டிருக்கேன்.

கறுப்பன் :—[பய பக்தியோடு கைகட்டி வாய் பொத்திக்கொண்டு] சாமி! சாமி!! எளுந்திருங்க; நான் தான் அடிமை கறுப்பன்; நடுத்தெருவிலே படுத்துக்கிட்டிருக்கயளே? [உற்றுப் பார்க்கிறுன்.] என்ன அண்ணே? எசமான் அப்புறம் இப்புறம் அசையவேயில்லேயே.

வீரன் :—ஏண்டி சிறுக்கி ! மந்தரம் போட்டிருக்காயா என்ன? சீக்கிரம் சொல்; விடுவேன் ஒதை. [உதைக்கிறுன்.]

சந்திர :—ஐயையோ! எனக்கு ஒன்றும் தெரியாதே ; நான் மந்திரக்காரியல்லவே.

கறுப்பன் :—இல்லாவிட்டா எசமானெ எளுப்பு; ஒரு நாளும் அப்படித் தூங்கமாட்டாகளே.

சந்திர :—[தனக்குள்.] விசுவநாதா ! இந்தக் குழந்தையைத் தூங்குகின்றதாக நினைத்துக் கொண்டிருக்கிறுர்கள் ; நான் என்ன செய்வேன்? [வெளியில்.] ஐயா! நீங்கள் யாவரென்றும் எனக்குத் தெரியவில்லே ; இடுகாட்டிலிருந்து வழி தெரியாமல் அலேந்து வருகையில் இந்தக் குழந்தை ஒரு சிறிய முடுக்கில் இறந்து கிடந்தது.

இருவரும் :—[தங்களுக்குள்.] ஆ ! ஆ !! குடி முளுகிப் போச்சே ! [மூக்கின்மீது விரல் வைக்கிறுர்கள்.]

சந்திர :—இது என் குழந்தைபோல் இருந்ததனுல், அங்கிருந்தால் ஒருவரும் கண்டுபிடிக்க முடியாதென்று இங்குக் கொண்டுவந்து கிடத்தினேன்; இதைத் தவிர வேறு ஒன்றும் எனக்குத் தெரியாது.

வீரன் :—அடி பாவி! சின்ன எசமானெ அநியாயமா த் தொலெச்சுட்டயா? பட்டத்துக்கு வேறே கொளந்தெ இல்லியே.

கறுப்பன்:—பெரிய எசமான் இனிப் பொளெக்கவேமாட்டார்; நகெ இல்லாவிட்டா கொளந்தையெக் கொல்லணுமா பொம்பிள்ளெயா யிருக்காயே?

சந்திர :—நான் கொல்லவில்லையே.

வீரன் :—[கோபத்துடன்.] கொல்லவில்லையா? ஒதையடா! கழுத்தெமுரிச்சுக் கொண்ணூட்டது மில்லாமே இல்லேண்டு சாதிக்கப்பாக்கிறு? [அடிக்கிறுன்.]

சந்திர:—ஐயோ! ஐயோ!! என்ன செய்வேன்? ஒருவரும் ஏனென்று கேட்பார் இல்லையே; விசுவநாதா! ஒரு பாபத்தையும் அறியேனே.

கறுப்பன்:—ஒனக்குப் பாவங்கூட உண்டா? [அடிக்கிறுன்.]

சந்திர:—விசுவநாதா! விசாலாக்ஷி!! பொறுக்க முடியவில்லையே.

வீரன்:—என்ன சொல்றே சிறுக்கி? பொறுக்க முடியவில்லையா? கழுத்தெ முரிக்கெயிலே ரொம்ப சொகமா யிருந்ததல்லோ ; அடே கறுப்பா! இருட்டாயிருக்குது; எல்லாரும் வரட்டும்; சீக்கிரம் ஊது. [கறுப்பன் ஊதுகிறுன்.] [திரைக்குள்.] அடே முனியா ! பயக ஊதுகிறுக; போகலாம் வாருங்க.

வீரன்:—விளக்கு வரட்டும்; எங்கே தப்பினே? [யாவரும் வருகிறுர்கள்.]

பெரியண்ணன் :—யாரையடா பிடிச்சுக்கிட்டிருக்கே? சின்ன எசமான் எங்கே?

வீரன்:—தடிச்சிறுக்கி வேலேயே முடிச்சூட்டா.

பெரியண்ணன்:—[திடுக்கிட்டு.] யாரே? நம்ம சின்ன எசமானெயா?

கறுப்பன்:—ஆம். [திகைத்து நிற்கிறார்கள்.]

பெரியண்ணன்:—எங்கடா விளக்கு? ஜல்தி; ஜல்தி; [விளக்கு உண்டாக்குகிறார்கள்; சந்திரமதியைப் பார்த்துத் தங்களுக்குள்.] கண் கூசறதே! கன்னி மாருங்கோ போலிருக்குது! [வெளியில்.] மாட்டே அடிக்கிறப் பலே இப்படி அடிச்சிருக் கையளே; யாரடா அடிச்சுது, தடிப்பயகளே, எசமான் பாத்தா என்ன சொல்லுவாக? [யாவரும் பயப்படுகிறார்கள்.]

முனியன்:—ஏண்டா வீரா? புளிச்சத்தண்ணி கொளுப்பா இப்படி அடிச்சது? ஆவட்டும்? [பெரியண்ணனைப் பார்த்து] என்னவோ இருட்டுவேளே; பயக தெரியாமே சேசுட்டாக; இப்போ என்ன செய்யலாம்; சொல்லுங்க.

பெரியண்ணன்:—எசமானிடத்துக்குப் போகவேண்டியதுதான்.

முனியன்:—சின்ன எசமானெ யார் எடுத்துக்கறது.?

பெரியண்ணன்:—அந்த அம்மாதான் எடுத்துக்கணும்.

முனியன்:—அம்மா! இனி அடிக்கமாட்டாக; சின்ன எசமானெ எடுத்துக்குங்க; போவலாம்.

சந்திர:—அப்பா, இறந்த மகனை இடுகாட்டில் கிடத்தி; வந்திருக்கிறேன், சீக்கிரம் சென்று தகனம்செய்யவேண்டும் இன்னும் எந்த விட்டுக்கு எடுத்துவரச் சொல்கிறீர்கள்? [காலவர்அனைவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கிறார்கள்.]

பெரியண்ணன்:—ஏண்டாலே வீரா! இந்த அம்மாளா கொலெ சேசாக? தேவதைபோலெ இருக்காகளே.

வீரன் :—நாங்க வருகேலேதான் சின்ன எசமானேக் களுத்தேமுரிச்சுக் கீளே கெடத்திக்கிட்டிருந்தா ; இருட்டு வேளே : அப்பொளுதே வந்து பிடிச்சுக்கிட்டோம் ; இன் னும் எப்படிப்பாக்கறது.

பெரியண்ணன் :—[அவனுடன் மெதுவாய்] ஆமாண்டா ; கெலெக்குறி கொஞ்சமும் காணலெயே ?

முனியன் :—நாம் என்ன செய்யலாம் ; மந்திரி எசமா னிடத்திலே கொண்டுவிட்டா, அவக எப்படியாவது விசாரி த்துக்கொள்ளுக.

பெரியண்ணண் :—அம்மா ! கொளந்தையே எடுத்துக் கொள்ளுங்க ; மந்திரி எசமான் வெகு நல்லவக ; அவக ளிடத்திலே நீங்க சொல்லிக்கொள்ள வேண்டியதைச் சொல் லிக்கொள்ளலாம்.

சந்திர :—விசுவநாதா, இதுவும் பாக்கியிருந்ததா ? சொலேக்குற்றமும் சாற்றபட்டுவிட்டது ; இனித் தடை என்ன ? இறக்கலாம் ; [பெரியண்ணனே நோக்கி.] அப்பா ! என்னே அடிக்காதிருந்தால் என்ன வேண்டுமானுலும் செய் றேன் ; பொறுக்க முடியவில்லே.

பெரியண்ணன் :—இனி உங்களேத் தொடுவதேயில் லே ; தடிப்பயக தெரியாமே சேகவிட்டாக ; சின்ன எசமா னெமாத்திரம் எடுத்துக்கொள்ளுங்க ; போவலாம்.

சந்திர :—ஹா ! பிராணநாதா, இனி இந்த மகாபாபி யைக் காணப்போகிறதே யில்லே ; பொழுது விடிந்ததும் இறக்கப்படுவேன் ; குழந்தாய் ! லோகிதம், நீ அப்படியே அடக்கம் செய்வாரின்றி அநாதைப் பிணம்போலக்கிடக்க வேண்டியதுதான் ; நான் கொலேயாளியாய்விட்டேன் ; ஜக தீசா, இனி—

முனியன் :—அம்மா! நேரமாகுது; சீக்கிரம் வாருங்க.

சந்திர :—இதோ வந்துவிட்டேன்: [குழந்தையை எடுக்கக் குனிந்துகொண்டு.] அட குழந்தாய், உனக்குச் செய்த உபகாரம் எனக்கு அபகாரமாய் முடிந்தது; [பெருமூச்சுவிட்டு] அக்கறையில்லே; தற்காலத்துக்கு இது மிகவும் ஏற்றதுதான்; வா! [எடுத்துக்கொள்கிருள்.]

முனியன் :—இப்படி வாருங்க. [யாவரும் மறைகிருர்கள்.]

---

## களம் 3.

இடம் :—இடுகாடு.

காலம் :—காலே.

[அரிச்சந்திரன் பிரவேசிக்கிருன்.]

அரிச்சந்திரன் :—பொழுது புலர்ந்து பத்து கடிகையும் கழிந்து விட்டது; இருட்டில் வழி மாறியிருக்கினும் வந்திருக்கக்கூடுமே; ஒருகால், ஐயர் அளிக்கமாட்டேன் என்றிருப்பாரோ? சீ! இருக்காது: மகா நல்லவர் என்று சொல்லியிருக்கிருள்; [யோசிக்கிருன்.] வேறு ஏதேனும்—ஆ! என்ன மானக்கேடு: ஒரு சக்கிரவர்த்தி [தயங்குகிருன்.] இறந்த மகனை அடக்கம் செய்வதற்குப், பிணத்துணி யிரக்க மனைவியை அனுப்பியிருக்கிருன்; அரிச்சந்திரா! நீ இனி என்றும் இறக்கவேமாட்டாய்; சிரஞ்சீவிதான்; [ஆங்கு எரிந்துகொண்டிருந்த பிணம் ஒன்று புரண்டு விழுதலும் அதைக்கோலால் நெருப்பில் தள்ளிக்கொண்டு.] சிநேகனே, [யோசிக்கிருன்.] ஆம், சிநேகன்தான்; இப்பொழுது உன்னுேடுதான் நான் சம்பாஷித்துக் காலம் கழிக்கிறேன்; உலகம் அடங்கலும் உன்னைப் பிணம் பிணம் என்று தூஷிக்கின்றனே? பிணப்பட்டம் உனக்குக் கிடைத்ததும் நீ மகா த்யாகியாய் விட்டாய்? எத்தனை

பறைக்காரர்கள்! எத்தனை கட்டியக்காரர்கள்! எத்தனை வியாபாரிகள்! எத்தனை கூலிக்காரர்கள்! எத்தனை குருக்கள்! ஆ! ஆ!! கணக்கே யில்லையே! பணத்தை வாரி வாரி இறைக்கிறாய்; உனக்குப் பணிவிடை செய்வதற்கு "நான் முன்னே நான் முன்னே" என்று கைகட்டிக் காத்துக் கொண்டிருக்கிறார்கள்; [யோசிக்கிறான்.] உண்மையில் நான்றான் நடைப்பிணம்; இறந்த மகனையும் அடக்கம் செய்யக் சக்தியில்லாமல் இப்பொழுது நாற்புறமும் விழித்துக்கொண்டிருக்கிறேன்; [தடியை ஊன்றிக்கொண்டு மகனை நோக்கி.] என் குழந்தாய்; உன் அன்னை இன்னமும் வரவில்லையே; நம் இருவரையும் வெறுத்துச் சென்றுவிட்டாளோ? அன்றி, ஐயர் வீட்டில்தான் அநுமதி கொடுக்கவில்லையோ? ஒன்றும் தெரியவில்லை; என் உடலும் உயிரும் யஜமானருக்குச்சொந்தமாயிருப்பதனால் உன்னைக் கட்டிக் காப்பதற்கும் காலமற்றவனாயிருக்கிறேன்; [நாற்புறமும் பார்க்கிறான்.] ஸ்மாசான வாஸிகளே! பேதாளங்களே! என் மகன் லோகிதத்ந்த உங்கள் அடைக்கலம் வைத்துச் செல்கிறேன்; கருணை கொண்டு அவனைச் சிறிது பொழுது காப்பாற்றுங்கள்; அவன் அன்னை வந்ததும் எடுத்துக்கொள்கிறேன்; [இடக்கண் துடித்தலை அபிநயித்து.] என்ன இது! இடக்கண் துடிக்கின்றது; இன்னும் என்ன ஆபத்துக்கள் வர விருக்கின்றனவோ தெரியவில்லை; ஏன் சிந்திக்கவேண்டும்? எல்லாம் வரட்டும்;

"உறற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா.
பெறற்பா லனையவும் அன்னவாம்—மாரி
வறப்பிற் றருவாரும் இல்லை. அதனைச்
சிறப்பிற் றணிப்பாரும் இல்."

ஜகதீசா, அடியேன் அநுபவிப்பதற்குச் சித்தமாய்க் காத்துக்கொண்டிருக்கிறேன்; மனமே! நீ கொஞ்சமும் துன்பப்படவேண்டாம்; இனி வரக்கிடந்த துக்கம் ஒன்றுமில்லை; எல்லாம் வந்துவிட்டன; கடமையைச் செய்யப் புறப்படு. [ஆங்குக் கொளுத்தின வண்ணமே அமுங்கிக் கிடக்கும் ஒரு மூட்டத்தண்டை சென்று] நண்பனே, உன்னை ஐந்து நாள்களாய்க் காப்பாற்றிக்கொண்டு வருகிறேன்; பாவிஞல் உன் ஆத்மாவைக் குளிரச் செய்வதற்கு இதுகாறும் ஒருவரும் வந்து சேரவில்லையே; அந்தோ! பசியும் தாகமும் அதிகமாயிருக்கும்; என்ன செய்யலாம்? [யோசனையை அபிநயித்து.] அன்று நாதன் உள்ளவனுகத் தானே விளங்கிஞய்; என்னவோ? யார் கண்டார்கள்? சரி, இது உனக்கு நிலையான இடம் அன்று; உன்னைப்போன்ற அனைவருக்கும் இந்த இடத்தில் பாகம் உண்டு; இனி நிமிஷமும் தாமதிக்கக்கூடாது; நீயாகவே கங்கா ஸ்நானத்துக்குச் செல்ல வேண்டியதுதான். [கோலால் கிளறுகிருன். ஆங்கு மெல்லிய சத்தம் ஒன்று உண்டாதலும்] வியசனப்படவேண்டாம் அவர்கள் பாலைக் காட்டிலும் கங்கா ஸ்நானம் எவ்வளவோ உயர்ந்தது; எல்லாப் பாபங்களும் ஒரே முழுக்கில் தொலைந்து விடும்; செல், செல்; [தடியால் சாம்பலைத் தள்ளுகிருன். பல்லோடு கூடிய மண்டையோடு ஒன்று கீழே புரளுகின்றது.] என் விலகிவிட்டாய்? மந்திரம் சொல்லவில்லை என்று கோபமா? நான் மகாமந்திரங்களை உச்சரிக்கக்கூடாது; அரசன் என்று நினைந்தாய் போலும்; இப்பொழுது பறையனுக்கு அடிமை; அதனிலும் பிணம் சுடுதொழில்; இதுதான் என்று நினைக்காதே! அதோ பார்! என் அருமை மகன் இறந்து பிணமாய் கிடக்கிருன். அடக்கம் செய்யவும் சக்தி யில்லாமல் [மௌனம்] தெரிந்ததா? சுவாமித் துரோகத்தை நினைந்து இப்பொழுது பணிவிடை

புரிகிறேன்; இனியாவது சந்தோஷமாய்ச் செல்! [தடியால் தள்ளுகிறான். அதுநிமிர்ந்து பல்லைத் திறந்துகொண்டு காணப்படு கின்றது.] ஏன் கேலி செய்கிறாய்? என் நிலைமையைக்கண்டு சிரிப்பு வருகின்றதா? சிரிக்காதே; எல்லாரும் எப்பொழு தும் உயர்ந்திருக்க முடியுமா? அது ஒருநாளும் முடியாதே.

" வளம்பெற வேண்டாதார் யார்? யாருமில்லை;
அளந்தன போகம் அவர் அவர் ஆற்றால்,
விளங்காய் திரட்டினார் இல்லை; களங்கனியைக்
காரெனச் செய்தாரும் இல்."

[அது அப்படியேயிருக்கின்றது.]
ஓ! உலக வாழ்க்கையை நினைந்து சிரிப்பு வருகின்றதா? அதுவும் புதியதல்லவே; முந்தியே தெரிந்துள்ளதுதான்;

" ஒழுகிய நடையு நீரு முதல கையிகப்ப வூறும்
அழுகல் இவ் அள்ளல் யாக்கை அகம்புறம் ஆயிற் [றாயின்
கழுகொடு கவரும் காக்கை கைத்தடி கொண்டுகாத்தும்
அழகுள சுழலும் மன்னோ ஆயிரச் சாதிமாதோ."

என்பதைப் படித்ததில்லையா? [உற்றுப்பார்க்கிறான்.] சிரித்த படியே இருக்கின்றாயே; உலகத்தை விட்டுத் துறந்ததனால் ஒருகால் பைத்தியம் பிடித்துவிட்டதோ? அப்படியும் இரு க்கலாம்; சரி, சிரித்துக்கொண்டவண்ணமே கங்காஸ்நானத் துக்குச் செல்! எனக்கு வேலை மிகுதியாயிருக்கின்றது; [எல்லாவற்றையும் சேர்த்துத் தள்ளுகிறான். சாம்பலும் எலும்பும் தண் ணீரில் அமிழும்பொழுது கொள கொள வென்று சத்தமுண்டாகின் றது.] ஐந்து நாள்களாய்ப் பசித்திருக்கிறாய்! ஆவல் அடங்க நன்றாய்ப்பருகு; உன் பசிக்கும் தாகத்துக்கும் வேறு யார் உதவப் போகின்றார்கள்? 'தன் கையே தனக்கு உதவி' நீ

தான் தணித்துக் கொள்ளவேண்டும்; [அவ்விரண்டும் தண்ணீரில் அமிழ்ந்தி விடுகின்றன.] நண்பனே! ஆவல் தணிந்ததா ? இனிக் கங்கையின் அடிப் பாகத்துக்குச் சென்று சுகமாய் இளைப் பாறிக்கொண்டிரு ! அங்கு ஒருவரும் தொந்தரவு செய்யமாட் டார்கள்; நான் சுடலையைச் சுற்றிப்பார்த்து வருகிறேன். [மறைகிறான்.]

---

## களம் 4.

இடம் :—ஊர்க்கு வெளிப்புறம்.
காலம் :—நண்பகல்.

[வீரபாகுவும் சந்திரமதியும் பிரவேசிக்கிறார்கள்.]

சந்திரமதி:—ஐயா! இன்னும் என்னை எங்கு அழைத் துச் செல்லுகின்றீர்கள் ? சீக்கிரம் கொன்றுவிடக் கூடாதா?

வீரபாகு :—இல்லெ அம்மா! இங்கெல்லாம் கொல்லக் கூடாது ; எசமான் மாருங்க கோவிச்சுக்குவாக ; கொல்ற எடத்தலேதான் கொல்லணும்.

சந்திர :—அஃது எவ்விடம் ஐயா ? .

வீரபாகு :—அதோ தெரியுது பாருங்கோ ? அதுதான் நம்ம சுடுகாடு ; அங்கேதான் இடமிருக்கு.

சந்திர :—அந்தோ ! இப்பொழுது சுடுகாட்டுக்கா செல் லவேண்டும் ? [பெருமூச் செறிகிறாள்.]

வீரபாகு:—இதோ இருக்குதுங்களே இதுதான் அம்மா!

சந்திர :—ஐயா, உங்களுக்குக் கோடி புண்யம் உண்டு ; இவ்விடத்திலேயே என்னைக் கொன்று விடும்படி உங்களைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

வீரபாகு :—ஆ ! ஆ !! [மூக்கின்மீது விரலை வைக்கிறான்.] எசமான் மாருங்கோ அறிஞ்சா தலெ போயிடுமே.

சந்திர:—[தனக்குள்.] இந்தக் கொலைக் குற்றத்தோடு அவரையும் காண வேண்டுமா? ஐயையோ! அரைக்கணமும் உயிர் தரிக்க மாட்டாரே! [வெளியில்.] ஜகத்பிரபோ, அடியாளைத் தங்கள் திருவுள்ளத்துக்கு ஒப்புக்கொடுத்திருக்கிறேன்; எப்படிச் செய்யினும் சம்மதம்தான்.

வீரபாகு:—நீங்க சின்ன எசமானெக் களுத்தெ முரிக்கையிலே பாத்துக்கிட்டிருந்ததாக காவக்காரப் பயக சொன்னுகளாமே; அதுக்குத்தானு கொலெத்தீர்ப்பு; என்ன அநியாயகாலம்! மனசாளெப் பாக்கச்சொல்லே தெரியாதா?

சந்திர:—ஆம், உண்மையானதுதான்.

வீரபாகு:—நான் சின்னசாதிப் பள்ளப்பயலா யிருந்தாலும், நீங்க களுத்தெ முரிச்சதாக எனக்குத் தோணலே; இந்தப் போக்கடாப் பயக எல்லாம் பொய் சொல்லி யிருக்காக; யார்சொன்னாலும் நம்பவேமாட்டேன்.

சந்திர:—[தனக்குள்.] அரசனைக் காட்டிலும் இவன் உயர்ந்தவனுன். [வெளியில்.] இல்லை ஐயா! நிஜம் தான்; நானே—

வீரபாகு:—பயலுக்குத் தெரியாதெண்டு பாக்காதியுங்க; எல்லாம் தெரியும்; நான் கொல்லவே மாட்டேன்; அடிமை அணிச்சன் இருக்கான்; அவன் கையிலே ஒப்புவிச்சுடுறேன்.

சந்திர:—ஐயோ! உங்கள் அடிமெயிடத்தில் ஒப்புவிப்பானேன்? நீங்களே கொன்றுவிடக் கூடாதா?

வீரபாகு:—கொலெ சேஞ்சிருந்தாலல்லோ கொல்லலாம்.

சந்திர:—இல்லை; நிச்சயமாய்ச் சொல்கிறேன்; எனக்கு இந்தத் தண்டனை—

வீரபாகு:—கொலெ சேஞ்சா மூஞ்சி சொல்லாதோ? நீங்க சாவறத்துக்குச் சும்மா சும்மா சொல்றையுங்க; என் அடிமெ இருக்கிருனேல்லியோ, அவன் ரொம்ப நல்லவன்; அவனெப் பாத்தாலே பாவங்களெல்லாம் தொலேயும்; ஒங்களுக்காகத்தான் சொல்றேன்; எங்க பள்ளச்சியும் நானும் வெள்ளென வெளுக்கெயிலே அவனெக் கண்டேட்டுத்தான் மொகங்களுவப் போவோம்; நீங்க அவன் கையிலே செத்தா நெல்ல கெதி அடவியுங்கோ.

சந்திர:—ஐயா! உங்கள் அடிமை கையில் மாத்திரம் என்னைக் காட்டிக்கொடுக்க வேண்டாம்; உங்களைக்கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன்; இந்த உபகாரம் செய்யக் கூடாதா? உங்கள் கரத்தாலேயே கொன்று விடுங்கள்.

வீரபாகு:—ஒங்க பேர்லே கொஞ்சங்கூட பெளெ இல்லியே? அதிலியும் பெரிய பெரிய எசமான்மாருங்க கொலத்திலே பொறந்திருக்கியுங்க; இன்ன சாதிப் பள்ளப் பய, நான் தொடுவேனு உங்களெ; இப்பத்தான் பள்ளப் பயலாய் பொறந்திருக்கேனே?

சந்திர:—[தனக்குள்.] இவன் எல்லாம் தெரிந்தவனுயிருக்கிருன்; சந்தேகமேயில்லே; [வெளியில் கரத்தை ஏந்திக் கொண்டு] ஐயா! நான் பெரிய வம்சத்தில்—[தயங்குகிருள்.] 'பெண் என்ருல் பேயும் இறங்கும்' என்பார்களே; நான் ஒரு மகா பாபி; நீங்களே கொன்றுவிடக்கூடாதா?

வீரபாகு:—நீங்க நூறுதான் சொல்லுங்க; எங்களப் பாரேணே; ஒங்களெத் தீண்டவே மாட்டேன்; என் அடிமெ கையிலே சாவறத்துக்கு ஒத்துரொத்துரும் தபசு பண்ண வேண்டாமா? அவனும் ஒங்களெப்போலே பெரிய எசமான் மாருங்க கொலத்திலே பொறந்தவன்தான்; இதுதான் சுடு

காடு ; இங்஦னே இருங்க ; இதோ கூட்பிட்டுக்கிட்டு வாறேன். [மறைகிருன்.]

சந்திர :—அந்தோ ! காசிநாதா, இதுவும் தலைவிதியா ? அவர் முகத்தை எங்஦னம் ஏறிட்டுப் பார்ப்பேன் ? ஒரு சமயம், கொலை செய்தவள்தான் என்று நம்பிவிடுவாரோ ? [மௌநம்] என்னை வீசுவதற்கு ஓங்கிய வாளால் தன்னையே வீசிக்கொண்டு இறப்பாரோ? மகாபாபியைக் கண்டதும், மகன் இறந்த துக்கம் கொஞ்சமும் தோன்றமாட்டாதே; [மௌநம்] காசிப்பட்டணத்துக்கு வந்ததும், அந்தணர்க்கு அடிமைப்பட்டதும், வனத்தில் மகன் இறந்ததும், குழந்தையைக் கொன்ருள் என்று கொலைக் குற்றம் சாட்டியதும், ஐயோ! ஐயோ ! ! [முகத்தில் அறைந்து கொள்கிருள்.] கண்மணீ, லோகிதம்! உன்னைப் பின்பற்றுவதற்கு இந்த மகாபாபிக்கு ஒருவழி ஏற்பட்டு விட்டது ; [மௌநம்] இதில் உன் தந்தை பிழைக்கமாட்டார் போல் இருக்கின்றதே ; எவ்வளவு கெஞ்சிக் கேட்டுக்கொண்டும் இந்த வீரபாகு என்னைக் கொல்லமாட்டேன் என்கிருர் ; என்ன செய்வேன் ; சக்கிரவர்த்தி காதில், ' மனைவி கொலையாளி என்று கேட்கப்படுவதற்குள்,தொலைந்துவிட்டாள் என்று கேட்கப்படட்டும்' என்று எவ்வளவோ முயன்று பார்த்தும் அநுகூலிக்கவில்லையே; [திருக்கோயிலைச் சுட்டி] விசுவநாதப் பிரபோ! இறப்பதில் கொஞ்சமும் துக்கமில்லை; சந்தோஷத்துடன் அதற்குச் சித்தமாயிருக்கிறேன் ; ஆனுல், இந்த மகா பாபியையும் மகனையும் நினைந்து—[மௌநம்] அவரை மாத்திரமேனும் [யோசிக்கிருள்.] இந்த மகாபாபியின் கரத்தைப் பிடித்து அவர் அடைந்த பாக்கியம், இந்தப் பரிபவங்களைத் தவிர வேறு என்ன விருக்கின்றது ? இதோ இந்தப் பாறையின் அருகில் இருக்கலாம் ; வருவதெல்லாம் வரட்டும் ; யாவும் கடவுளுக்கே அற்புதம். [மறைகிருள்.]

## களம் 5.

இடம் :—இடுகாடு.

காலம் :—நண்பகல்.

[அரிச்சந்திரனும் வீரபாகுவும் சம்பாஷித்துக்கொண்டே பிரவேசிக்கிறார்கள்.]

அரிச்சந்திரன் :—எதாயினும் எனக்கென்ன? தங்கள் கட்டளை எனக்கு அவசியமானது.

வீரபாகு :—ஆனு சரி, இதோ பாத்தியா இந்த அம்மாளே; அம்மா! அம்மா!! எங்கே இருக்கையுங்கோ? இங்கே வாங்க சந்திரமதி பிரவேசிக்கிறாள்.]

அரி :—[பார்த்துத் திடுக்கிட்டுத் தனக்குள்.] ஆ! இஃதென்ன!! இவர் அழைத்துக்கொண்டு வருவானேன்? என்னவோ ஆபத்து நேர்ந்திருக்கின்றது; சந்தேகமே யில்லை. வெளியில்.] ஐயா!

வீரபாகு :—இந்த அம்மா, நேத்து ராத்திரி நம்ப மகராஜா எசமான் கொளந்தெயெக் களுத்தெ முரிச்சுக்கிட்டிருக்கையிலே, காவக்காரப் பயக கண்டு கச்சேரிலே கொண்டு விட்டாகளாம்.

அரி :—சிவசிவா! சிவசிவா!! [காதைப் பொத்திக்கொள்கிறான்.]

வீரபாகு :—அங்கிருந்த சாத்திரி எசமான் மாருங்க, மந்திரி எசமான் மாருங்க, மகாராஜா எசமான், எல்லாருமா சேந்து, இந்த அம்மாளெக் கொலெ பண்ணும்படி தீர்ப்புப் பண்ணிவிட்டாகளாம்.

அரி :—[தனக்குள்.] விசுவநாதா! தங்கள் திருக் கருணை இப்படியும் முடிந்ததா? [வெளியில்.] அப்புறம்?

வீரபாகு :—பெரிய பாளையக்கார எசமான் பட்டாக்கத்தியெக் கொடுத்து இந்த அம்மாளெக் கொலெ பண்ணும்படி ஒப்புவிச்சாக.

அரி :—[தனக்குள்.] அங்கேயே கொன்றுவிட் டிருக்கக்கூடாதா? இந்தச் சந்தோஷத்தைத் நானும் அனுபவிக்க வேண்டுமா? [வெளியில்.] தாங்கள்—

வீரபாகு :—எனக்கு இந்த அம்மா கொலெ சேஞ்சிருப்பாங்கோன்னு கொஞ்சங்கூடப்படலே; ஆனா நாமென்ன செய்யலாம்? எசமான்மாருங்க கட்டளெ; இந்தா பிடிச்சுக்கோ; [கத்தியை நீட்டுகிறான்.]

அரி :—[திடுக்கிட்டுத் தனக்குள்.] இஃதென்ன! என்னிடத்தில் அளிக்கின்றாரே; [வெளியில்.] விசுவநாதா! [பெற்றுக் கொள்கிறான்.]

வீரபாகு:—கொலெக் கல்லுமேலே வத்தி என்னமோ காளித்தாய்க்குத்தான் தெரியணும்; கழுத்தெ, ஐயோ பாவம்; சேஞ்சேயிருக்கமாட்டாங்கொ; வெட்டுடு; காளித்தாயே! [கையைக் குவித்துக்கொண்டு] நீ தான் காப்பாத்தணும்.

அரி :—[தனக்குள்.] இனி என்ன செய்யலாம்; கத்தியும் கொடுத்தாய்விட்டது; [வெளியில்.] நானே கொலை செய்யவேண்டுமா?

வீரபாகு :—எனக்குக் கொல்லக் கையெளாது; நீதான் செய்யணும்.

அரி :—[தனக்குள்.] எங்ஙனம் மறுக்கமுடியும்? அடிமை கொண்டிருக்கிறார்; வருவதெல்லாம் வரட்டும்; [வெளியில்.] ஐயா, அப்படியே செய்கிறேன்.

வீரபாகு :—அம்மா, பாத்தியுங்களா? இவன் தான் அடிமை அனிச்சன்; நான் சின்னசாதிப் பள்ளப்பய; இவன்

கையாலே செத்தா உங்களுக்குப் புண்ய முண்டு. [அரிச்சந்திரனை நோக்கி] ஏண்டா அரிச்சா, தெரிஞ்சுதா? எசமான் மாருங்க கட்டளையிட்டா—

அரி:—அப்படியே செய்துவிடுகிறேன்; தடையில்லை.

வீரபாகு:—பள்ளச்சி காத்துக்கிட்டிருப்பா; ஊருக்குப் போவணும்; ஊம்! பத்திரம்; அப்புறம் தலெ முயுவணும்; தெரியுமா?

அரி:—அப்படியே; இப்பொழுதே செய்துவிடுகிறேன்.

வீரபாகு:—நீ எல்லாந் தெரிஞ்சவன்; [சந்திரமதியை நோக்கி] அம்மா! போ வட்டுங்களா? இந்த ஊருலே செத்தா பாவமே இல்லியாம்; பெரிய பெரிய பாப்பார எசமான் மாருங்க எல்லாரும் சொல்றாக; என்னிக்கி இருந்தாலும் சாவணும்; சந்தோசமாயிருங்க; அவகளெ காளித்தாயி சும்மா விடமாட்டா; போவட்டுங்களா?

சந்திர:—[தனக்குள்.] சாவதில் துக்கமேயில்லை. [வெளியில்] அப்படியே; [வீரபாகு மறைகிறான்.]

அரி:—சர்வேசா, மகன் இறந்ததைக் காட்டிலும் மனைவியைக் கொல்வது கடினமாய்க் காணப்படுகின்றதே; நாட்டைத் துறத்தல், அடிமை புகுதல், மகன் இறத்தல், இவை உலகத்துக்குச் சகஜம்; கடிமணம் புரிந்த காதலியைக் கத்தியெடுத்துக் கொல்லுதல் அங்ஙனம் ஆகமாட்டாதே; இந்தக் கஷ்டத்துக்கு என்ன செய்வேன்; இன குலத்தை இருந்தவிடம் தெரியாமல், அடியோடு அழித்துவிட்டதோடு, அதற்கு என்றும் நீங்காத ஒரு களங்கத்தையும் உண்டாக்கிவிட்டேன்; [வாளைப் பார்க்கிறான்.] ஆ! இந்தக் கொடுங்கரம், இப்பொழுது கொலைவாளைத் தாங்கிக் கொல்ல நிற்கின்றது; எப்பொழுது யார்மீது என்ன பழியைச் சுமர்த்

கினேனே? [சந்திரமதியின் சமீபம் செல்கிருன்.] சந்திரமதி! ஐயர் வீட்டுக்குச் செல்லவில்லையோ?

சந்திர :—[தனக்குள்.] என்ன நினைப்பாரோ? தெய்வமே! நீ தான் துணை. [வெளியில்.] இருட்டில் வழி தெரியாமல் மயங்கிக்கொண்டிருந்தேன்.

அரி :—பின்? இது கிடைத்தவிதம்?

சந்திர :—இடுக்குச்சந்து ஒன்றில் கால் இடறிக் கீழே விழுந்துவிட்டேன்; மின்னல் உதவியால் அஃது ஒரு இறந்த குழந்தை என்று தெரிந்தது.

அரி :—முன்பே இறந்திருந்ததா?

சந்திர :—அப்படித்தான் இருக்கவேண்டும்; என்னல் இறப்பதற்குக் கொஞ்சமும் காரணமில்லை.

அரி :—பின்பு?

சந்திர:—அஃது ஒருவரும் காணமுடியாத ஒரு மறைவிடம்; நம் லோகிதம் போல இருந்ததனுல், நல்லவிடத்தில் விட்டுச் செல்லலாம் என்று எடுத்துக்கொண்டு வந்தேன்.

அரி:—சரி, [தலையை அசைக்கிருன்.] நன்ருயிருந்தது.

சந்திர:—உடனே காவலர் வந்து அடி அடி என்று அடித்து, அஃது இந்தவூர் அரசர் குழந்தை என்றும், அதை நானே கொலை செய்தவள் என்றும், என்னைக் கொலுமுகத்துக்குக் கூட்டிச் சென்ருர்கள்.

அரி :—அரசன் முதலியவர்கள் ஒன்றும் கவனிக்க வில்லையா?

சந்திர:—அடிச்சுவடு, முகக்குறி முதலியவற்ருலும், அவர்கள் சாக்ஷியத்தாலும் என்னையே கொலைசெய்தவள் என்று நிர்ணயித்து விட்டார்கள்.

அரி :—ஊழ்வினையைத் தடுக்க யாவரால் முடியும்? அது நல்லவர்களேயும் மயங்கச் செய்கின்றது.

சந்திர :—இல்லே; லோகிதத்தோடு இறக்கவேண்டும் என்று இரண்டு மூன்று வகைகளில் பிரயத்தனப்பட்டதுண்டு; அஃது இந்த விதம் அநுகூலித்தது.

அரி :—அதற்கு இந்த வழிதானு எற்றது?

சந்திர:—நாம் என்ன செய்யலாம்; இறப்பதில் கொஞ்சமும் துக்கம் இல்லே; ஆனுல், கொலேக் குற்றத்தோடு—

அரி :—கடவுளே, கொலே செய்கின்றவனும் நானுகவே நிற்கவேண்டுமா?

சந்திர :—தங்கள் கரத்தாலேயே இறக்கும் வண்ணம் கருணே புரிந்த கடவுளுக்கு நன்றி பாராட்டவேண்டாமா?

அரி:—என்ஞல் கொல்லப்படாவிட்டால், இறப்பதில் எனக்கும் இஷ்டம்தான்.

சந்திர :—தாங்கள் கொல்வதிற்ருன் இருவர்க்கும் புகழ் உண்டு.

அரி :—என்ன புகழ்? பயனற்ற புகழ்.

சந்திர :—அப்படி நினேக்கக்கூடாது; இந்த உலகத்தில் என்றும் நிலேத்திருப்பது புகழ் அல்லது இகழ் ஒன்றுதான்.

"மன்னு உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாம் மாய்ந் தனரே."

புகழ் வரும்பொழுது உயிரைத் துறக்கத் துக்கிப்பானேன்? யஜமானன் கட்டளேயை நிறைவேற்றின புகழ் தங்களுக்கும் கணவன் கரத்தால் இறந்த புகழ் எனக்கும் கிடைக்கின்றது மனத்தைத் திடன் செய்துகொள்ளுங்கள்.

அரி :—சூரிய வம்சத்தில் மனைவியைக் கொன்றவர் ஒரு வரும் இல்லையே; இதுவும் காலகதியா? அரிச்சந்திரா, நீ எந்த ஒருத்தியின்மீது அளவுகடந்த ஆசையை வைத்து நேசித்து வந்தாயோ, அந்த அருமைச் சந்திரமதியை, ஆசை நாயகியை, அயோத்தியின் சக்கிரவர்த்தினியை, அந்தோ! [கீழே விழுந்து மூர்ச்சிக்கிருன்.]

சந்திர :—[பரபரப்புடன் எடுத்து முன்றானையால் விசிறிக் கொண்டு] பிராணநாதா, இன்னமும் தெளியவில்லையா? [முகத்தைத் துடைக்கிருள்.] அந்தோ! இன்னும் பிரக்ஞை வரவில்லையே; இந்த மகாபாபி நினைத்தது சரியாய்விட்டது; கொல்வதற்குக் கை யெழாமல் மூர்ச்சித்துவிட்டார்; துரையே! அதிர்ஷ்ட ஹீனையாகிய அடியாள் தங்கள் பரிசுத்த அன்புக்குப் பாத்திரமல்லவே; சந்திரமதீ! நீ இன்னும் என்ன செய்ய விருக்கின்றாயோ? உன்மீது வைத்த ஆசையினுல் மறுமாதரை விரும்பமாட்டேன் என்று, ஒரு சக்கிரவர்த்தி பிணம்சுட்டுப் பொசுக்கும் பறைத்தொழிலைக் கைக்கொண்டு, இப்பொழுது உனக்குமுன் உயிர் விடவும் சித்தமாய்விட்டார்; நீ எல்லாவற்றையும் கண்டும், அந்தோ! [முகத்தில் அறைந்து கொள்கிருள்.] என் அருமைத் தலைவரே, [விசிறுகிருள்; அரிச்சந்திரன் சிறிது கண் திறக்கிருன்.]

அரி :—இன்னமும் உயிர் போகவில்லையே; [மறுபடி கண்களை மூடிக்கொள்கிருன்.]

சந்திர :—நாதா, தங்கள் அருமைச் சந்திரம் சுடுகாட்டில் இப்படி வருத்தப்படுவதைக் கொஞ்சமும் பார்க்கவில்லையா? மகனைத் துறந்து, [அரிச்சந்திரன் மூர்ச்சை தெளிந்து உட்காருகிருன்.] பிராணநாதா, தைரியப்படுத்திக் கொள்ளுங்கள்; இனி இதற்குச் சிந்திக்கவேண்டாம்; சீக்கிரம் செய்து விடுவது எதற்கும் நல்லது.

அரி :—[தனக்குள்.] இனிப் பயனில்லை; துணியவேண்டியதுதான்; [வெளியில்.] ஜகதீசா, தங்கள் திருவுள்ளத்தின் வண்ணம் நடக்க இதோ சித்தமாய் முன்வந்திருக்கிறேன்; பரம்பொருளே, கைந் நடுங்குகின்றதே; ஒரு விதத்திலும் மனம் துணியமாட்டேன் என்கின்றது; இருதலைக் கொள்ளி எறும்பின் வண்ணம்—

சந்திர :—தரணியை ஒரு குடையில் ஆண்ட சக்கிரவர்த்திக்கு அடியாள் சொல்லத்தக்கது என்ன விருக்கின்றது? திடன் செய்து கொள்ளுங்கள்; யஜமானரும் திரும்பி வருகிற வேளையாய்விட்டது; சீக்கிரம் பாருங்கள்.

அரி :—[தனக்குள்.] யஜமானர் கட்டளை யிட்டுவிட்டார்; கத்தியையும் பெற்றுக்கொண்டுவிட்டோம்; இனி எதற்குச் சிந்திக்கவேண்டும்? முன் வைத்த காலைப் பின் வைக்கக் கூடாது; சீக்கிரம் முடிக்க வேண்டியதுதான். [வெளியில்.] சந்திரமதீ! தேற்றிக்கொண்டுவிட்டேன்; வா! இந்தப் பீடத்தின்மீது ஏறு.

சந்திர :—அப்படியே; அடியாள் தங்களைக் கடைசி வந்தனம் செய்கிறேன்; அநுக்கிரகியுங்கள். [வணங்குகிறாள்.]

அரி :—பரம்பொருளே, என் செயல் முழுவதையும் தங்கள் திருவுள்ளத்துக்கு ஒப்படைத்துவிட்டேன்.

"எனக்கெ னச்செயல் வேறிலை; யாவுமிங் கொருநின்
றனக்கெ னத்தகும் உடல்பொரு ளாவியும் தந்தேன்.
மனத்த கத்துள வழுக்கெலா மாற்றிஎம் பிரான்நீ
நினைத்த தெப்படி யப்படி யருளுதல் நீதம்."

[சந்திரமதி மேடை மீதேறுகிறாள்.] சந்திரம், கடவுளைத் தியானித்துக் கொள்.

சந்திர:—அடியாளுக்குத் தங்களைத் தவிரப் பிறிதொரு கடவுளும் இல்லை; [கரத்தைக் குவித்துக்கொண்டு] சத்திய சுவரூபியே, அடியாள் மனம் வாக்குக் காயங்களில் இதுகாறும் மறுவற்றவளா யிருப்பின், மற்றொரு பிறப்பிற்கும் இவரே மணமகன் ஆகவேண்டும். [அரிச்சந்திரனை நோக்கி] பிராணநாதா! அடியாள் இதுகாறும் தெரியாமைத்தனத்தால் ஏதேனும் பிழைகள் செய்திருப்பின், அவற்றை மன்னிக்கப் பிரார்த்திக்கிறேன். [கை கூப்பிக்கொண்ட வண்ணம் குனிந்து நிற்கிறாள்.]

அரி:—விசுவநாதப் பிரபோ! மனம் ஒத்து விரும்பி மணம் புரிந்த, மதிதயன் மகளை இதோ கொல்லப்போகிறேன்; அவளுக்குத் திருவருள் சுரந்து அநுக்கிரகியுங்கள்; சந்திரம்! சித்தமாயிருக்கிறாயா?

சந்திர:—ஆம்.

அரி:—விசுவேசா, யாவும் தங்களுக்கே அற்புதம்; [வாளை வீசுகிறான்; அது புஷ்பமாலிகையாய் விழுதலும் மலர்மாரி பொழிகின்றது. திடுக்கிட்டுத் திகைத்து] சந்திரம்! என்ன ஆச்சரியம் இது?

சந்திர:—[தனக்குள்.] இந்த மகா பாபி இறப்பதில் இன்னமும் கடவுளுக்குக் கருணை இல்லைபோல் காணப்படுகின்றதே; இன்னும் என்ன வென்ன துக்கங்களை அநுபவிக்கப் பிறந்திருக்கின்றேனோ? ஜகதீசா, இவ்வளவிலேனும் தொலைத்துவிடக் கூடாதா? [வெளியில்.] பிராணநாதா! இதற்கு யோசிப்பானேன்? எடுத்த காரியத்தைச் சீக்கிரம் முடியுங்கள்; இரண்டிடத்திலும் புகழ் கிடைக்கும்; பிடியை எடுத்துக்கொள்ளுங்கள்; வாளாய் விடும்.

அரி:—[எடுக்கிறான், அது வாளாதலும் தனக்குள்.] சீ! என்ன பயன்! ஒரு பெண்ணுக்கு இருக்கும் அறிவும் நமக்கு இல்லாது போய்விட்டது! இந்தப் பூவிளையாட்டு யாவர்க்கு வேண்டும்? உறுதி செய்துகொண்டு விடலாம். [வெளியில்.] சந்திரம! இப்பொழுது தப்பாது: சித்தம் செய்துகொள்; வீசுகிறேன்.

சந்திர:—செய்யுங்கள். [கை கூப்பிக்கொண்டு குனிந்து நிற்கிறாள்.]

அரி:—ஜகதீசா, நான் இதுகாறும் உண்மை தவறாதிருப்பின், இந்தவாள் [திரைக்குள்.] பொறு பொறு; பதறற்க; பதறற்க.

அரி:—[கோபத்துடன்.] யாவர் என்னைத் தடுக்கின்றவர்? [திரும்பிப்பார்க்கிறான். விசுவாமித்திரன் ஓடோடியும் வந்து கத்தியைப் பிடித்துக்கொண்டு]

விசுவாமித்திரன்:—அரிச்சந்திர மகாராஜனே! நான்றான் விசுவாமித்திரன்; கொல்லவேண்டாம், கொல்லவேண்டாம்.

அரி:—[திகைத்துநின்று] ஏது இப்பொழுது? தங்கள் வருகை ஆச்சரியமாயிருக்கின்றது; இராஜாக்னை யஜமானர் கட்டளையும் இருக்கின்றது; சற்று இருங்கள்; இதோ வந்துவிட்டேன். [வாளை ஓங்க வெடுக்கிறான்.]

விசுவா:—[தனக்குள்.] இதேது? விடமாட்டான் போல் இருக்கின்றதே; [வெளியில்.] தடுப்பதற்காக வல்லவோ நான் வந்திருக்கிறேன்; விட்டுவிடு. [வாளைப்பற்றுகிறான்.]

அரி:—அஃதெப்படி? தங்கள் கட்டளையாயின் உடனே மாற்றிக்கொண்டிருப்பேன்; மேலும்

" புலையனும் விரும்பாத இப்புன்புலால் யாக்கை
நிலையென மருண்டு உயிரினும் நெடிதுறச் சிறந்தே
தலைமை சேர்தரு சத்தியம் பிறழ்வது தரியேம்.
கலை உணர்ந்த நீர் எமக்கிது கழறுவ தழகோ?"

[சந்திரமதி மனத்திகைப்புடன் நிற்கிருள்.]

விசுவா:—[தனக்குள்.] இனிப் பயனில்லை; உண்மையை ஒப்புக்கொள்ள வேண்டியதுதான். [வெளியில்.] இந்த அலங்கோலங்களுக்குக் காரணம் வராணவஸியின் அரசனன்று; வசிஷ்டருக்கும் எனக்கும் நேர்ந்த சில காரணங்களை முன்னிட்டு நானே உங்களை வருத்தப்படுத்தநேரிட்டது; விட்டுவிடு; எல்லா வற்றையும் பின்னல் தெரிவிக்கிறேன்.

அரி:—[ஆச்சரியத்துடன்] தாங்களா? இன்னும் விசேஷமாய் விட்டது; சந்திரமதியும் இறக்கச் சித்தமாயிருக்கிருள்; நானும் கொல்ல முன்வந்திருக்கிறேன்; என்றைக்காவது ஒருநாளைக்கு இறக்கவேண்டியதுதானே.

விசுவா:—அரச கேசரி! நீ முக்காலும் சத்தியவான்ருன்; [சந்திரமதி வணங்குகிருள்.] பாக்கியவதி! இனி ஒன்றுக்கும் துன்புருதே; உங்கள் அருமைலோகிதம் அதோ எழுந்து விட்டான்! வாருங்கள் அயோத்திக்குச் செல்லலாம்; [லோகிதாஸ்யன் எழுந்து தாய் தந்தைகளையும் முனிவரையும் வணங்குகிருன். சந்திரமதி தழுவிக்கொள்கிருள்.]

சந்திர:—மகனுக்கு உயிர் தந்த கருணை என்றும் மறக்கக்கூடியதன்று; அடியாள் இனி எங்ஙனம் பட்ட மகிஷியாகும் பாக்கியத்தைப் பெறுவேன்?

விசுவா:—அவனும் பிழைத்துவிட்டானே! அதோ பாருங்கள்; தந்தையோடு வருகிருன். [காசிராஜன் பிரதாபருத்திரன், மகன் மந்திரிமுதலியவர்களோடும் வந்து அரிச்சந்திரனையும் சந்திரமதியையும் வணங்கிக்கொண்டு]

பிரதாபருத்திரன் :—அடியேன் ஆராயாமல் செய்தது முக்காலும் பிசகு; கடவுள் அருள்முகம் நினைந்தாவது மன்னிக்கப் பிரார்த்திக்கிறேன்; இந்த இராஜ்யமும் அடிமையும் தங்கள் அடைக்கலம். [வீழ்ந்து வணங்குகிறான்.]

அரி :—[பரபரப்போடு விலகிக்கொண்டு] எழுந்திருங்கள்; இப்பொழுது நான் சக்கிரவர்த்தியன்று; அடிமை; இடமும் அசுத்தமானது.

பிரதாப :—எனக்கே வெட்கமாயிருக்கிறது; சக்கிரவர்த்தியவர்கள் என்று கொஞ்சமும் அறியாதுபோய் விட்டேன்.

அரி :—நியாயம் என்பது யாவர்க்கும் ஒன்றுதானே ?

பிரதாப :—என் கண்களுக்கும், சபையோர்களுக்கும், அடித்தடம் முகக்குறி முதலிய பலவும், அப்பொழுது கொலைக்குற்றத்தையே வற்புறுத்தின; இப்பொழுது அவ்வளவும் கனவோ என்னும்படியான நிலைமைக்கு வந்துவிட்டன! ஒருகால், என்னை ஒருதேவதைதான் அங்ஙனம் மயங்கச் செய்திருக்கவேண்டும் என்றும் நினைக்கிறேன்.

விசுவா :—பிரதாபருத்திரனே, நீ நியாயவாதிதான்; உன்னை நான் அவ்வண்ணம் ஏமாற்றிவிட்டேன். ஏதோ ஒன்றை நினைந்து அங்ஙனம் செய்யநேரிட்டது.

பிரதாப :—இன்றுதான் அடியேன் தந்யனாயினேன். தாங்கள் பொருள்படுத்தும்படியான அவ்வளவு உயர்ந்த நிலைமைக்கு வந்துவிட்டேனல்லவா?

[வசிஷ்டர் வருகிறார்; அரிச்சந்திரன், சந்திரமதி லோகிதாஸ்யன் மூவரும் வணங்குகிறார்கள்.]

வசிஷ்டர் :—அரிச்சந்திரா ! எங்கள் சபதத்தால் மிகவும் வருந்தி விட்டாய்; ஆயினும், இராகு உண்டு உமிழ்ந்த

சந்திரன்; இனி உலகத்தில் உன் புகழ் ஒன்றுதான் என்றும் நிலைத்துவிளங்கும்.

அரி:—யாவும் தங்கள் அநுக்கிரகம்தான்.

விசுவா:—அரிச்சந்திர மகாராஜனே! எனக்கும் வசிஷ்டருக்கும் இந்திர சபையில் நேர்ந்த ஒருவித சபதத்தினுல் அநுபவிக்கக்கூடிய கஷ்டங்கள் அவ்வளவையும் நீங்கள் அநுபவித்து விட்டீர்கள்; இவ்வளவு வருத்தப்படுத்தியும் ஜயம் வசிஷ்டருடையதாய்விட்டது; என்ன செய்யலாம்? யாவும் ஊழ்வினை; கஷ்டத்தின்முடிவே சுகமானதால் இனி எப்பொழுதும்போல அயோத்திக்குச்சென்று அரசாக்ஷி செய்துகொண்டிரு; சிந்தித்துப் பயனில்லை; எங்கள் ஏற்பாட்டின் வண்ணம் என்தவத்தில் பாதிபாகத்தைத் தங்களுக்குத் தத்தம் செய்துவிட்டேன்.

அரி:—ஏது? இனி அதற்கும் எனக்கும் நெடுந்தூரம்; துப்பிய தம்பலத்தைத் திரும்பவும்—

வசிஷ்டர்:—விசுவாமித்திரருக்கு அங்ஙனம் கருத்தில்லையே; உன்னிடம் ஒப்புவித்து விடுவதற்கல்லவோ அவர்—

அரி:—அஃதெப்படி? நான்முன் அவருக்கு முந்தியே கொடுத்துவிட்டேனே; இனி இராஜ்யத்துக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்? நான் சண்டாளனுய்விட்டேன்; மேலும் அடிமை.

வசிஷ்டர்:—பறையனுக்கு அடிமையாய் விட்டோம் என்று சிந்திக்காதே; உங்கள் இருவரையும் அடிமைகொண்டவர்கள் அதோ வருகிறுர்கள்; பாருங்கள்! [அக்னி பகவானும் யமதர்ம மகாராஜனும் வருகிறுர்கள். அரிச்சந்திரன் சந்திரமதி முதலானவர்கள் வணங்குகிறுர்கள்.]

அக்னி :— அரிச்சந்திரமகாராஜரே ! நான் யார் தெரியுமா? வைசுவாநரன் ; விசுவாமித்திரர் வேண்டுகோளினால் காலகண்டன் என்னும் அந்தணனாகித் தங்கள் மனைவியையும் மகனையும் அடிமைகொண்டிருந்தேன். சந்திரமதியின் பாதிவிரத்தியத்துக்கு மிகவும் அஞ்சுகிறேன்; லோகிதாஸ்யன் ஒரு அவதார புருஷன்; குணக்கடல்; அடக்கம் வாய்ந்தவன்; இருவரையும் இதோ தங்களிடத்தில் ஒப்புவித்துவிட்டேன்; [சந்திரமதியை நோக்கி] அம்மணி! தாங்கள் புத்திரனோடு இனிச் சக்கிரவர்த்தியவர்களிடம் செல்லுங்கள்; அடிமை முன்னிலையில் ஏதாவது வருத்தப்படுத்தியிருந்தால், அவ்வளவும் விசுவாமித்திரர் கட்டளை என்று நினைக்கவேண்டும்; நான் என்னசெய்யட்டும்; பராதீனன்.

அரி :— அஃதெப்படி ஒப்புவிக்கலாம் ? தங்களுக்கு இன்னும் என்னால் பொன் கொடுக்கப்படவில்லையே ?

அக்னி :— முந்திக் கொடுத்திருந்தாலல்லவோ இப்பொழுது பெற்றுக்கொள்வதற்கு ? பொன் விசுவாமித்திரருடையது; நேற்றுவரையில் அவருக்கு வேலைக்காரனாயிருந்தேன்.

அரி :— தன்யனாய் விட்டேன்; மன்னிக்கவேண்டும்; மனைவியைக் காப்பாற்றிக் கொடுத்தது என்றும் மறக்கற்பாலதன்று. [வணங்குகிறான்.]

யமதர்மராஜன் :— நான் யார் தெரியுமா? தென் திசைக்குத் தலைவன்; வீரபாகு என்ற பெயருடன் தங்களை அடிமைகொண்டிருந்தேன்; அக்னிபகவான் சொல்லியதுபோலவே விசுவாமித்திரருக்கு நானும் ஒரு வேலைக்காரன்தான்; தங்களைப் புன்றொழில் செய்யும்படி கட்டளையிட்டதெல்லாம் விசுவாமித்திரர் ஏவுதல் என்று நினைக்கவேண்டும்; தேவர்

கள் என்றும் பாராதினார்கள்; தங்களுக்கும் தெரிந்ததுதானே. இனித் தாங்கள் சுவதந்திரராய் விட்டீர்கள்.

அரி:—பறையனுக்கு அடிமைப் பட்டோம் என்று இனிக் கனவிலும் நினைக்கமாட்டேன்; தங்களுக்குப் பணிவிடைபுரியக் கொடுத்துவைக்க வேண்டுமே ?

விசுவா :—அரிச்சந்திர மகாராஜனே, காலதாமதம் செய்யவேண்டாம்; சீக்கிரம் புறப்படவேண்டும்; அயோத்தியில் யாவும் சித்தமாயிருக்கின்றன.

அரி :—முனிநாதா, எல்லாம் தங்கள்கருணை; கொடுத்து விட்ட ஒன்றை—

விசுவா :—இல்லை, இல்லை. கட்டாயம் ஏற்றுக்கொள்ள வேண்டியதுதான். என் வசனத்தில் சந்தேகமிருந்தால் வசிஷ்டரைக் கேள்.

வசிஷ்டர் :—அரிச்சந்திரா ! விசுவாமித்திரர் வசனத்தில் சந்தேகம் கொள்ளவேண்டாம்; அவ்வளவும் சத்தியம்; மகுடாபிஷேகத்துக்கு இன்றே முகூர்த்தமும் நியமிக்கப்பட்டிருக்கிறது; மற்ற விவரங்கள் அயோத்தியில் தெரிவிக்கப்படும்; இதோ விமானமும் வந்துவிட்டது; புறப்படுங்கள். [புஷ்பகம் வருகின்றது.] பிரதாபருத்திரரே! குழந்தையோடு நீங்களும் ஏறுங்கள்.

பிரதாப :—காத்துக்கொண்டிருக்கிறேன்.

அரி :—[தனக்குள்.] இனி நாம் என்ன செய்யலாம் ? [வெளியில்.] சந்திரமதி ! நமக்கு இருவரும் குருசிரேஷ்டர்கள்; அவர்கள் கட்டளை எதுவாயினும் அப்படியே நடக்க வேண்டியதுதான்; [வசிஷ்டர் விசுவாமித்திரர் இருவரையும் நோக்கி] தங்கள் கட்டளையை எங்ஙனம் மறுக்கத் துணிவேன்? காத்துக்கொண்டிருக்கிறேன். [சந்திரமதியையும் புத்திரனையும்

நோக்கி] சந்திரம்! லோகிதம்! எல்லாம் கடவுள் செயல்; வாருங்கள்! ஏறிக்கொள்ளலாம். [**அனைவரும் ஏறிக்கொள்கிறார்கள்; விமானம் ஆகாயத்தில் மறைகின்றது.**]

பரதவாக்கியம் :—சபையோர்களே! அடக்கம் பொருந்தி விளங்க நினைக்கும் அன்புடையவர் பலரும் அரிச்சந்திர மகாராஜரையும், கற்பிலக்கணத்தைக் கற்றுக்கொள்ள நினைக்கும் குணவதிகள் பலரும் சந்திரமதீ தேவியையும், பெற்றோருக்குக் கீழ்ப்படிந்து நடக்க விரும்பும் புத்திரர்கள் பலரும் லோகிதாஸ்யனையும் வழிகாட்டிகளாய்க் கொண்டு இந்த இருநிலத்தில் சிறந்து பொலியும் வண்ணம் சருவேசுவரனைச் சதா பிரார்த்திக்கின்றோம்.

[மங்களம்]

"வையம் நீடுக; மாமழை மன்னுக;
மெய் விளம்பிய அன்பர் விளங்குக;
சைவநன்னெறி தான்றழைத் தோங்குக;
தெய்வவெண்டிரு நீறு சிறக்கவே."

மங்களம்! மங்களம்!! மங்களம்!!

முற்றிற்று.